# காதலி

அன்டோன் செகாவ்

[டால்ஸ்டாயின் விமர்சனத்துடன் கூடியது.]






மொழிபெயர்த்தது:

டி. என். ராமச்சந்திரன்






இமயப் பதிப்பகம்

நாகப்பட்டினம்

# முன்னுரை

அன்டோன் பாவ்லோவிச் செகாவ், பலசரக்குக் கடைக்காரர் குடும்பத்தில் 1860-ம் ஆண்டு பிறந்தார். 1879-ம் வருஷம் டாகன்ராக் ஜிம்னேஷியத்தில் பட்டதாரியானார். பின் மாஸ்கோ சர்வகலாசாலையில் வைத்தியப் படிப்புக்காகச் சேர்ந்து படித்தார். 1884-ம் ஆண்டில் தன் சர்வகலாசாலைப் படிப்பை முடித்து வைத்தியத் தொழிலில் இறங்கினார். இவர் டாக்டராகயிருந்த சில வருஷங்களிலேயே தனது வாழ்க்கையை வைத்தியத் தொழிலில் ஈடுபடுத்துவதா அன்றி கலாஞானத்திற்காக பாடுபடுவதா என்று எண்ணி எண்ணிப்பார்த்தார். இறுதியாக இவர் எழுதும் தொழிலையே விருப்போடு ஏற்றுக்கொண்டார்.

செகாவ், பல வருஷ காலம் க்ஷய நோயால் பீடிக்கப் பட்டு கிரீமியாவைச் சேர்ந்த யால்டாவில் வசித்துவந்தார் 1904-ம் ஆண்டில் இவர் உடல்நிலை மோசமாகிவிட்டது. இவர் விசேஷ வைத்திய சிகிச்சைக்காக ஸ்வார்ஸ்வால்ட்டுக்கு அனுப்பப்பட்டிருந்தார். அங்கு 1904-ம் ஆண்டு ஜூலை மீ 15உ இறந்துபோனார். அவர் சடலம், மாஸ்கோவுக்கு எடுத்துச் செல்லப்பட்டு, அங்கோர் மடாலயத்தின் கல்லறையில் அடக்கம் செய்யப்பட்டது.

செகாவ், மாணவராக இருந்த காலத்தில், விகடப் பத்திரிகைகளுக்கு கட்டுரை எழுதினார்.

வாலிபத் துடுக்கின் விகடக் கட்டுரைகளிலிருந்து, வ[illegible] வா, விறுவிறுப்பு நிறைந்த, வாழ்வின் உண்மை நிலையி[illegible] சித்தரிக்கும் சிறுகதை எழுத்தாளராக மாறி நூற்றுக்கண[illegible] கான கதைகளை எழுதியுள்ளார். இவரது சிறுகதைகள் வெகுவிரைவாக பத்திரிகை உலகில் பாராட்டப்பட்டு, பொது மக்களிடையே செல்வாக்குப்பெற்றது. இவர் ரஷ்ய எழு[illegible]

தாளராக மட்டுமல்லாது — ஐரோப்பாவிலும் அமெரிக்கா விலும் சிறந்த எழுத்தாளரென்ற நற்பெயரையடைந்தார்.

இவர் பதினெட்டு, பத்தொன்பதாம் நூற்றுண்டுகளில் ரஷ்ய மக்கள் வாழ்ந்த பரிதாபகர வாழ்க்கையை நுணுக்க மாக சித்தரித்துக் காட்டினூர். படித்த வகுப்பார்களிடையே யிருந்த குழப்பமும், நம்பிக்கையுமற்ற நிலையினையும்; நில பிரபுக்களிடையே நிலவிய வீண் வியர்த்தமான, சீர்கேடான வாழ்வினையும்; பணக்கார வர்க்கத்தாரிடையே நிலவிய அற்பத்தனமும், கண்ணியமற்றதுமான வாழ்வினையும்; ஏழ் மையே குடிகொண்டிருந்த உழவர்களிடம் ஊறிக்கிடந்த அறியாமையையும், இழிந்த வாழ்வினையையும் மொத்தத் தில் ஜார் அரசாங்கத்தின் கேவல ஆட்சியால், மனித சமுதாயம் பட்ட அத்தனை அவஸ்தைகளையும் செகாவ் மிக வன்மையாக, சீரிய வகையில் எடுத்துக்காட்டினூர்.

" அழுகி, நாறி, குத்துயிரும் குலை உயிருமாக செத்து மடிந்துகொண்டிருந்த வாழ்வின்மீது, மனித சமுதாயமே அருவெறுப்புக்கொள்ளும்படி புதிய எழுச்சிமிக்க விழிப் பினை " செகாவின் சிறுகதைகள் உண்டாக்கி, மகத்தான காரியங்களை சாதிக்க அனுசரணையாகயிருக்கிறதென்று, செகாவுக்கு எழுதிய கடிதமொன்றில் மாக்ஸிம் கார்க்கி புகழுரை கூறியுள்ளார். மற்றும் " மகத்துவமிக்க வாழ்வு பெரிது — அதன்மீது அன்பும், உறுதியும் கொள்ளவேண்டு மென்ற — மிக மாண்புமிக்க பயனுள்ள தத்துவத்தை செகாவ் தனது கதைகள் மூலம் உணர்த்தியுள்ளார் " என கார்க்கி எழுதியிருக்கிறூர்.

மனிதனுடைய ஆக்க சக்தியிலும் அவனுடைய ஆற்ற லிலும் செகாவ் அபார நம்பிக்கை வைத்திருந்தார். அதற்கு எடுத்துக்காட்டாக செகாவ் எழுதியுள்ளதை கீழே வாசி யுங்கள்.

"ஒரு மனிதனுக்குத் தேவை மூன்று கெஜ நிலந்தான் என்ற வழக்கச்சொல் யாவரும் அறிந்ததே. ஆனூல் அந்த மூன்று கெஜம் இறந்த மனிதனுக்குத்தான் தேவை. வாழும் மனிதனுக்கு மூன்று கெஜ நிலமல்ல, மாவட்டமல்ல, மாநில

மல்ல, உலகமே அவனுக்கு வேண்டும். அதிலுள்ள அத்தனை இயற்கை வளங்களும் அவனுக்கு வேண்டும். அவன் ஆக்க சக்தியோடு பரிணமித்து இன்புற்றுவாழ அத்தனை வளமும் வேண்டும்''

செகாவ் எழுதியுள்ள நாடகங்கள் ரஷ்யக் கலைக்கு மகோன்னதத்தை யளித்திருக்கிறன. ரஷ்ய நாடக—உலக மட்டுமல்லாது, வெளிஉலகிலும் அவரது நாடகங்கள் புகழப் படுகின்றன. அவரது குறிப்பிடத்தகுந்த சில நாடகங்கள் வருமாறு: "ஸீகல்", "வன்யா மாமா", "மூன்று சகோதரிகள்", "செர்ரி தோட்டம்" முதலியன.

சிறுகதை ஆசிரியர் உலகில் அன்டோன் செகாவ் ரஷ்ய மாப்பஸான் என்றழைக்கப்படுகிறார் – ஆனால் செகாவும், மாப்பஸானும் மனித வாழ்க்கையின் – நடவடிக்கைகளுக் கான காரண காரியங்களை ஆராய்ந்து அறியும் அபாரத் திற னுடையவர்களேயானாலும், தங்கள் தங்கள் கருத்துக்களை எடுத்துக் காட்டுவதில் வேறுபட்டுவிட்டார்கள். மாப்பஸான் எதையும் அப்பட்டமாகச் சொல்லிவிடுவார். யாருடைய விருப்பு வெறுப்பையும் அவர் பொருட்படுத்தியதில்லை. ஆனால் ரஷ்யப் பேராசிரியரோ தன் ஆழ்ந்த கருத்துக்களை நளினமாக அனுதாப உணர்ச்சியோடு எடுத்துச் சொல்கிறார்.

"காதலி" என்ற கதையை மாப்பஸான் எழுதியிருப் பாரேயானால், காதலி தன் முதல் இரு கணவர்களை மறந்து வாழ்வதைக் கண்டித்து கேவலப்படுத்தியிருப்பார். ஆனால் செகாவோ, கதாபாத்திரத்தோடு மிக நெருங்கி, தொடர்ந்து இணைந்து, வாழ்க்கையின் குறைநிறைகளை அழகாக அம்பலப் படுத்துகிறார்.

எப்பொருள் யார் யார் வாய் கேட்பினும், உலக சிறு கதை மேதைகளில் தலைசிறந்தவரான அன்டோன் செகா வின் கதைகளின் கருத்துரைகளிலும் மெய்ப்பொருள் காண் பார்களாக.

நாகை,
1—7—51.

தோ. ந. வீரராகவன்,
இமயப் பதிப்பகம்

பொருளடக்கம்








# காதலி



ரிடையர்ட் காலேஜ் அசெஸரான பிளிமன்னிகாவின் மகள் ஓலன்கா தன்னையே மறந்து வீட்டின் பின்புற முற்றத்தில் உட்கார்ந்துகொண்டிருந்தாள். மாலைப்பொழுது. சூரியன் விரைவில் மறைந்துகொண்டிருந்தான். அந்த அந்திப் பொழுதை நினைப்பதென்றாலே ஆனந்தமயமல்லவா? அப்பொழுதுதான் கிழக்கு வானத்திலே, மேகங்கள் ஒன்று சேர்ந்து ஜில்லென்று குளிர்ந்த காற்றை மெல்ல மெல்ல வீசிக்கொண்டிருந்தது.

அதே வீட்டின் பின்புறத்தில் தங்கியிருந்த 'திவோலி' என்ற திறந்தவெளி தியேட்டரின் மானேஜர் குகின், தோட்டத்தின் நடுவே நின்று ஆகாயத்தை உற்று நோக்கிக்கொண்டிருந்தான்.

"மீண்டும் இன்று மழை பெய்யப்போகின்றது. என் பிழைப்பைக் கெடுக்கவே மழை தினசரி பெய்துகொண்டிருக்கிறது. ஒரு நாளைக்கு எவ்வளவு நஷ்டம்! ஆம், நாள்தோறும் நஷ்டமென்றால் நான் தூக்கிட்டுக்கொள்ள வேண்டியதுதான்" என்றான் அவன்.

அவன் மேலும் ஓலன்காவிடம் சொன்னான்.

"எங்களுடைய வாழ்க்கையே இப்படித்தான் நினைத்துப் பார்த்தாலே ஆத்திரமும் அழுகையும் வருகிறது. முடிந்த வரையிலும் இரவு பகல் பாராமல், தூங்காமலும் பாடுபடுகிறோம். நன்மையை செய்வதற்காகவென்று சதா சிந்தனை செய்து செய்து, அலுத்துப் போகிறோம். இதற்கெல்லாம் கைம்மாறு என்ன தெரியுமா? முதலில் சொல்ல வேண்டுமென்றால் ஜனங்கள் முட்டாள்களாகவும் காட்டுமிராண்டி

களாகவும் இன்னமும் இருக்கிறார்கள் என்பதுதான். நான் என்னால் முடிந்தவரை மிகச்சிறந்த நாடகங்களையே நடத்தி வருகிறேன். அத்தனையிலும் உயரிய சிந்தனைக்கருத்துக்கள்; சிறந்த சங்கீதங்கள்; அதோடு மிகச்சிறந்த நடிகர்களின் உன்னத நடிப்பு. ஆனால் இவற்றை பொதுஜனங்கள் விரும்பு கின்றார்களா? இல்லவே இல்லை. அவர்களுக்கு வேண்டிய தெல்லாம் கோமாளிக்கூத்தும், ஆபாசமான விஷயங்களுமே யாகும். போதாக்குறைக்கு இயற்கையின் கொடுமையைப் பார்! சொல்லிவைத்ததுமாதிரி, ஒவ்வொரு நாள் மாலையும் மழை பெய்கிறது. மே-மீ 10-ந் தேதி மழை ஆரம்பித்து, ஜூன் மாதமாகியும் மழை விட்டபாடில்லை. என்ன கொடுமை! பொது ஜனங்களோ நாடகத்திற்கு வரமாட்டே னென்கிறார்கள்; ஆனால் நானோ நடிகர்களுக்கு பணம் கொடுத் துத்தீரவேண்டும்; வாடகையும் கட்டித்தீரவேண்டும்; வரியும் செலுத்தியாகவேண்டும்."

அடுத்த நாள் அந்திப்பொழுதிலும் மேகங்கள் சூழ ஆரம்பித்தது. குகின் ஏளனப் புன்னகையோடு, "மழையே —பெய்! என் கொட்டகையையே வெள்ளக்காடாக்கு! என்னை யும் நாசமாக்கிவிடு. இவ்வுலகிலும், அடுத்த உலகிலும் என்னை கடைத்தேராமல் செய்! நடிகர்கள் என்னை நொந்து சபிக் கட்டும்; கடன் கொடுத்தவர்கள் என்னை சிறைக்கும்—சைபீரி யாவுக்கும்—தூக்குமேடைக்கும் அனுப்பட்டும்! ஆ! ஹ ஹா ......ஹா!" என்றான்.

அதற்கு அடுத்த நாளும் இதேமாதிரிதான்.

ஒலன்கா, இத்தனையையும் பொறுமையோடு கேட்டுக் கேட்டு மனமுருகலானாள். சில சமயங்களில் அவள் இதயம் கசிந்து, கண் கலங்கினாள். கடைசியாக அவனின் துரதிர்ஷ் டங்கள் அவளை மனமிளகும்படி செய்து, அவனை காதலிக்கச் செய்தது.

அவன் மெலிந்த ஒற்றைநாடியானவன். மஞ்சள் நிற முகமும், சுருண்ட கிராப்புமுடையவன். அவன் பேச்சில் ஒரு நளினமிருந்தது. அவன் பேசும்பொழுது அவன் முகத்

தில் ஒரு தனி வசீகரத்தோற்றம் காணப்பட்டது. அதோடு அவனது வாழ்க்கையே, அவளை வசீகரிக்கவும் உள்ளன் போடு நேசிக்கவும் செய்தது.

அவளுக்கு இயற்கையாக பிறர்மீது அன்பு இருந்தது. அவளுடைய குழந்தைப்பருவத்தில், பெற்ற தந்தையை நேசித்தாள். அத்தந்தை, வீட்டின் ஓர் அறையில், உயிருக்கு மன்றுடி மேல் மூச்சு கீழ் மூச்சு விட்டுக்கொண்டிருந்தார். பின் அவள் தன் அத்தையை நேசித்தாள். அந்த அத்தையோ பிரியான்ஸ்கிலிருந்து வருஷந்தோறும் வந்து போவது வழக்கம். அதற்குமுன் அவள் பள்ளிப்பெண்ணுக இருந்தபோது பிரஞ்சு ஆசிரியரை நேசித்தாள்.

ஒலன்கா இளகிய மனமுடையவள்; களினமானவள்; கபடமற்ற மான் போன்ற கண்களையுடையவள்; வசீகர தேகக்கட்டுடையவள்.

அவளுடைய சிவந்த கன்னங்களையும், ஒரு சிறு கருத்த மச்சத்தோடு கூடிய மென்மையான அழகிய கழுத்தையும் பார்ப்போர் பரவசமாகிவிடுவார்கள். அவள் ஏதேனும் மகிழ்ச்சிக்குரியவற்றை கேட்கவோ, சிரிக்கவோ தலைப்பட்டால் அவள் முகத்தில் தோன்றும் புன்னகையை காணும் ஆடவர்கள் மதிமயங்கி பல் இளிப்பார்கள்; பெண்களோ, அவள் கையைப்பிடித்து "என் கண்ணே" என்று கொஞ்ச ஆரம்பித்துவிடுவார்கள்.

அவள் வசித்த வீடு புராதனமானது. தந்தையாரால் கொடுக்கப்பட்டது. தியேட்டர் திவோலிக்கு அருகாமையிலுள்ளது. மாலை நேரங்களிலும் இராக்காலங்களிலும் தியேட்டரிலிருந்து அவள் காதுகளிலொலித்த சங்கீதங்கள் அவளுக்கு துன்பத்தையும் இன்பத்தையும் கொடுத்தன. பொருப்பற்ற பொது ஜனங்களிடையே அவர் நாடகமாடுகிருரே என்ற கவலையால் துன்பமும், அவளுடைய இருதயத்தில் ஒரு இனியஉணர்ச்சி ஊற்றெடுத்துக்கொண்டிருந்ததால் இன்பமும் ஏற்பட்டன. அவளுக்கு படுக்கையில் படுத்தால் தூங்கவேண்டுமென்ற விருப்பம் ஏற்படுவதில்லை. அவன்

விடியற்காலையில் திரும்பி வரும்போது அவள் படுக்கையறையின் ஜன்னலை லேசாகத் திறந்து அவளின் முகத்தையும் ஒருபுறத் தோளையும், படுதாவுக்கு வெளியே நீட்டி—ஒரு நட்புணர்ச்சி புன்னகையை வாரி வீசுவாள்.

ஒரு நாள் அவன் அவளிடம் தன் கருத்தை வெளியிட்டான். அவ்வளவுதான்! இருவரும் கணவன் மனைவியானார்கள்.

அவன் அவளோடு ஒன்றாகி, அவளுடைய அழகிய தோளையும்—கழுத்தையும் கட்டிப்பிடித்து 'காதலியே! என் கண்ணே! மாசறு பொன்னே! கட்டிக்கரும்பே! தேனே! மானே!' என்றான்.

அவன் விவாக தினத்தன்றும் மழை பொழிந்தது. அவன் அன்று மகிழ்ச்சிப்பெருக்கிலிருந்தான். என்றாலும் அவன் முகக்குறிப்பில் ஒருமாதிரி கலக்கமிருந்தது.

அவர்கள் இருவரும் சேர்ந்து இனிதே குடும்பத்தை நடத்தினர். அவள், அவனுடைய காரியாலயத்தில் உட்கார்ந்து தியேட்டரின் கணக்கு வழக்குகளையும், சிப்பந்திகளின் சம்பள பட்டுவாடா விஷயங்களையும் கவனித்து வந்தாள். அவளுடைய செவ்விதழும், கன்னங்களும் இனிய மந்தமாருத புன்னகைகளும் காரியாலய அறை, இளைப்பாறும் ஒய்யார இடங்கள், நாடக சீன்களின் பின்புறங்கள் ஆகிய இடங்களில் தோற்றமளித்தன. இக்காலங்களில் வாழ்க்கைக்கே பிரதானம் நாடகக்கலையென்றும், நாடகரசனை இல்லாவிட்டால் வாழ்க்கையிலேயே உண்மையான சந்தோஷத்திற்கு வழி வகையில்லையென்றும், உயரிய கலாச்சார நாகரிக பண்பாட்டுக்கு நாடகமே பிரதானமென்றும் அவளுக்கு வேண்டியவர்களிட மெல்லாம் சொல்லி வந்தாள். "இந்த உண்மையை பொதுமக்கள் உணர்ந்திருக்கிறார்களா?" என்ற கேள்வியை போட்டுக்கொண்டு, "அவர்களுக்கு வேண்டியதெல்லாம் கேவலமான கோமாளிக்கூத்துதான்" என்பாள். "நேற்று நாங்கள் 'உள்ளிருந்து வெளியே' என்ற நாடகத்தை நடத்தினோம். தியேட்டரில் எல்லா வகுப்புகளும்

காலியாக இருந்தன. ஆனால் 'வனிகாவும் நானும்' கொஞ்சம் ஆபாஸமாக நடிப்பதென்று முடிவு செய்து விட்டாலோ, தியேட்டரிலே இடமில்லாத அளவுக்கு கூட்டம் கூடிவிடும். இது எனக்குத் தெரியும். இருந்தாலும் 'வனிகாவும் நானும்' 'நரகத்தில் எமன்' என்ற நாடகம் நடத்துகிறோம். அவசியம் வந்து பாருங்கள்'', என்பாள்.

இவள் சொல்வதனைத்தும் குகின் தியேட்டரைப்பற்றியும் நடிப்பைப்பற்றியும் என்ன சொன்னாே அதுவேதான். அவனைப்போலவே அவளும் பொதுஜனங்களை விஷயஞான மற்றவர்களென்றும், உயரிய கலையை பொதுஜனங்கள் ரசிக்கவில்லையென்றும் குறை கூறிவந்தாள். இவள் நடிகர்களின் நடிப்பிலும் நல்வாழ்விலும் அக்கரை செலுத்தினாள். நடிகர்களைப்பற்றி ஏதேனும் புகாரோ, அவதூறோ பத்திரிகைகளில் வெளியாகிவிட்டால், அவள் நேரே பத்திரிகாசிரியரிடம் சென்று தவறைத் திருத்தமுற்படுவாள். அநியாயமான அவதூறுகள் வெளியாவதைக்கண்டால் உண்மையிலேயே இவள் மனம் கலங்கி கண்ணீர் கசிந்துவிடுவாள்.

நடிகர்களோ அவள்மீது அன்பு கொண்டிருந்தார்கள். அவளை "வனிகாவும் நானும்'' "அந்தப்பிரியை'' என்றழைத்து வந்தார்கள். அவளோ நடிகர்கள்மீது அன்பு கொண்டு சிறுசிறு பணஉதவி செய்து வந்தாள். அந்தப் பணத்தை அவர்கள் மோசம்செய்துவிட்டாலோ, யாருக்கும் தெரியாமல் அவள் வருத்தப்பட்டு கண்ணீர் உகுப்பாள். ஆனால் இவ்விஷயத்தை தன் கணவரிடம்கூட சொல்லமாட்டாள்.

அவர்கள் மாரிக்காலத்தையும் இன்பமாகக் கழித்தார்சள். அவர்கள் நகரத்திலுள்ள தியேட்டரை, மாரிக்காலம் பூராவிற்கும் வாடகைக்கு அமர்த்தியிருந்தும் குறுகிய காலங்களுக்கு ரஷ்ய கம்பெனிக்காரர்களிடமோ, ஜாலவித்தைக்காரர்களிடமோ அல்லது உள்ளூர் நடிகர் கழகத்தார்களிடமோ வாடகைக்கு விட்டுவிட்டார்கள். ஒலன்கா நாளுக்கு நாள், பெருத்த மகிழ்ச்சிப்பெருக்கில் பெருத்து பிரகாசிக்கலானாள்.

ஆனால் பொதுவாக நாடகக் கம்பெனிக்கு மாரிக்காலத்தில் நஷ்டமில்லாவிட்டாலும், குகின் நாடகத் தொழிலின் மொத்த நஷ்டத்தை நினைத்து நினைத்து மெலிந்து உருமாறி வந்தான். அவன் இராக்காலங்களில் இரும ஆரம்பித்தான். அவள் அவனுக்காக சூடான ராஸ்பெரி தேயிலை அல்லது எலுமிச் சம் பூ ஷர்பத் கொடுத்து ஒடிகொலோன் தடவி அவளு டைய மிருதுவான, கதகதப்பான போர்வையால் அணைத்துக் கொள்வாள். அவள் அவனுடைய தலையைக் கோதி, மிக்க உள்ளன்போடு, “என் பிராணேசா! என் இன்னுயிரே!” என்பாள்.

லென்ட் காலத்தில், அவண் நடிகர்களை சேர்ப்பதற்காக மாஸ்கோ போயிருந்தான். அந்தக்காலத்தில் அவனில்லாமல் அவளால் தூங்கமுடியவில்லை. இரவு முழுதும் ஜன்னலில் உட்கார்ந்து நக்ஷத்திரங்களின் சலனங்களை கவனித்துவரு வாள். பேடை இல்லாத பறவை இரவு முழுதும் விழித்து பரிதவிப்பது போல, தன் நிலைமை இருக்கிறதென்று ஒப்பிட்டுக்கொள்வாள்.

குகின், மாஸ்கோவில் தாமதிக்க நேரிட்டது. அவன் ஈஸ்டரில் திரும்பிவந்துவிடுவதாகவும், ‘திவோலி’ யை கவனித்துக்கொள்ளும்படியாகவும் தன் காதலிக்குக் கடிதம் எழுதியிருந்தான். ஆனால் ஈஸ்டருக்கு முந்திய மாலை, கதவை யாரோ ‘தடார்...... தடார்......’ என்று தட்டும் சப்தம் கேட்டது. தூங்கிவழியும் வேலைக்காரி, கதவைத் திறக்க வெறுங்காலோடு ஓடினாள். அப்போது “உங்களுக்கு தந்தி ஒன்று வந்திருக்கிறது, கதவைத் திறவுங்கள்” என்று வெளியிலிருந்து பரபரப்போடு சப்தம் வந்தது.

இதற்குமுன்பும் அவளுக்கு தந்திகள் தன் கணவனிட மிருந்து வந்திருக்கிறது. ஆனால் ஏதோ சிலகாரணத்தால், அன்று அவளுக்கே பீதியால் குழப்பமேற்பட்டது. அவள் தந்தியை கை நடுக்கத்தோடு கிழித்து கீழ்க்கண்டவற்றை கவனித்தாள்.

“ஈவான் பெட்ரோவிச் இன்று திடீரென்று இறந்து

விட்டார். வீட்டியார் தகவலுக்காக காத்திருக்கிறோம். தக தகனம் செவ்வாய்க்கிழமை."

'வீட்டியார்', 'தகதகனம்' ஆகிய தெளிவற்ற வார்த்தைகளுடன் தந்தியின் வாசகம் இருந்தது. அதில் கம்பெனியின் நிர்வாக மானேஜர் கையெழுத்திட்டிருந்தார்:

"என் காதலரே! என் கண்ணே!! என் செல்வமே!!! என் கண்ணின் கருமணியே!!!! நான் தங்களையேன் சந்தித்தேன்? தங்களை ஏன் காதலித்தேன்? தாங்களில்லாமல் நான் தனித்து நின்று ஏங்கித்தவிக்கிறேனே" என்று சொல்லிச் சொல்லி கதறினாள்.

குகினின் தகனம் மாஸ்கோவில் செவ்வாய்க்கிழமை நடந்தேறியது. ஒலன்கா புதன்கிழமை திரும்பிவிட்டாள். அவள் வீடுவந்தடைந்ததும் படுக்கையில் படுத்துப்புரண்டு கதறலானாள். அவளது பரிதாபமான அழுகை அடுத்த வீட்டிற்கும் தெருவிற்கும் தெளிவாகக் கேட்டது. தெருவில் போகிறவர்கள், வருகிறவர்கள் 'பாபம்' 'பரிதாபம்' 'அவள் எப்படித்தான் தனித்துவாழ்வாள்' என்று சொல்லி அனுதாபப்பட்டார்கள்.

எனினும் நாட்களும், மாதங்களும் சென்றன. மூன்று மாதங்களுக்குப்பின் ஒருநாள், மாதா கோவிலின் பிரார்த்தனை முடிந்து, கவலையோடும் ஆருத்துயரோடும் ஒலன்கா வீட்டிற்குத் திரும்பிவந்தாள். அதேசமயம் அவளைப் பின் தொடர்ந்தாற்போல் புஸ்தோவொலாவ் மாதா கோவிலிலிருந்து திரும்பிவரும்படி நேரிட்டது. அவன் ஒரு மர வியாபாரியின் மானேஜர். அவன் சாதாரண வைக்கோல் தொப்பியையும், வெள்ளை வெயிஸ்ட் கோட்டையும், தங்க கடிகார சங்கிலியையும் அணிந்திருந்தான். அவன் இயற்கையாக வியாபார சம்பந்தபட்டவனாகக் காணப்படவேண்டியதைவிட ஒரு அசல் பட்டிக்காட்டானாகக் காணப்பட்டான்.

அவன் "எல்லாம் விதிப்படியே நடக்கிறது. நமக்கு வேண்டியவர்கள் யாராவது இறந்துவிட்டால் அது கடவுளுடைய சித்தம் என்று கொள்ளவேண்டும். ஆண்டவ

னுடைய விருப்பமே அப்படியிருக்கும்பொழுது, நாம் அதை பொறுத்துக்கொள்ளவேண்டும். ஆண்டவனுடைய விருப்பத்திற்குக் கீழ்ப்படிவதைத்தவிர நமக்கு வேறு வழியில்லை'' என்று மிக்க அனுதாபத்தோடு ஒலன்காவிடம் சொன்னான். அவன் கடைசியாக வீட்டண்டை நெருங்கியதும் அவளுக்கு வணக்கத்தைத் தெரிவித்து விடை பெற்றுக்கொண்டான். இதற்குப்பின் அவன் மெதுமெதுவாக அவளுக்களித்த ஆறுதல மொழிகளனைத்தும் அவள் காதுகளில் கணீர் கணீர் என்று எதிரொலிக்கலாயின. நாளடைவில் அவன் உருவம் அவளைக்கவர்ந்தது. அவள் தன் கண்களை மூடி, தன் சிந்தனையை மாற்றமுயன்றாள். ஆனால் அவனின் கருந்தாடி உருவம் அவளுக்கு மனோகரக் காட்சியளித்தது. அதனால் அவள், அவனைப்பற்றிய ஒரு எண்ணத்தை மனதில் கொள்ளலானாள்.

ஒருநாள் மாலை அவளுக்கு வேண்டிய ஒருவயது சென்றவள், அவளோடு காப்பிக் குடிக்க வந்திருந்தாள். வந்தவள் புஸ்தோவொலாவைப் பற்றி நல்லவனென்றும், நம்பக்கூடியவனென்றும் எந்தப் பெண்ணுமே அவனைக் கல்யாணம் செய்து கொள்ள இயற்கையாகவே விரும்புவாளென்றும் சொன்னாள். இச்சமபவத்திற்கு மூன்றும் நாள், புஸ்தோவொலாவ், ஒலன்கா வீட்டிற்கு வந்தான். அவன் வந்து அங்கு பத்து நிமிஷங்கள்கூட தங்கவில்லை. அவளிடம் அதிகமாகவும் பேசவில்லை. ஆனால் அவன் திரும்பிச்சென்றதும் ஒலன்கா அவனை காதலிக்கலானாள். அதே காதல் ஏக்கத்தால் அன்றிரவு பூராவும் அவள் தூங்கவில்லை. அதனால் ஜுரம் வந்துவிட்டது.

அவள், மறுநாள் காலை அந்த வயதானவளுக்கு ஆளை அனுப்பினாள். அந்த வயதானவள் மூலம் காலக்கிரமத்தில் கல்யாண ஏற்பாடெல்லாம் நிச்சயமாகி, கல்யாணமும் முடிந்தது. பின் புஸ்தோவொலாவும், ஒலன்காவும் சதிபதிகளாக இன்புற்று வாழ்ந்தனர்.

அவன் வழக்கமாக பகல் சாப்பாட்டு நேரம் வரையில் ஆபீஸிலேயே உட்கார்ந்திருப்பான். அதற்குப்பின் வெளியே

போய்வருவான். அவன் ஆபீஸிலில்லாதசமயம், அவள், அவனிடத்தில் உட்கார்ந்து கணக்கு வழக்குகளைப் பார்த்து வந்த வியாபாரத்தை கவனித்து நடத்திவந்தாள்.

"வருஷா வருஷம் தேக்கின் விலை விஷம்போல் ஏறி வருகிறது. இப்பொழுது இருபது சத விகிதம் விலையேறிப் போய்விட்டது" என்று வாடிக்கைக் காரர்களிடமும், தன் சிநேகிதர்களிடமும் சொல்வாள்.

"நாங்கள் முன்பெல்லாம் உள்ளூர் சரக்கையே கொள் முதல் செய்து விற்பனை செய்துவந்தோம். ஆம்! இப்பொழு தெல்லாம் புஸ்தோவொலாவ் தேக்குமர கொள்முதலுக்காக மோகிலா ஜில்லா சென்று வருகிறார். அதனால் அபார செல வேற்படுகிறது" என்று சொல்லி கன்னங்களை கையால் மூடிக்கொண்டு "அப்பப்பா! சர்க்காரின் அநியாய வரிச்சுமை வேறு! எதற்கெடுத்தாலும் வரிதானா?" என்றும் சொல்வாள்.

அவள் மர வியாபாரத்திலேயே பலகாலம் வேரூன்றிப் போனவள்மாதிரி அவளுக்கே தோன்றியது. வாழ்க்கையின் அத்யாவஸ்யத்திற்கு தேக்கு மரங்கள் இன்றியமையாதவை என்று கருதலானாள். மரம், தூண், வாரை, லாத்து ஆகிய வார்த்தைகளே அவளுக்கு களிப்பும் இன்பமுமூட்டலாயின. அவள் அயர்ந்து நன்றாக தூங்கும்பொழுதுகூட மலைமலையாக, 'வாகன்' களில் தேக்கு மரங்கள் வந்திறங்குவதாக கனவு காண்பாள். ஒருசமயம் அவளுடைய மரவாடியிலிருந்து 40-அடி நீளமான தேக்கஞ் சக்கைகள் நடந்து வெளியேறு வதுபோலும்; கட்டைகளும், பலகைகளும், சக்கைகளும் ஒன்றோடொன்று முட்டி மோதிக்கொண்டு, மீண்டும் அவைகள் தனித்தனி குவியல்களாக சேர்வது போலும் அவள் கனவு கண்டாள். இதைக்கண்டு பயந்து தூக்கத்தில் உளறலானாள். புஸ்தோவொலாவ், "என் கண்ணே! காதலியே! என்ன சமாச்சாரம்? மாதாவை வேண்டிக்கொள்" என்று சொல்லித் தேற்றினான்.

அவளுடைய கணவனுடைய கருத்துக்களெதுவோ அதுவே அவளுடைய கருத்துக்களாகிவிட்டன. அவனுக்கு

அவனிருக்கிற அறை உஷ்ணமாகக் காணப்பட்டாலோ, அல்லது தொழில் மந்தம் ஏற்பட்டுவிட்டதாக அவன் நினைத்தாலோ, அவளும் அப்படியே நினைப்பாள். அவள் கணவனுக்கு நாடகங்கள் கேளிக்கைகள் எதுவுமே பிடிப்பதில்லை. விடுமுறை நாட்களில்கூட அவன் வீட்டிலேயே தங்கிவிடுவான். அவளும் அப்படியே உணர்ந்து நடந்துவந்தாள்.

"நீ எப்பொழுது பார்த்தாலும் வீடு அல்லது ஆபீஸிலேயேதானே இருக்கிறாய், கண்ணே! நீ தியேட்டருக்காவது அல்லது சர்க்கஸுக்காவது போகக்கூடாதா?" என்று அவளுக்கு வேண்டிய நண்பர்கள் கேட்பார்கள்.

"எனக்கு வாசிட்க்காவுக்கும் தியேட்டருக்கும் போக நேரமேது?" என்று பொருப்புணர்ச்சியோடு பதில் கூறுவாள். மற்றும் "பொழுதுபோக்குவதற்காகவென்று நாடகத்திற்குத்தானா போகவேண்டும்? தியேட்டர்களினாலெல்லாம் என்ன நன்மையிருக்கிறது? சர்வமும் காலித்தனம்" என்று சொல்வாள்.

சனிக்கிழமைகளில் புஸ்தோவொலாவும் ஒலன்காவும் மாலைப் பிரார்த்தனைக்கும், விடுமுறை நாட்களில் காலைப் பிரார்த்தனைக்கும் போய்வருவது வழக்கம். அவர்கள் ஆலயத்திற்கு போகும்போதும் வரும்போதும், சேர்ந்து சேர்ந்து உல்லாசமாகப் போய்வருவார்கள். அவர்களுடைய வாழ்வில் இனிமையும் குதூகலமும் இருந்தன. அவர்களது வீட்டில் வேண்டிய அளவுக்கு உயர்ந்த சாப்பாடும் கனிவகைகளும் இருந்தன. ஒவ்வொரு நாளும் பகல் 12-மணிக்கு வீட்டில் சூப்பும், இறைச்சியோ அல்லது வாத்துக்கறியோ சமைத்து மஜாவாக இருக்கும். விரதநாட்களில் மீனுணவு இருக்கும். பொதுவாக அவர்கள் வீட்டுப்பக்கம் யார் போனாலும் பசிதானாகவே வந்துவிடும். காரியாலயத்தில் 'ஸாமவார்' (ஸோமபானம்) எப்பொழுதும் கொதித்துக்கொண்டிருக்கும். வாடிக்கைகாரர்களுக்கு தேனீரும் இனிய பிஸ்கத்தும் எப்பொழுதும் கிடைக்கும். வாரம் ஒருமுறை, தம்பதிகள் நீராடப் போய்வருவார்கள். அவர்கள் ஜோடியாகத் திரும்பி வரும்பொழுது கன்னங்கள் சிவப்பேறி இருக்கும்.

"எங்களுக்கு குறையொன்றுமில்லை. அதற்காக ஆண்டவனுக்கு நன்றி செலுத்துகிறோம்" என்று ஒலன்கா தனக்கு வேண்டியவர்களிடம் சொல்வாள். மற்றும் சில சமயங்களில "மிட்ஸ்காவும் என்னையும் போல்" எல்லோரும் இருந்தால் போதும் என்று சொல்வாள்.

ஒருசமயம் புஸ்தோவொலாவ், மரம் வாங்குவதற்காக மோகிலா ஜில்லாவுக்குப் போயிருந்தான். அப்பொழுது அவளுக்கு பீதியேற்பட்டுவிட்டது. இரவெல்லாம் தூக்கமில்லாமல் புலம்பலானுள்.

சிமினின் என்ற ராணுவ மிருக வைத்தியர் மாலை நேரங்களில் ஒலன்காவின் வீட்டுக்கு வருவார். இவர் குடியிருந்த வீடு அவர்களுடையது. இவர் அவளோடு சீட்டாடுவதும், சாதாரணமாக சம்பாஷிப்பதும் வழக்கம். அவள் கணவன் ஊரிலில்லாத சமயங்களில், இவர் நட்பு அவளுக்கு ஆறுதலளித்தது. அதோடு வைத்தியரின் குடும்ப வாழ்க்கையில் இவளுக்கு ஒரு பரிவும் ஏற்பட்டிருந்தது. அவர் கல்யாணமானவர். அவருக்கு ஒரு பையனும் இருந்தான். ஆனல் அவர் தன்னிடம் விஸ்வாசமற்ற தன் மனைவியை விவாகரத்து செய்திருந்தார். அவர் தன் மகனது வளர்ப்பிற்காக, மாதா மாதம் 40-ரூபிள்களை தன் விவாகரத்து மனைவிக்கு அனுப்பி வந்தார். இவ்விஷயங்களைக் கேட்டு அவள் பெருமூச்சுவிட்டு, அவர்மீது இயற்கையாக பரிவு கொள்ளலானுள்.

"கடவுள் தங்களை ரட்சிப்பாராக!" என்று மெழுகுவர்த்தி வெளிச்சத்தோடு, வீட்டின் மெத்தைப்படிகளிலிருந்து இறங்கிவந்து, அவரை வீட்டுக்கு விடைகொடுத்தனுப்பும்பொழுது சொல்வாள். அதற்காக அவரும் மரியாதைக்காக நன்றி செலுத்தி "மாதா ஆரோக்யமாக உன்னை ரட்சிப்பாராக" என்று வந்தனமளிப்பார்.

ஒலன்கா தன் கணவரைப்போல, அந்த ராணுவ வைத்தியரிடம் மரியாதையோடும், கம்பீரத்தோடும் நடந்து வந்தாள். மிருக வைத்தியர் கீழிறங்கி வீட்டுக்குச் செல்லும்போது அவள் மனதில் கீழ்வருமாறு, அவரிடம் சொல்லத் தோன்றும்.

"நீங்கள் உங்கள் மனைவிமீதுள்ள குரோதத்தை மறந்து, நேசமாகுங்கள். உங்கள் பையனுக்காகவாவது அவளைப் பொருத்தருளுங்கள். வருங்காலத்தில் உங்கள் பையன் வளர்ந்து பெரியவனானபின் அவன் என்ன நினைப்பான்?"

அவள் கணவன் புஸ்தோவொலாவ், ஏகாந்தமாக இருக்கும்பொழுது மிருக வைத்தியருடைய பரிதாப வாழ்க்கையைப்பற்றி மெதுமெதுவாக தலையணை மந்திரம் செய்வாள். இருவரும் மனம்தாளாது நீண்ட மூச்சு விடுவார்கள். மற்றும் தந்தையைத் துறந்துள்ள பையனை நினைத்து உருகுவார்கள். இவ் வெண்ணங்களின் தூண்டுதலால், தங்களிருவருக்கும் குழந்தை குட்டிகள் வேண்டுமென்று கோவில்கண்ட இடங்களிலெல்லாம் கடவுளை மண்டியிட்டுப் பிரார்த்திக்க ஆரம்பித்தார்கள்.

புஸ்தோவொலாவ் தம்பதிகள் பூரண அன்போடும் அமைதியோடும் ஆறாண்டுகளை அழகாகக் கழித்தார்கள்.

ஐயோ பரிதாபம்! மாரிக்கால நாளொன்றில், காரியாலயத்திலிருந்து சூடான தேனீரை அருந்தி, மர ஏற்றுமதியை கவனிப்பதற்காக தலையில் தொப்பிபணியாமல் புஸ்தோவொலாவ் 'வாடி'க்குப் போயிருந்தான். அதனால் அவனுக்கு சளிபிடித்து ஜுரமடிக்க ஆரம்பித்தது. எவ்வளவோ சிறந்த வைத்தியர்களைக்கொண்டு சிகிச்சை செய்தும், நாளுக்கு நாள் அவன் நிலமை மோசமாகி கடைசியாக நான்காம் மாதம் உயிர் துறந்தான்.

"என்னைத் தனியே ஏங்கித்தவிக்கவிட்டு போகிறீர்களே" என்று அழுதழுது அவதிப்பட்டாள்.

"தங்களையின்றி நான் தனிமையிலும் துயரத்திலும் வாடிவதங்குகிறேனே" என்று வாய்விட்டுப் புலம்பிப் பரிதவித்தாள்.

ஒலன்கா துக்க அறிகுறியாக கருப்புத்துணிகளை அணியலானாள். தொப்பியையோ கையணிகளையோ அணிவதை நிறுத்திவிட்டாள். மர்தாக் கோவிலுக்கும், கணவனின் கல்லறைக்கும் போவதைத்தவிர அவள் வெளியில் அநேகமாக

எங்கும் போவதில்லை. மொத்தத்தில் அவள் 'பரிசுத்த வாழ்க்கையை நடத்தத் தங்களை அர்ப்பணம் செய்துள்ள பெண்களைப்போல' வாழ நினைத்தாள்.

நாட்கள் வாரங்களாகி, வாரங்கள் மாதங்களாகி ஆறு மாதங்கள் கழிந்தது. பின் அடைப்பட்டுக்கிடந்த வீட்டு ஜன்னல்களையெல்லாம் திறந்துவிட்டாள். தான் அணிந்திருந்த கருப்புத் துணிகளையெல்லாம் அப்புறப்படுத்தினாள். தன் வேலைக்காரியோடு காலை நேரங்களில் சாமான்கள் வாங்க மார்க்கெட்டுக்குச் செல்லலானாள். வீட்டிலேயும் புதுமை ஏற்படலாயிற்று. ராணுவ மிருக வைத்தியரோடு மாலை நேரங்களில் தோட்டங்களில் தேனீர் அருந்தலானாள். மிருக வைத்தியரோ அவளுக்காக தினந்தோறும் பத்திரிகைச் செய்திகளைப் படித்துக்காட்டிவந்தார்.

ஒருநாள் ஓலன்கா தனக்குவேண்டிய சிநேகிதி ஒருத்தியை தபாலாபீஸில் சந்தித்தபொழுது "நம்முடைய நகரத்தில் தகுந்த மிருக சிகிச்சை ஏற்பாடில்லை. எல்லா விதமான வியாதிகட்கும் போதிய கால்நடை வைத்தியம் இல்லாததே காரணம். நமக்கு வினியோகிக்கிற பாலிலிருந்தும், நாம் அருமையாக வளர்க்கும் ஜந்துக்களிலிருந்தும் வியாதிகள் பரவிவிடுகின்றன. மனிதராசிகள் மட்டும் சுகாதாரத்தோடு வாழ வழிவகைகள் செய்யப்பட்டிருக்கின்றன. அதுபோல வீடுகளில் வளர்க்கப்படும் ஜீவஜந்துக்களுக்கும் சௌகர்ய சுகவசதிகள் செய்துதரப்படவேண்டும்" என்று சொல்லலானாள்.

அவள் இப்பொழுது மிருக வைத்தியருடைய கருத்துக்கள் எதுவோ அதனையே தன்னுடைய கருத்தாகச் சொல்லி வந்தாள். அவருக்கு ஏற்பட்டிருந்த கருத்துக்கள்தான் அவளுக்கும் பூரா உரிமையுடையதாக இருந்தது.

அவளால் ஒரு வருஷங்கூட ஏதாவது ஒரு பற்றுதல் இல்லாமல் வாழமுடியவில்லை. அதனால் அவள் வீட்டில் மீண்டும் ஒரு புதுயுகம் தோன்றலாயிற்று. இந்த நடத்தையை வேறு யாராவது செய்திருந்தால் அது கண்டிக்கத்தக்கதாக ஏற்பட்டிருக்கும். ஆனால் ஓலன்கா விஷயத்தில், எல்லாம்

இயற்கையாக நடந்தேறியதாக ஆகியது. ஒலன்காவோ அல்லது மிருக வைத்தியரோ தங்களுக்குள் ஏற்பட்ட புது உறவைக் குறித்து வேறெவரிடமும் பேசாதிருந்தனர். அதோடு அதை மறைத்து வைத்துக்கொள்ளவும் விரும்பினர். ஆனால் எவ்வாறு முடியும்? ஏனெனில், ஒலன்காவிடம் எந்த ரகசியமும் பத்திரமாக இருக்கமுடியாதென்பதாலேயே!

மிருக வைத்தியரை அவரது ராணுவ நண்பர்கள் பார்க்க வருவார்கள். ஒலன்கா அவர்கட்கு தேனீரோ அல்லது சாப்பாடோ பரிமாறுவாள். அப்பொழுது வந்த விருந்தாளிகளுடன் மாட்டு வியாதிகளைப்பற்றியும், நகர சபையாரின் கசாப்புக்கடைகளைப்பற்றியும், ஆடு மாடுகளை கொல்லுவது பற்றியும் பேசித்தீர்த்துவிடுவாள். மிருக வைத்தியருக்கோ இன்னது செய்வதென்று தோன்றாது திகைப்பார். இப்போப்பட்ட ஒருநாள், விருந்தாளிகளெல்லாம் வீட்டுக்குப்போன பிற்பாடு, அவள் கையைப் பிடித்து ஆத்திரத்தோடு "உனக்குத்தெரியாத விஷயங்களைக்குறித்து நீ பேசக்கூடாது என்று சொல்லியிருக்கிறேனே! வைத்தியர்களாகிய நாங்கள் பேசிக்கொண்டிருக்கும்பொழுது, நீ தயவுசெய்து எங்கள் விஷயத்தில் தலையிடாதே. உன்னால் எனக்கு உண்மையாகவே சகிக்கமுடியாத அவமானமாக இருக்கிறது" என்றார்.

இதைக் கேட்டதுமே அவளுக்கு ஆச்சரியமும் திகிலுமேற்பட்டு கலவரத்தோடு "என் பிராணேசரே! வந்தவர்களிடம் வேறு என்னதான் நான் பேசுவேன்?" என்று கேட்டாள். அதோடு கலங்கிய கண்களுடன் அவரைக் கட்டியணைத்து தன்மீது கோபப்படக்கூடாதென்று கெஞ்சலானாள். அதற்குப்பிறகு சொல்லவா வேண்டும்? ஆம்! அவர்கள் இன்புற்று நேசமாய் வாழ்ந்தார்கள். இந்த வாழ்வும் நீடித்து நிற்கவில்லை. ஏனெனில் மிருக வைத்தியருக்கு வேலை மாற்றுதலின் காரணமாக அவர் சைபீரியாவுக்கோ அல்லது வேறு எங்கோ போகநேரிட்டது. இதனால் ஒலன்கா தனிமையானாள்.

ஆம். அவள் இப்பொழுது முற்றிலும் ஏகாங்கியானாள்.

அவளுடைய தகப்பனுரோ நீண்டகாலத்திற்குமுன்பே இறந்துவிட்டார். அவளது தகப்பனர் உபயோகித்த காலொடிந்த நாற்காலியும் தூசி படிந்துகிடந்தது. அவள் நாளுக்கு நாள் மெலியலானுள். அவளைக் காண்போர் அதற்குமுன் அவளைக் கண்டதும் புன்முறுவல் பூத்துவிடுவார்கள். பின் அவளோடு பேசத்துடிப்பார்கள். ஆனல் இப்போதோ அவளோடு யாரும் பேசுவதில்லை. அதுதான் போகிறதென்றுல் அவளைப் பார்த்து ஏதோ குசுகுசுவென்று முணுமுணுக்கலானுர்கள். அவளது பழைய வாழ்வெல்லாம் நனவாகியது. அதோடு அவள் யாரும் கவனிப்பாரற்றவளானுள்.

மாலைக்காலங்களில், வீட்டின் பின்புற முற்றத்தில் உட்கார்ந்திருப்பாள். 'திவோலி' யிலிருந்து சங்கீதமும் பாண்டுகளின் முழக்கமும் வழக்கம்போல் அவள் காதுகளில் கேட்கும். ஆனுல் இக்காலங்களில் அவைகள் அவளின் உணர்ச்சியை தட்டியெழுப்பவில்லை. அவள் சகலத்தையும் எவ்வித பிரேமையுமில்லாமலே பார்த்தாள். அவள் சிந்தனையில் எந்த எண்ணமும் ஓடுவதில்லை. அவள் சிந்திப்பதற்கும் ஏதுமில்லை. இராக்காலங்களில் அவள் படுக்கையில் படுத்துப் புரண்டு தோட்டத்தின் சூன்யத்தையே சூன்யமாக நினைத்தாள். அவளுக்கே உண்பதும் உறங்குவதும் இஷ்டமில்லாதபடி நடந்தது. எல்லாவற்றையும்விட மிகமோசமானதென்னவென்றுல், எந்த அபிப்பிராயமும் எதிலுமில்லை அவளுக்கு. அவள் தனக்கு சுற்றிலுமுள்ள பொருள்களையெல்லாம் கண்கொண்டு பார்த்தாள். ஆனுல் அவைகளைப்பற்றிய கருத்தோ அல்லது சிந்தனையோ அவளுக்கு ஏற்படவில்லை. என்ன பரிதாபம் பாருங்கள்! அவளுக்கென்று எந்த கருத்தும், சலனமும் எதிலுமில்லாமல்போனது.

உதாரணமாக அழகிய புஷ்பங்களையோ, பக்ஷி ஜாதிகளையோ, மழை பொழிவதையோ அல்லது குடியானவன் தானியங்களை வண்டியிலேற்றி ஓட்டும் காட்சியையோ பார்ப்பதாக வைத்துக்கொள்ளுங்கள். அவைகளெல்லாம் என்னவென்றுகூட அவளால் உணரமுடியவில்லையென்றுல் அதனைப் பற்றி நாம் என்ன சொல்வது? அவளிடம் ஓராயிரம் ரூபிளைக்

கொட்டிக்கொடுத்துக்கேட்டாலும் அவளுக்கு எதுவும் பதில் சொல்லத் தெரியாது. அவள் குகிஞேடோ, புஸ்தோ வொலாவோடோ அல்லது மிருக வைத்தியரோடோ இருந்த பொழுது அவள் எதனையும் தெளிவாகச் சொல்லக்கூடிய வளாயிருந்தாள். எதிலும் தன் கருத்து இன்னதென்று வலி யுறுத்துவாள். அனுல் இப்பொழுதோ—வீட்டின் தோட்டம் சூன்யமாக காணப்பட்டதுபோலவே, அவளுடைய இருதயத் திலும், மூளையிலும் சூன்யமே குடிகொண்டுவிட்டது. அவளுக்கு எல்லாமே பாலைவனமாகவும், வெறுப்பாகவும் கசப்பாகவும் காணப்பட்டது.

நாளடைவில் நகரத்தில் மாறுதலேற்பட ஆரம்பித்தது. 'திவோலி', 'மாவாடி' இருந்த இடங்களிலெல்லாம் புதிய சந்துகளும், புதிய கட்டிடங்களும் ஏற்பட ஆரம்பித்தன. காலத்தின் கோலந்தான் என்னே! ஒலன்காவின் வீடுமட்டும் இருளடைய ஆரம்பித்தது. மேங்கூரைகள் துருப்பிடித்து, ஒழுக ஆரம்பித்தன. கொட்டகை ஒருபக்கம் இடிந்து சரிந்து விட்டது. தோட்டமோ, முழுதும் நெரிஞ்சிமுட்புதர்களாக காட்சியளித்தது. ஒலன்காவும் வர வர வயதுமுதிர்ந்தவ ளானுள்.

கோடையில், அவள் வீட்டின் பின்புறம் உட்கார்ந்திருப் பாள். அவளுடைய இருதயமும் மனமும் அப்பொழுது வெறும் சூன்யமேதான். மாரிக்காலத்தில் அவள், தன் ஜன்ன லில் உட்கார்ந்து பனி பொழிவதை கூர்ந்துநோக்கிவந்தாள். குளிர்ந்த இனிய காற்றும், மாதாகோவிலின் மணியோசையும் அவளுக்கு பழைய நினைவுகளை மடமடவென்று தோன்றச் செய்யும். அவளுடைய இருதயம் ஒருமாதிரி படபடப்புக் கொடுக்கும். கண்களோ கண்ணீரைப் பெருக்கும். அதற்குப் பின்னுல் அவள் சர்வசூன்யமாகி அவள் வாழ்க்கையையே சர்வசூன்யமாகக் காண்பாள். அவளுக்குப் பிரியமான கருப்புப் பூனை அவளைத்தீண்டிப் பிராண்டும். ஆனுல் அதன் ஸ்பரிசம் அவளுக்கு எந்த இன்பத்தையும் இப்போது கொடுப்பதில்லை. பூனையின் மெதுவான தீண்டுதல்கள் அவ ளுக்கு வேதனையையளித்தன. "சனியனே! தொலைந்துபோ.

நீ எனக்கு வேண்டாம்" என்று சொல்வாள். அவளுக்குத் தேவை இதுவா? அவளுக்கு வேண்டியதெல்லாம் முழு முதற் காதல். ஆம் அதில் அவள் உடல், உயிர் அத்தனையும் அர்ப்பணம் செய்வாள். கருத்தும் கிளர்ச்சியும், உவகையும் வேகமும் அதில் அன்றோ கிளர்ந்தெழும்.

பொதுவாக நாட்களும், வாரங்களும், வருஷங்களும் ஓடிமறைந்தன. அவள் சந்தோஷத்தையோ சுய உணர்வையோ பெறவில்லை. சமையல்காரி, தன் இஷ்டத்திற்கு சமைத்துப்போட்டது அவளுக்கு சரியென்றாகிவிட்டது.

கோடை ஜூலை மாத நாளொன்று வந்தது. அப்பொழுது. மாடுகள் மேய்ச்சலிலிருந்து, புழுதிப்படலங்களை எழுப்பிக்கொண்டு வீடு நோக்கித் திரும்பிவந்துகொண்டிருந்தன. அச்சமயத்தில் கதவை யாரோ தட்டும் சப்தம் கேட்டது. ஒலன்கா தானே கதவைத் திறக்கப்போனாள். அப்பொழுது மிருக வைத்தியரான சிமிரினின், ராணுவ வைத்திய உடை அணியாமல், சாதாரண உடையில் பழுத்த தலைமயிரோடு காட்சியளித்தார். கண்டதுமே அவளுக்கு தூக்கிவாரிப்போட்டது. அவளுக்கு பழைய நினைவுகள் திரும்ப தானே உதயமாகின. அவள் அவரைக் கண்டதுமே அழுதபடி அவர் மார்பின்மீது சாய்ந்துவிட்டாள். அவள் எப்படித்தான் அவரோடு தேனீர் அருந்த கூடத்திற்குள் வந்தாள் என்பது அவளுக்கே தெரியாது.

சந்தோஷத் துடிதுடிப்பில், "என் அருமை டாக்டரே! எப்படி இங்கு வந்துசேர்ந்தீர்கள்?" என்று கேட்கலானாள்.

"ஒலன்கா! நான் இங்கு தங்கி இனிக் காலங்கழிக்க வந்திருக்கிறேன்; என் வேலையை ராஜிநாமா செய்துவிட்டேன்; இங்கிருந்து இனி பாடுபடவேண்டும்; என்னுடைய மகன் பெரியவனாகிவிட்டான்; அவன் பள்ளிக்குச் செல்லவேண்டிய காலம் வந்துவிட்டது; நான் என் மனைவியோடு இப்பொழுது சமாதானமாகிவிட்டேன்" என்றார்.

"அவள் எங்கே?" என்று கேட்டாள்.

"அவள் பையனோடு ஹோட்டலிலிருக்கிறாள். நான் வீடு பார்ப்பதற்காக வந்தேன்."

"என்னருமை டாக்டரே! வீடா? என் வீட்டையே எடுத்துக்கொள்ளலாமே! இது தங்களுக்குப் பிடிக்க வில்லையா? ...என்ன ஆச்சர்யம்! தாங்கள் எந்த வாடகையுமே கொடுக்கவேண்டியதில்லையே" என்று சொல்லி அழ ஆரம் பித்தாள். ............ "நீங்கள் இங்கேயே இருந்துவிடுங்கள்; எனக்கு கொஞ்சம் இடம் போதும்; நீங்கள் இங்கிருந்தால் நான் எவ்வளவு களிப்புறுவேன்...... ஆ...... டாக்டரே!" என்றாள்.

மறுநாளே வீட்டின் கூரைகள் பழுதுபார்க்கப்பட்டன. சுவர்களுக்கு சுண்ணும்பு அடிக்கப்பட்டது. ஒலன்கா தன் வேலைக்காரர்களுக்கு, தோட்டத்தை அழகுபடுத்த உத்திரவு களை சமர்ப்பிக்கலானாள். அவள் முகத்தில் பழைய ஜீவகளை யோடுகூடிய சிரிப்பேற்பட்டது. நீண்ட தூக்கத்திற்குப்பின், விழித்தெழுந்ததுபோல், சுருசுருப்பும் துடிதுடிப்பும் பெற்றாள்.

மிருக வைத்தியரின் மனைவி மெலிந்தவள். அடர்ந்த தலைமயிருடையவள். கொஞ்சம் கோபப்பார்வையுமுடை யவள். பத்துவயது பையன் சாஷா மொழுமொழுவென்று நீலநிறக் கண்களோடு காட்சியளித்தான். அவன் வீட்டின் தோட்டத்திற்குள் நுழைந்ததுமே, பூனையை விரட்டிப் பிடிக்கப்போனான். அவன் ஒரு சந்தோஷ ஆரவாரம்செய்து, "பெரியம்மா! இது உன் பூனையா?" என்று கேட்டுக் கொண்டே, "அது குட்டி போட்டதும் எங்களுக்கு ஒன்று கொடுத்துவிடுங்கள். அம்மாவுக்கு எலிகளென்றாலே அதைக் கொல்லவேண்டுமென்று நினைப்பாள்" என்றான்.

ஒலன்கா அவனோடு பிரியமாகப் பேசினாள். தேனீர் அருந்தக்கொடுத்தாள். அவள் இதயம் குளிர்ந்தது. அதோடு உள்ளத்தில் அப்பையனை தன் மகனே என்ற இன்ப உணர்ச்சிகொண்டாள். அதனால் அவன் படிப்பதும், விளை யாடுவதும் மற்றும் அவன் செய்யும் அத்தனை காரியங்களும் அவளுக்குப் பேருவகையூட்டியது. அதனால் அவனை அவள் அன்போடு கவனிக்கத்தொடங்கினாள்.

"என் சின்னத்தங்கமே! என்ன கெட்டிக்காரத்தனம்? என்ன சுருசுருப்பு?" என்று சொல்லி வியந்துகொள்வாள்.

அவன் ஒருநாள் "தீவு என்பது நான்கு பக்கங்களாலும் நீர் சூழப்பட்ட பிரதேசம்" என்று உரக்கப் படித்துக்கொண்டிருந்தான்.

"தீவு என்பது நிலப்பிரதேசம்" என்று அவளும் மனப்பாடம்போட ஆரம்பித்தாள். இதுதான் அவளுடைய நீண்ட கால மௌனவாழ்க்கைக்குப்பின் வெளியான உள்ளக் கருத்து. இப்பொழுது அவளுக்கு அனைத்திலும் சிந்தனை செல்ல ஆரம்பித்தது.

அன்று இரவு சாப்பாட்டுக்குப்பின், "ஹைஸ்கூலில் பாடபோதனை மிகக்கஷ்டம். எப்படியிருந்தாலும் சிறுவர்களுக்கு தொழில் படிப்பைவிட, ஹைஸ்கூல் படிப்பு எவ்வளவோ சிலாக்யமானது. ஏனெனில் ஹைஸ்கூல் படிப்பிருந்தால் ஒருவன் பிற்காலத்தில் டாக்டராகவோ அல்லது என்ஜினீயராகவோ ஆகிவிடலாம்" என்று சாஷாவின் பெற்றோர்களிடம் அவள் சொல்லலானாள்.

சாஷா ஹைஸ்கூலுக்கு படிக்கக்கிளம்பிவிட்டான். அவனுடைய தாய் 'ஹார்க்கோ' விலிருந்த அவளுடைய சகோதரியின் வீட்டுக்குப் போனவள் திரும்பிவரவேயில்லை. அவனுடைய தகப்பனார், மாடுகளை பரிசோதனைசெய்வதற்காக வெளியில் கிளம்பிவிடுவார். சேர்ந்தாற்போல் மூன்று நான்கு நாளைக்கு வரவும் மாட்டார். அநேகமாக அவருக்கு வெளிப்பயணமே அதிகமாக இருந்தது.

இந்த நிலையில், சாஷா தன்னந்தனியனுனென்றும், அவனை யாருமே வீட்டில் கவனிக்கவில்லையென்றும், அதனால் அவன் படிப்பில் அவதியுறநேரிட்டுவிடுமென்றும், ஒலன்கா கருதி அவனைத் தன்னோடையே சேர்த்தழைத்துக்கொண்டு வந்து, தன் பக்கத்து சிறு அறை ஒன்றை அவனுக்குக் கொடுத்திருந்தாள்.

சாஷா அவளோடு ஆறு மாதங்கள் இருந்துவிட்டான். ஒவ்வொருநாள் காலையிலும் ஒலன்கா எழுந்ததும் அவ

னுடைய அறையை எட்டிப்பார்ப்பாள். அவன் கன்னத்தில் கையை வைத்து அயர்ந்து தூங்குவான். அவளுக்கு அவனை எழுப்ப வருத்தமாக இருக்கும். ஆனாலும் "சாஷா எழுந்திரடா என் கண்ணே! பள்ளிக்கூடம் போக நேரமாகி விடும்" என்று வருத்தத்தோடும் வாஞ்சையோடும் கூறுவாள். அவன் எழுந்து சட்டைகளை மாட்டிக்கொண்டு பிரார்த்தனை செய்து, காலை ஆகாரத்திற்கு உட்காருவான். காலையில் வெண்ணெயும், ரொட்டியும், பிஸ்கோத்தும், இரண்டு கோப்பை தேனீரும் அருந்துவான். இத்தனையையும் அவன் தூங்கிவழிந்துகொண்டே செய்துவிடுவான்.

எதோ நீண்டப்பயணம் பேகப்புறப்படுகிறவனிடத்தில் பேசுகிறமாதிரி "உன்னுடைய வாலாறு உனக்கு சரியாகத் தெரியாதப்பா" என்பாள் ஒலன்கா.

"உன்னோடு எவ்வளவு சிரமம் பார்; நீ நன்றாகப் படிக்க வேண்டும்; எதிலும் முதன்மையானவனாக இருக்கவேண்டும்; என் கண்ணே! நீ ஆசிரியர்களுக்கெல்லாம் கீழ்ப்படிந்து நடந்து பாடங்களை சற்றுக்கொள்ளவேண்டும்" என்பாள். அதற்கு "ஓ எனக்குத்தெரியும்! என்னை தொந்திரவில்லாமல் விட்டுவிடு—பெரியம்மா!" என்பான்.

புத்தகமூட்டையை சுமந்து, பெரிய தொப்பியை அணிந்து, சிறுவனான சாஷா வீதிவழியே பள்ளிக்குச் செல்வான். ஒலன்கா அவனையறியாமலே சந்தடியின்றி அவனைப் பின்தொடர்ந்து செல்வாள்.

அவன் கொஞ்சதூரம் போனதும், அவனை அழைத்து அவன் கையில் பேரீச்சம்பழத்தையோ அல்லது சாக்லெட்டையோ கொடுப்பாள். ஆனால் அவன் பள்ளிக்கூடத்தை நெருங்கும்போது, ஒரு வயதான பருத்த ஸ்திரீயுடன் வருவதற்கு வெட்கப்படுபவனாகி "பெரியம்மா! நீ வீட்டுக்குப்போ —நான் பள்ளிக்கூடம் போய்விடுவேன்" என்பான்.

அவள் சிலைபோல் அங்கு நின்று பள்ளிக்கூட வாசலில் நுழைந்து அவன் உள்ளேபோய் மறையும் வரை உற்றுக் கவனிப்பாள்.

ஹா! அவள் எவ்வளவு அவனை நேசித்தாள் தெரியுமா? இதற்குமுன் அவள் தன் காதலர்களிடம் கொண்டிருந்த காதலைவிட மிக்க ஆழமாக அவனை நேசித்தாள். அவள் இதயமோ இதற்குமுன் யாரிடமும் பணியாத அளவுக்கு அவனிடம் சரணடைந்துவிட்டது. இத்தனை அபார வாஞ்சையும் பிரீதியும், தாய்மையுள்ளத்தில் கிளர்ந்தெழுந்த இயற்கை உணர்ச்சியால் ஏற்பட்டதாகும்.

சிரித்தால் சிறு குழிவிழும் கன்னத்தோடுகூடிய இச்சிறுவனுக்காக, அவள் தன் வாழ்க்கையையே மிக்க மகிழ்ச்சியோடு அர்ப்பணம்செய்யத் தயாராகிவிட்டாள். இது எதனுல் என்று யாராவது சொல்லமுடியுமா?

சாஷா குடியேறி ஆறு மாதங்களாகிவிட்டன. ஓலன்காவின் வாழ்க்கையில் திருப்தியேற்பட்டது. அவளுடைய முகமும் மலர்ந்தது. சோபிதமுமடைந்தாள். அவளைக் காண்போர் மகிழ்ச்சிப்பெருக்கில் "காலை வந்தனம் ஓலன்கா...... கண்ணே சௌகர்யமா?" என்று விசாரிக்கவும் ஆரம்பித்துவிட்டனர்.

அவள், காய்கறி விற்குமிடங்களில் "ஹைஸ்கூல் படிப்பு இப்பொழுது கெடாக இருக்கிறது" என்பாள். வேறொரு சமயம் "சிறிய வகுப்புகளிலேயே பாடங்களை மனப்பாடம் செய்யச்சொல்லிவிடுகிறுர்கள்; அதோடு லத்தீன் மொழிபெயர்ப்பு; கணக்கு வேறு; இவ்வளவும் சிறு பையன்களுக்கு எப்படி ஒத்துக்கொள்ளும்?" என்பாள். அவள் பிறிதொரு சமயம் பள்ளிக்கூட வகுப்பு உபாத்தியாயர்களைப்பற்றியும், பாடப்புத்தகங்களைப்பற்றியும் சாஷா என்னென்ன சொல்கிறுனே அதையதை அப்படி அப்படியே சொல்லிவிடுவாள்.

அவர்கள் இருவரும் சேர்ந்து மூன்று மணிக்கு பகல் உணவருந்துவார்கள். சாயந்திரம் அவர்கள் இருவருமே பாடங்களை படித்து நெட்டுருப்போடுவார்கள். இரவில் அவனைப் படுக்கவைத்தபிற்பாடு, அவள் நீண்டநேரம் விழித்திருந்து, அவனுக்காக இயேசுவைத் தொழுது, சிலுவை அடையாளக்குறியை மானஸீகமாக அவன்மீது போடுவாள். பின் அவள் படுத்துங்கூட, அவனைப்பற்றியே சிந்தனை செய்

வாள். அவன் படித்துத்தேறி டாக்டராகவோ அன்றி இன்ஜி னீயராகவோ ஆகி, பெரிய பங்களாவில் வசித்து, வாகனாதி களில் சவாரிசெய்து, கல்யாணமாகிக் குழந்தைகுட்டிகளோடு இருக்கவேண்டுமென நினைப்பாள். இப்படி எண்ணிக் கொண்டே அவள் தூங்குவாள். தூக்கத்திலுங்கூட அவனைப் பற்றியே கனவு காண்பாள். கனவில்கூட அவனுக்காக அன்புக் கண்ணீர் சொரிவாள். அப்பொழுது அவளது அருமைப் பூனை, அவள் பக்கத்திலிருந்து மெதுவாக பிராண் டிக்கொண்டிருக்கும். சில சந்தர்ப்பங்களில் தெருக்கதவை திடீரென்று தட்டும் சப்தம் கேட்கும். ஒலன்கா பேச்சு மூச்சில்லாமல் எழுவாள். சில நிமிஷம் கழித்து மீண்டும் கதவை படாரென்று தட்டும் சப்தம் கேட்கும். 'ஹார்க்கோ' விலிருந்து தந்தி வந்ததாக நினைப்பாள். கால்முதல் தலைவரை வியர்த்து நடுக்கம் ஏற்பட்டுவிடும். "சாஷாவினுடைய தாய் தன் மகனுக்கு 'ஹார்க்கோ' விலிருந்து எதையேனும் அனுப்பியிருப்பாள் ... ஆண்டவனே அருள் பாலிப்பாயாக" என்பாள்.

அவள் இதுமாதிரி கலவரமடைவாள். அவள் கை, கால், தலை அத்தனையும் ஜில்லிட்டுவிடும். அவள் உலகத்திலேயே, தானே மிக்க துர்ப்பாக்கியவதி என்று கருதுவாள். மற்றொரு நிமிஷம் செல்லும். பேச்சுக்குரல் கேட்கும். மிருக வைத்தியர் கிளப்பிலிருந்து வீட்டிற்குத் திரும்பி வந்திருப் பார். "ஆண்டவனே அதற்காக உனக்கு நன்றி" என்று நினைப்பாள். கொஞ்சம் கொஞ்சமாக அவள் இருதய பளு குறைந்து சமனமடைந்துவிடுவாள். அவள் மீண்டும் அடுத்த அறையில் அயர்ந்து தூங்கும் சாஷாவின் படுக்கையை எட்டிப் பார்ப்பாள். அப்பொழுது அவன் "நான் உன்னிடமே இருக் கிறேன்; போ!...போ!... கதவை மூடு" என்று தூக்கத்தில் சொல்வதுபோல் கேட்கும். ○

# காதலியைப்பற்றி . . .

**டால்ஸ்டாயின் விமர்சனம்.**

கிறிஸ்துவ வேதத்தில் உள்ள எண்ணாகமத்தில் ஒரு அழகிய கதை இருக்கிறது. அது மிகவும் அர்த்தபுஷ்டியுள்ளது. மவ்பைட்ஸ் அரசனான பாலகன், எதிரிகளான இஸ்ரவேலர்களை சபிப்பதற்காக பாலாம் என்ற குருவுக்கு அநேக வெகுமதிகளை அளிப்பதாக ஆசைவார்த்தைகளைச் சொல்லி அழைத்துவருகிறான். அநேக ஆடு மாடுகளை வெட்டி வேண்டிய பூசைகளை செய்ய அவருக்கு உதவி செய்கிறான். பாலகன் தன் எதிரிகளான இஸ்ரவேலர்களை குரு சபிக்கப்போகிறார் என்று நினைக்கிறான். ஆனால் இஸ்ரவேலர்களை சபிப்பதற்குப்பதிலாக அவர் ஆசீர்வதிக்கிறார்.

**அத்தியாயம் 23: VII.**

"தாங்கள் எனக்கு என்னசெய்துவிட்டீர்கள்? என்னுடைய எதிரிகளை சபிப்பதற்காகவல்லவோ நான் தங்களை அழைத்துவந்தேன். ஆனால் நீங்களோ அவர்களை முற்றிலும் ஆசீர்வதித்துவிட்டீர்களே" என்கிறான் பாலகன் பாலாவிடம்.

"12. அதற்கு அவர் ஆண்டவன் எனக்கு திருவாய் மலர்ந்தருளியதை நான் என் வாய் வாக்காக சொல்லத் தூண்டுதல் பெறவில்லையா?

"13. வாருங்கள்! நான் தங்களையே பிரார்த்திக்கிறேன் வேறோரிடம் வாருங்கள்......இங்கிருந்து அவர்களை சபியுங்கள்."

மீண்டும், பாலாம் அவர்களை சபிப்பதற்கு மாறாக ஆசீர்வதிக்கிறார். இதுபோலவே மூன்றாம் முறையும் நிகழ்ந்தது.

**அத்தியாயம் 24: VX.**

"10. பாலாமுக்கு விரோதமாக பாலகனுடைய கோபம் பொங்கி எழுந்தது. அவன் தன் முஷ்டிகளை மடக்

இக்கொண்டு, நான் எதிரிகளை சபிப்பதற்காக தங்களை இங்கு அழைத்தேன். ஆனால் நீங்களோ மூன்று முறையும் அவர்களை முற்றிலும் ஆசீர்வதித்துவிட்டீர்களே" என்றான் பாலகன் பாலாமிடம்.

"11. ஆகவே நீங்கள் உங்கள் இடத்திற்கு ஓடிவிடுங்கள். நான் தங்களை உயர்ந்த அந்தஸ்துக்கு உயர்த்த எண்ணினேன். ஆனால் பரிதாபம் ஆண்டவனுடைய திரு உள்ளம் தங்களை கீழாகவே இருக்கும்படி செய்துவிட்டது.

ஆகவே பாலாம் எந்தவித வெகுமதியில்லாமலும் அவர்களை சபிப்பதற்கில்லாமலும், பாலகனின் எதிரிகளை ஆசீர்வதித்து திரும்பிச்சென்றார்.

பாலாமுக்கு எது சம்பவித்ததோ, அதுவேதான் உண்மைக் கவிகளுக்கும், கலைஞர்களுக்கும் அடிக்கடி சம்பவிக்கிறது.

பாலகனுடைய வெகுமதிகள், அந்தஸ்துகள் கௌரவங்கள் அத்தனையும் அவனுக்குத் துணையாகி எதிரிகளை சபிக்கவே அவன் கருதியபோதுகூட, உண்மையிலேயே பாலாம் அவ்வாறு செய்யமுடியவில்லை.

இதுபோலவே, இந்த இனிய 'காதலி' என்ற கதையை எழுதிய உண்மைக்கவியும் கலைஞருமான செக்காவுக்கும் நிகழ்ந்துவிட்டது.

ஆசிரியருடைய கருத்து, அவர் இருதய உணர்ச்சியால் அல்லாது அறிவின் திறத்தால் முடிவுக்கு வருகிறபடி முதலில் குஹினினுடைய நாடகத் தொழிலில் அக்கரைக்காட்டும் 'காதலி'—மரவியாபாரியின் நலனில் அர்ப்பணம் செய்து கொள்பவளும், பின் மிருக வைத்தியரின் கூட்டுறவால் உலகத்திலேயே ஜீவஜந்துக்களின் கால், வாய் வியாதிகளே மிக முக்கியமானவை என்று உணர்ந்து கவலையுறுபவளும்; கடைசியாக பெரிய தொப்பியை அணிந்த சிறிய பையனின் நலனில் அக்கரை செலுத்தி, அவனுடைய கணக்கிலும், இலக்கணத்திலும் மூழ்கி அவனோடு பின்னிக்கொள்பவளுமாகிய கதாநாயகியைப் பழிக்கவேண்டுமென்பதே முடிவு.

கதாநாயகியை குஹினுடைய காதலி யென்பதும், அவன் வியாதியால் இறந்தானென்பதும்; மா வியாபாரியும் அவனுடைய அந்தஸ்தும்; மிருக வைத்தியரும்; என் அந்த சிறுவனும் எல்லாம் பொய்மைகளேயாகும். ஆனால் "காதலி"யின் ஆத்மா—அதிலும் அவள் முழுமுதலாக ஒவ்வொருவரையும் காதலித்த ஆத்ம மனப்பான்மை பொய்யான நிகழ்சியல்ல. அத்தனையும் அற்புதமும், பரிசுத்தமுமான தாகும்.

ஆசிரியர் "காதலி"யை யெழுதும்பொழுது, அவர் இருதயத்தால் நினைத்திருக்காவிட்டாலும், ஒரு புதுமைப் பெண்ணின் ஸ்தூல உருவத்தை அதாவது மனிதனோடு சமத்துவ நிலைமையையும்; கல்வியிலும் திறமையிலும் வளர்கிற பெண்மையையும்; சமுதாயத்தின் நன்மைக்காக தானே சுயேச்சையாக ஆணுக்குமேலாக இல்லாவிட்டாலும் சமமதையாகவாவது சம்பாதிக்கும் ஆற்றல் தன்மையையும்; பெண் பிரச்னையையே உயர்வென மனதில்கொண்டு, அதற்கெனப் போராடும் பெண்மையையுமே மனதில்கொண்டு எழுதியிருக்கக்கூடுமென நம்புகிறேன். "காதலி"யை எழுதும் பொழுது, ஆசிரியர், பெண்மை எப்படி இருக்கக்கூடாதோ அப்படி இருக்கக்கூடாதென்று எடுத்துக்காட்ட விரும்பியிருப்பார்.

பாலகன் என்ற பொதுஜன அபிப்பிராயம் செக்காவ் மூலம், மனிதனுச்குட்பட்ட, வளர்ச்சியுறுத, அடங்கி ஒடுங்கிய பெண்மையை, அபலையை சபிக்கவேண்டுமென உத்தரவிட்டது.

செக்காவுக்கு ஆடு மாடும் சமைத்து பூசிக்கப்பட்டது.

ஆனால் செக்காவ் வாயை திறந்ததும், சபிக்கவந்தவர் ஆசீர்வதித்தேவிட்டார்.

இக்கதை எவ்வளவோ சிறப்பான வினோத முறையில் எழுதப்பட்டிருந்தாலும், என்னால் சில பகுதிகளைப் படிக்கும் பொழுது கண்ணீர் உகுக்காமல் இருக்கமுடியவில்லை.

கதாநாயகி குகின்மீது கொண்ட முழு அன்பும், காத

லும், அவன் எதெதுமீது அக்கறை செலுத்தினுனோ அத் தனையிலும் சிரத்தையெடுத்தலும், அதுபோலவே மர வியா பாரி மீதும், மிருக வைத்தியர் மீதும் கொண்ட காதலும் சிரத்தையும், மற்றும் அவள் தனிமையில் விடப்பட்ட பொழுது அவள் காதலை செலுத்த முடியாதபோது அவள் பட்ட அவஸ்தையும், கடைசியாக அவளுடைய முழுப் பெண்மை, தாய்மையுணர்ச்சியோடுகூட (அவள் தன்னுடைய சொந்த வாழ்க்கையில் அனுபவமில்லாதபோதும்) பெரிய தொப்பியையணிந்த சிறு பள்ளிச்சிறுவனுகிய வருங்கால மனிதனை எல்லையற்ற காதலோடு நேசித்ததையும் காட்டும் வர்ணனைகள் என்னை ஈர்க்கிறது.

ஆசிரியர், பொருத்தமற்ற குகினையும், சாதாரண மர வியாபாரியையும், இங்கிதமற்ற மிருக வைத்தியரையும் காத லிக்கும்படி செய்கிருர். ஆனுல் காதல் என்பதற்கு குகினு லென்ன, ஸ்பிஞேஜாவாகயிருந்தாலென்ன, பாஸ்கலாகவோ அல்லது ஷில்லராகவோ இருந்தாலென்ன; அது 'காதலி'க்கு அடிக்கடி மாறுதலேற்பட்டதுபோல மாறினு லென்ன; அல்லது வாழ்க்கை முழுமையுமே நிரந்தரமான ஒருவரிடமே இருந்தாலென்ன, காதலுடைய புனிதத்தன்மை க்கு குறைவு இல்லை.

சில காலத்திற்கு முன்பு நான் **Novoe Vremya** வில் பெண்ணைப்பற்றி ஒரு சிறந்த கட்டுரையை படிக்கநேரிட்டது. அதில் ஆசிரியர், பெண்மையைப்பற்றி மிக்க குறிப்பிடத் தகுந்த, அரிய அற்புதக் கருத்தை வெளியிட்டிருந்தார்.

"பெண்கள், ஆண்களாகிய நம்மால் செய்யக்கூடியதை யெல்லாம் செய்யமுடியுமென்று நமக்கு எடுத்துக்காட்ட முயற்சிக்கிருர்கள். நான் அதை மறுக்கவில்லை. பெண்கள், ஆண்களால் செய்யக்கூடிய ஒவ்வொன்றையும், என் அவர்களை விட சிலாக்கியமாகவும் செய்யக்கூடுமென்று நான் ஒத்துக் கொள்ளத்தயார். ஆனுல் பெண்களால் செய்யக்கூடிய பெண் தன்மையை ஆண்களால் செய்ய முடியாதென்பதுதான் கஷ்ட மான பிரச்னை" என்று அவர் சொல்லியிருக்கிருர். ஆம்.

அதுதான் முற்றிலும் உண்மை. பிள்ளைப்பேறு, போஷிப்பு, குழந்தைகளுக்கான ஆரம்பப் படிப்பு ஆகிய விஷயங்களைப் பற்றிமட்டுமல்ல. மனிதனை, கடவுளுக்கு நெருக்கமாக்கும் சிறந்த வேலையை,-அந்த மகோன்னதத்தை அதாவது காதலின் செயலை,-காதலிக்கும் பொருளின்மேல் முழுதும் காதல் படுதலை மனிதனல்ல; நல்ல பெண்களே இயற்கையாக, மேன்மையாக செய்திருக்கிறார்கள்; செய்கிறார்கள்; செய்வார்கள். பெண்களுக்கு அந்த சக்தியில்லாவிட்டால், அவர்கள் அதனைக் கையாளாவிட்டால் உலகத்தின் கதிதான் என்னவாகும்? நாம் பெண் டாக்டர்கள் இல்லாமல், பெண் தந்தி குமாஸ்தாக்கள் இல்லாமல், பெண் லாயர்கள் இல்லாமல், பெண்விஞ்ஞானிகள் இல்லாமல், பெண் எழுத்தாளர்கள் இல்லாமல் நம்மால் வாழமுடியும். ஆனால் தாய்மார்கள் இல்லாமல், துணையாளர்கள் இல்லாமல், சிநேகிதர்கள் இல்லாமல், ஆறுதலளிப்பவர்கள் இல்லாமல், அதாவது ஆண்களிடத்தில் உள்ள உயர்வையே கண்ணெனக்கொண்டு காதல் செலுத்தி, நாம் அறியாதவாறு, ஒவ்வொரு வினாடியும் ஆக்குவித்து, ஊக்குவித்து, நம்மைக்காப்பாற்றும் அவர்களில்லாமல் வாழ்வே ஒரு துக்ககரமாக ஆகும்.

இயேசுவோடு மெகதலேனோ, அர்ச். பிரான்ஸிஸோடு கிளெய்ரோவோ இருந்திருக்கமுடியாது; சைபீரியாவில் டெகாபிரிஸ்ட்ஸ்களுடைய மனைவிகள் இருந்திருக்கமுடியாது; தன் கணவன்மார்களைக் காப்பாற்றியதோடல்லாமல் உண்மைக்காக வீரதியாகம் செய்யவும் தூண்டிய அந்த மனைவிமார்கள் துஷோபர்களிடையே இருந்திருக்கமுடியாது; எவரையும் விட, காதலின் சுகமே அதிகமாகவேண்டப்படும் குடிகாரர்கள், பலஹீனர்கள், அனாதைகள் ஆகியோர்களை சம்ரக்ஷிக்க ஆயிரமாயிரமாகிய கேள்விப்படாத பெண்ணனங்குகள்—(கேள்விப்படாதவர்களிலேதான் மிகச்சிரேஷ்டர் எப்பொழுதுமிருப்பதுபோல)-இருந்திருக்கமுடியாது. ‘காதல்’ குகினுக்கு அற்பணிக்கப்பட்டாலென்ன அல்லது இயேசுவுக்கு அற்பணிக்கப்பட்டாலென்ன— அதுதான் பெண்களிடையேயுள்ள மிக மகோன்னத சக்தி.

பெண்கள் பிரச்னை என்றழைக்கப்படுகிற பிரச்னையில் என்ன அறியாமை. ஆம். பெண்களில் அநேகரிடையே இந்த அறியாமை அப்படியே குடிகொண்டிருக்கிறது; மனிதர்களிடையேயும் கூடத்தான்.

"பெண்கள் தங்களையே முன்னேற்றிக்கொள்ள விரும்கிறார்கள்" ஆம். அதைவிட நியாயமும்—நீதியுமுடைய விஷயம் வேறு என்ன இருக்கமுடியும்?

ஆனால் பெண்ணினுடைய வேலை அவர்கள் இயற்கை வேலையைப்பொறுத்தே மனிதனுடைய வேலைக்கு வேறுபட்டதாகும். ஆகவே பெண்மையின் தன்மை, லக்ஷ்யம், ஆண்மையின் தன்மை, லக்ஷ்யத்தோடு ஒன்றாக ஒரே தன்மையதாக இருக்கமுடியாது. அந்த லக்ஷ்யம் நமக்குத் தெரியாதென்றே நாம் ஒத்துக்கொள்வோம்; ஆனால் எப்படியிருந்தபோதிலும், அந்த லக்ஷ்யம் ஆண் தன்மையின் லக்ஷ்யமாக இருக்கமுடியாது என்பது மட்டும் உறுதி. அப்படியிருந்தும், பெண்களுக்கு முட்டுக்கட்டையாக விளங்கும், பகட்டான பெண்கள் இயக்கத்தின் கொடுமையும் கேவலமுமான முழு நடவடிக்கைகள் ஆண்மையின் லக்ஷ்யத்தை அடைவதற்காக செலுத்தப்படுகிறது.

இந்த அறியாமையின் தூண்டுதல்தான் 'காதலி'யை எழுதும்பொழுது செக்காவுக்கு இருந்திருக்குமென்று நான் பயப்படுகிறேன்.

அவர், பாலாமைப் போல சபிக்கவிரும்பினார். ஆனால் கவிதா தெய்வம் அவ்வாறு செய்யாதே என்று தடுத்து ஆசீர்வதிக்குமாறு ஆக்ஞாபித்துவிட்டது. அவரும் ஆசீர்வதித்துவிட்டார்.

ஆனால் அவரை அறியாமலே, ஒரு பெண் தானே சந்தோஷமாகயிருக்கவும், விதிவசத்தால் யாரோடு இருக்க வாய்ப்புக்கிட்டுகிறதோ அவர்களையும் சந்தோஷமாகயிருக்கச் செய்யவும் எப்படிக்கூடுமென்பதை இந்த இனிய கதாநாயகி மூலம் ஒரு ரக பெண் இனத்தை மிக்க அழகிய சோபிதத்தோடு அவரை அறியாமலே சிருஷ்டித்துவிட்டார்.

கதைக்கு எல்லாவற்றையும்விட மிக்க மகோன்னத மளிப்பது, அதனுடைய முடிவான அம்ஸம் எதிர்பாராது அமைந்துவிட்டதுதான்.

ஒரு டிவிஷன் பட்டாளத்தை, டிரில் செய்யக்கூடிய அளவான இடத்தைவிட, ஒரு பெரியதான ஹாலில், நான் ஒரு துவிச்சக்கா வண்டியையோட்ட கற்றுக்கொள்ள முற்பட்டேன். அந்த ஹாலின் எதிர்கோடியில் ஒரு ஸ்திரி படித்துக்கொண்டு நின்றுகொண்டிருந்தாள். அவளுடைய வழிக்கு நாம் போகக்கூடாதென்று, அவளைப் பார்த்துக்கொண்டே, சர்வஜாக்கிரதையாக யிருக்க நான் நினைத்தேன். நான் அவளைப் பார்த்ததனாலோ, என்னமோ, என்னை அறியாமலே அவளண்டை நெருங்கி நெருங்கிப்போய், அவளும் அபாயத்தை உணர்ந்து எட்டிப் போகப்போக அவள் மீதே விழுந்து அவளைக் கீழே வீழ்த்திவிட்டேன். அதாவது (அவள் மீதே என் கவனம் சென்றுவிட்டதால்) என்னுடைய விருப்பத்திற்கு நேர்மாருக, நான் தவருக நடந்துவிட்டேன்.

இதே நிலமைதான் செக்காவுக்கும் எற்பட்டுவிட்டது. ஆனல் நேர்மாற்றமான முறையில். அவர் 'காதலி'யை கீழே வீழ்த்த, விரும்பினுர். ஆனல் கவியின் நெருங்கிய பான்மையில் அவள்மீதே கவனத்தைச் செலுத்தி செலுத்தி அவளை உயர்த்திவிட்டார். ○

# துணைவி . . .

"நான் தான் என்னுடைய மேஜையை சுத்தம் செய்ய வேண்டாமென்று சொன்னேனே" என்றார் நிக்கோலாய்.

"நீ சுத்தம் செய்யும்பொழுது மேஜைமீது ஒன்றுமில்லாமலா இருந்தது? தந்தி எங்கே போய்விடும்? நீ எங்கு அதனைத் தொலைத்தாய்? அதைத் தேடிக்கண்டுபிடி. அது நேற்றுதான் காஜானிலிருந்து வந்தது" என்றார் மீண்டும்.

வெளுத்த மெலிந்த வேலைக்காரியோ மேஜையினடியிலிருந்த குப்பைக்கூடையிலிருந்து அநேக தந்திகளைப் பொருக்கிஎடுத்து டாக்டர் நிக்கோலாய் முன்னிலையில் மௌனமாக வைத்தாள். ஆனால் அத்தனையும் வியாதியஸ்தர்களிடமிருந்து வந்தவையாகும்.

அவர்கள் இருவரும் மேஜையை இழுத்துப்பார்த்தார்கள் அங்குமிங்கும் தேடிப் பார்த்தார்கள். கடைசியாக டிமிட்ரிவினாவின் அறையையும் பார்த்தார்கள்.

அப்பொழுது நடுநிசி. நிக்கோலாயிக்கு தன் மனைவி டிமிட்ரிவினா காலை 5-மணிக்கு முன்னதாக வீடு திரும்ப மாட்டாளென்று தெரியும். அவருக்கு அவள்மீது சந்தேகம். அவள் வெளியில் போய்விடும்பொழுது அவருக்கு மன நிம்மதி யிருப்பதில்லை. அந்த சமயத்தில் அவளை வெறுக்கவும் செய்தார். அவளுடைய படுக்கை, மூக்குக்கண்ணாடி ஆகியவைகளைப் பார்த்தாலே கோபமேற்படும். போதாக் குறைக்கு அவளுக்கு வேண்டிய சிநேகிதர்களிடமிருந்து, தினந்தோறும் வெகுமதியாக வரும் 'வில்லீஸ் ஆப் தி வாலி' போன்ற வாசனை சாமான்கள், சோப்பு தினுசுகள், சாக்லேட் தினுசுகள் ஆகியவைகள் வீடு முழுதும் ஒரே வாசனையை உண்டாக்கிக்கொண்டு இருக்கும்பொழுது ஆத்திரம் வராமலாயிருக்கும்?

இதுமாதிரி இரவுகளில், அவரிடம் முன்கோபமும், படபடப்புமிருக்கும். ஆகவேதான், அவருடைய சகோதர

ரிடமிருந்து அதற்கு முன்தினம் வந்த, சாதாரண கிருஸ்துமஸ் ஆசிச்செய்தித் தந்தியை அவசியம் பார்க்கவேண்டுமென்று விரும்பினார்.

அவருடைய மனைவியின் அறையிலிருந்த மேஜையின் ஒரு அழகிய பெட்டியில் ஒரு தந்தி இருந்ததை டாக்டர் கண்டுபிடித்தார். அது மாண்டிகார்லோவிலிருந்து அவர் மனைவிக்கு வந்தது. அதில் மைக்கேல் என்று கையெழுத்திடப்பட்டிருந்தது. அந்தத் தந்தியின் ஒரு வார்த்தைக்கு பொருள் விளங்கவில்லை. காரணமென்னவெனில் அது அன்னிய மொழியாகிய ஆங்கிலத்தில் கொடுக்கப்பட்டதுதான்.

"இந்த மைக்கேல் யார்?... என்ன, மாண்டிகார்லோவா? ஏன் அவள் தாயார் மேல்பார்த்து அவளுக்குக் கொடுக்கப்பட்டது?"

டாக்டருக்குக் கல்யாணமாகி பனிரெண்டு வருஷங்களாகிவிட்டன இந்த பனிரெண்டு வருஷங்களிலும் அவருக்கு சந்தேகம் தோன்றி, வீடுகளில் அத்தனையும் துருவித்துருவி பரிசோதனைசெய்துபார்த்து, கடைசியாக அநேக சந்தர்ப்பங்களில், தானே துப்பறியும் இலாகாவுக்கு மிகப்பொருத்தமான யோக்கியதாம்சமுடையவரென்ற முடிவுக்கு வந்திருக்கிறார்.

இவர் தன் படிப்பறைக்குச் சென்றார். முதலில் ஒன்றரை ஆண்டுகளுக்கு முன்னால் பீட்டர்ஸ்பர்க் போயிருந்தபொழுது இருபத்திரண்டு அல்லது இருபத்திமூன்று வயதுடைய இவோனு என்ற ரிஸ் என்பவரை தன் முன்னாள் பள்ளி நண்பரான சிவில் என்ஜினியர், தனக்கும் தன் மனைவிக்கும் அறிமுகம் செய்துவைத்த ஞாபகமும்; அதற்குப்பின் இரண்டு மாதங்களுக்கெல்லாம் தன்னுடைய மனைவியின் 'ஆல்ப'த்தில் அந்த ரிஸ் என்பாருடைய புகைப் படமிருந்த ஞாபகமும்; அந்தப்புகைப் படத்தில் "தற்போதைய ஞாபகார்த்தமாகவும், வருங்கால நம்பிக்கைக்காகவும்" என்றெழுதப்பட்ட பிரஞ்சு காவிய ஞாபகமும் அவருக்கு மின்னல்போல் தோன்றியது. பின் அவரே அந்த

வாலிபரை தன் மாமியார் வீட்டில் சந்தித்தபொழுது தனக்கும் தன் மனைவிக்கும் கருத்துவேற்றுமைகள் அதிகரித்ததும்; அவள் வெளிநாடு செல்ல தன்னை பாஸ்போர்ட் வேண்டுமென்று வற்புறுத்திவந்ததும் அவருக்கு ஞாபகம் வந்தது. அநேக சந்தர்ப்பங்களில் இராக்காலங்களில், தன் மனைவி வீட்டிற்கு வராமல் விடிந்து நான்கு மணிக்கும் ஐந்து மணிக்கும் வந்துகொண்டிருந்ததும்; அப்பொழுது வீட்டில் எப்பொழுதுபார்த்தாலும் சண்டையும் சச்சரவுமாகவே யிருந்ததும்; அப்பொழுது வேலைக்காரர்கள் முகத்தில் முழிப்பதென்றாலே அவமானமாகவும் வெட்கமாகவுமிருந்த ஞாபகமும் வந்து தோன்றியது.

ஆறு மாத காலத்திற்கு முன்பு டாக்டருடைய சிநேகிதர்கள், டாக்டருக்கு கொடிய க்ஷயவியாதியென்றும், அவர் கிரீமியா சென்று குணப்படுத்திக்கொள்ளுவதே சாலச் சிறந்ததென்றும் யோஜனை கூறினார்கள். அதைக் கேட்டதுமே டிமிட்ரிவினா பயந்து அலறி, புருஷனிடத்தில் கட்டுமீறாத அன்புகொண்டு, கிரீமியா பிரதேசம் வரண்டும், பாலைவனமாகவும் காட்சியளிக்குமென்றும்; ஆனால் நைஸுக்குப் போனால் அங்கு எல்லாம் ரம்மியமாகயிருக்குமென்றும்; அங்கு அவருக்கு தான் உடனிருந்து அத்தனையையும் கவனித்து பணிவிடை செய்வதாகவும் சொல்லியிருந்தாள்.

இப்பொழுதுதான், ஏன் தன் மனைவி நைஸுக்குப் போகப் பிரியப்படுகிறாளென்ற காரணம் டாக்டருக்குப் புலனாகியது. அதாவது அவளுடைய மைக்கேல் மாண்டிகார்லோவில் வசிக்கிறானல்லவா? ஆம். அதற்காகத்தான்.

அவர் ஆங்கில அகராதியை எடுத்து வார்த்தைகளுக்கு அர்த்தத்தைக் கண்டுபிடித்து, விஷயத்தை ஒருவாறு யூகித்து, கீழ்க்கண்டவாறு தந்தியின் கருத்தை எழுதினார். "என்னருமைக் காதலியின் நலனுக்காக நான் குடிக்கிறேன். அவளுடைய சிறிய காலை ஆயிரம் தடவை முத்தமிடுகிறேன். அவளுடைய வருகைக்காக எல்லையற்ற பொறுமையோடு காத்துக்கொண்டிருக்கிறேன்."

டாக்டர் தான் தன் மனைவியை நம்பி கைஸுக்குப்போக நேரிட்டிருந்தால் தன்னுடைய நிலைமை எவ்வளவு பரிதாபகரமாகவும், கேவலமாகவும் போயிருக்குமென்று யூகிக்கலானார். அவருக்கு அப்பொழுது நினைத்தமாத்திரத்திலே அழுகையும் வருத்தமும் ஏற்பட்டது. அவர் மனம் குழம்பியவராய் அங்குமிங்கும் வீட்டின் அறைகளிலேயே உலாவலானார். அவருடைய கௌரவம், அவருடைய அந்தஸ்து, அவருடைய பெயர் அவருடைய புகழ் அத்தனைக்கும் மாசு வந்துவிட்டதாக உணர்ந்தார். அவர் ஆத்திரமேலீட்டால் தன் கைகளை மடக்கிக்கொண்டு "ஒரு பாதிரியாரின் மகன், செல்வமாக வளர்க்கப்பட்டவன், உயர்தரப்படிப்புப் பெற்று டாக்டர் தொழில் செய்துவருபவன் எப்படி கேவலம் ஒரு அபலையிடம், கால்காசு பெறாத கழுதையிடம் அவமானப்படுவது, அடங்கிக்கிடப்பது" என்று ஆர்ப்பரித்துப்பார்த்தார் தனக்குள்ளேயே.

தந்தியை கையால் கசக்கியவராய் "சிறிய கால்", "சிறிய கால்" என்று முணுமுணுத்தார்.

அவர் அவளைக் காதலித்ததும், எழாண்டுகள் அவளை அனுபவித்ததுமான சுகம்—அவளது அழகிய நீண்ட கூந்தலின் மணமும், மிருதுவான லேஸின் வழவழப்பும், வாஸ்தவத்திலேயே மிக்க அழகான சிறு கால்களின் ஸ்பர்ஸமுமேயாகும். அப்பொழுதும்கூட அவளுடைய பழைய ஸ்பர்சத்தின் நினைவால் அவளுடைய நீண்ட கேசத்தின் மணத்தையும்; காலின் இன்பஉணர்ச்சியையும் மிருதுத்தன்மையையும் அவரால் அனுபவிக்க முடிந்தது. ஆனால் அவளை துரோகி, மோசக்காரி, பொய்காரி, வஞ்சகி என்று வசையும் தூற்றுதலும் சொல்லிச் சொல்லித் தீர்த்தார்.

தன்னுடைய தந்தையாருடைய கிராமாந்திர வீட்டில், முன்நாட்களில் ஒரு பறவை பறந்துவந்து வீட்டிற்குள் புகுந்து, வெளியேற வழி தெரியாமல் தவித்து, அங்குள்ள சாமான்களையெல்லாம் சிதறடித்து நாசமாக்கியதைப்போல, தன்னுடைய வாழ்க்கையாகிய வீட்டில் தனக்கு சம்பந்தமில்லாத தன்னினமற்ற ஒருத்தி வலுவில் புகுந்து தன்

வாழ்வையே நாசமாக்குவதுபோல உணர்ந்தார். அவருடைய வாழ்க்கையின் பருவ காலங்களெல்லாம் ஏதோ நரகத்தில் கழித்துவிட்டதாக உணர்ந்தார். இன்பத்திற்கான அவரது நம்பிக்கைகள் அன்றோடு சிதறுண்டு, பரிகசிக்கத்தக்கன வாயினவென்று உணர்ந்தார். அவரது வாழ்வே பாழாய்ப் போய்விட்டதாகவும், அவருடைய வீடுவாசலே சூன்யமாகி விட்டதாகவும் உணர்ந்தார். அவர் இனி தன்னால் சம்பாதிக்க முடியாதென்றும், தன் வயோதிகத் தாய்க்கு இனி பத்து ரூபிள்களைக்கூட மீத்து அனுப்பமுடியாதென்றும் உணர்ந் தார். அவருடைய கடன் பதினாயிரத்துக்குமேல் ஆகிவிட்ட தென்றும் கவலை கொண்டார். கொள்ளைக்கார கொலைகாரக் கூட்டமே தன்னிடத்தில் புகுந்து கொள்ளையும், கொலையும் செய்தாலும் தன்னுடைய வாழ்க்கையே அப்பெண் ஒருத்தி யால் நாசமாகி அழிந்துவிட்டதைப்போன்று அழிந்து விடாது என்று நம்பினார்.

அவருக்கு இருமல் வந்துவிட்டது. மூச்சு விடுவதற்கு திண்டாடலானார். அவர் அப்பொழுது படுக்கைக்குப்போய் கதகதப்பாகப் படுத்துக்கொள்ளவேண்டும். ஆனால் அது அவரால் முடியவில்லை. அவர் வீடு முழுதும் நடந்துபார்த்தார். மேஜை மீது உட்கார்ந்தார். தாளை எடுத்து கிறுக்கிப் பார்த்தார்.

"முயற்சிக்கிறேன்— ஒரு சிறிய கால்"

விடியற்காலை ஐந்து மணி. களைப்பும் பலஹீனமுமேற் பட்டுவிட்டது. குற்றம் முழுவதையும் தன்மீதே சுமத்திக் கொண்டார். டிமிட்ரிவினாவை வேறு யாரேனும் கல்யாணம் செய்துகொண்டிருந்தால், அவள் நேர்மையுடையவளாகவும், நல்லவளாகவும் இருந்திருப்பாள் என்று கருதினார். தான் பெண்களின் மனோபாவத்தை பூராத் தெரிந்து அதன்படி நடந்துகொள்ள போதிய திறனற்றவன் என்று தன்னையே நொந்துகொண்டார்.

"நான் இனி அதிககாலம் வாழமுடியாதவனாக இருக் கிறேன். நானோ இறந்த மனிதனுக்குச் சமம். நான் ஏன்

வாழப்பிறந்தவர்களுக்குக் குறுக்கே நிற்கவேண்டும். என்னுடைய நிலையில், என்னுரிமைக்காகக் கவலைப்படுவதென்பது முட்டாள்தனமும், அர்த்தமற்றதுமாகும். அவள் அவளுக்கு வேண்டியவனைக் காதலித்து வாழட்டுமே. நான் அவளை விவாகரத்து செய்துவிடுகிறேன். குற்றமுழுதையும் நானே என்மீது ஏற்றுக்கொள்ளப்போகிறேன். அவளிடம் பேசி அவளுக்கு வேண்டியவனிடம் வாழ்க்கை நடத்த ஏற்பாடு செய்கிறேன்".

பொழுது விடிந்தது, டிமிட்ரிவிஞ வந்துசேர்ந்தாள். அவள் அணிந்திருந்த வெள்ளை ஆடையோடும், தொப்பியோடும், ஓவர் பூட்ஸோடும் நேரே தன் படிப்பறைக்குச் சென்று, அங்கு நாற்காலியில் சாய்ந்தாள். அவள் பெருமூச்சு விட்டுக்கொண்டே "அந்த கொழுத்த பையன்" "உண்மையிலேயே அயோக்கியன்", "கச்சடாப் பயல்" "அவன் கூடவே கூடாது" என்று காலை உதறிக்கொண்டு பேசினாள்.

"என்ன சமாச்சாரம்! என்ன?" என்று நிக்கோலாய் அவளண்டை போய் கேட்டான்.

"அந்தப் பள்ளிக்கூட மாணவன் அஜார் இருக்கிறானே —அவன் என்னை வீட்டண்டை பார்த்தான் அவன் என்னுடைய பையைத் தொலைத்துவிட்டான். அதில் 15-ரூபிள்களை வைத்திருந்தேன். அதை நான் என் அம்மாவிடமிருந்து வாங்கிவந்தேன்" என்று சொல்லி சின்னக் குழந்தைமாதிரி அழுதாள். அவள் கைகுட்டை மட்டுமல்ல கையணிகளும் நனைந்துவிட்டன.

"அது தொலைந்தது தொலைந்ததுதானே — அவன் அதைத் தொலைத்திருந்தால் அதற்காக என்ன செய்வது? போனால்போகிறது—நான் உன்னோடு பேசவிரும்புகிறேன்" என்றார் டாக்டர்.

"நான் லக்ஷாதிபதியல்ல — பணத்தை அதுமாதிரி தொலைக்க. அவன் அதைத் திருப்பிக்கொடுத்துவிடுவதாகச் சொன்னான். ஆனால் எனக்கு நம்பிக்கை இல்லை. அவன் ஏழை......"

அவள் புருஷன் அவளை மிகவும் சமாதானப்படுத்தி அவளோடு பேச முயன்றான். அவளோ தொலைந்துபோன 15-ரூபிளைப் பற்றியும் அந்த மாணவனைப்பற்றியுமே ஓயாது பேசிக்கொண்டிருந்தாள்.

"நீ வாயை மூடி சும்மா இருந்தாலே போதும். உனக்கு நாளை வேண்டுமானால் 25-ரூபிளை கொடுத்துவிடுகிறேன்" என்று கோபத்தோடு சொன்னான்.

"நான் துணிகளையெல்லாம் கழட்ட வேண்டாமா? தொப்பியைத் தலையிலே மாட்டியபடியே என்னால் பேச முடியாது. இந்த சாதாரண விஷயங்கூட தங்களுக்குத் தெரிய வில்லையே" என்றாள் அவர் அவளுடைய கோட், ஓவர்பூட்ஸ் களைக் கழட்டி உதவிபுரிந்தார். அப்படிச்செய்யும்பொழுது அவள் ஓயின் குடித்திருக்கிறாள் என்பதை வாசனையிலிருந்து உணர்ந்தார். அவள் வாஸ்தவத்திலே ஓயின் சாப்பிட்டிருந் தாள்.

அவள் தன் அறைக்குச் சென்று உடுப்புகளை மாற்றி முகத்திற்கு பவுடரைத் தடவிக்கொண்டு வந்து உட்கார்ந் தாள். அழுத கண்ணீர் அவள் கண்களில் அப்பொழுதும் மாறிவிடவில்லை. அவள் உட்கார்ந்திருந்த சாயலே தனி சோபிதமென்றாலும், அவனுக்கு அவளைப் பார்க்கும் பொழுது அவள் தொங்கவிட்டிருந்த தலைமயிரும், சிலிப்ப ரணிந்திருந்த சிறு காலுந்தான் கண்ணையும், கருத்தையும் கவர்ந்தது.

"நீங்கள் என்ன பேசப்போகிறீர்கள்?" என்று சாய்ந் தாடும் நாற்காலியில் உட்கார்ந்து காலை ஆட்டிக்கொண்டே கேட்டாள்.

"நான் இந்தத் தந்தியைப் பார்க்க நேரிட்டது" என்று சொல்லி அந்தத் தந்தியைக் காட்டினான்.

அவள் படித்தாள். அவள் தோள்கள் குன்றின. "சரி" அவள் காலை வேகமாக ஆட்டிக்கொண்டு, "அது வழக்கமான புதுவருஷச் செய்தி. அதில் வேறு எதுவுமில்லை. அதில் எந்த ரகசியமுமில்லை" என்று சொன்னாள்.

"எனக்கு ஆங்கிலம் தெரியாதென்று நினைத்தா என்னை ஏமாற்றப் பார்க்கிறாய்? ஆம். எனக்குத் தெரியாதுதான். ஆனால் என்னிடம் அகராதி இருக்கிறது. அந்தத் தந்தி ரீஸாவிடமிருந்து வந்திருக்கிறது. அவன் தன் காதலி வாழ குடிக்கிறானும். உனக்கு ஆயிர முத்தங்களை தருகிறானும்...... ஆம். அதை அதோடு விட்டுவிடுவோம்......நான் உன்னை வைது ஒரு அலங்கோலத்தை உண்டாக்க விரும்பவில்லை. வேண்டிய அளவுக்கு வசவுகள் நடந்திருக்கிறது. போதும், போதும். சண்டை போட்டுப் போட்டு அலுத்துப்போய் விட்டேன். எல்லாவற்றிற்கும் ஒரு முடிவுகட்டவேண்டியது தான்...அதைத்தான் சொல்லவேண்டுமென்று நினைத்தேன். நீ சுதந்திரமானவள். உன் இஷ்டத்திற்கு எப்படி வேண்டு மானாலும் நீ வாழலாம்."

அமைதி அப்படியே குடிகொண்டிருந்தது. அவள் அமைதியாக அழுதுக்கொண்டிருந்தாள்.

"நீ பொய் சொல்வதிலிருந்தும், பாசாங்கு செய்வதி லிருந்தும் உனக்கு இனி விடுதலை கிடைத்துவிட்டது. உனக்கு அந்த வாலிபன்மீது காதல் இருந்தால் அவனைக் காதலி. அவனைப் பார்க்க போகவேண்டுமென்றால் போய்விடு. நீயோ வாலிபம்; உனக்கோ உடம்பு ஒத்துக்கொள்ளும்; நானோ பாழாய் போய்விட்டேன்; அதிக காலம் வாழ வழி யற்றவனாகிவிட்டேன்......... புரிகிறதா நான் சொல்வது?" என்றான் நிக்கோலாய். ஆனால் அவன் ஹிருதயம் படபட வென்று துடித்தது.

டிமிட்ரிவினா அழுதுகொண்டே இருந்தாள். அவள் தன்னையே நொந்து, தான் ரீஸாவை நேசித்ததாகவும், அவனோடு வெளியில் உலாவப்போவது பழக்கமென்றும், அவனுடைய அறைகளில் சந்திப்பது சகஜமென்றும், தான் அவனைப் பார்க்கப் பிரியப்படுவதாகவும் வெதும்பி வெதும்பிச் சொன்னாள்.

"நான் தங்களிடம் எதையும் மறைத்துப் பேசவில்லை" என்று பெருமூச்சுவிட்டு, "என் ஹிருதயமே உங்கள் முன்னிலையில் திறந்துகிடக்கிறது. தாங்கள் பெருந்தன்மை

யோடு எனக்குப் பாஸ்போர்ட் எடுத்துக் கொடுத்துவிடுங்கள். நான் மிகவும் கெஞ்சிக் கேட்டுக்கொள்ளுகிறேன்" என்றாள்.

"நீதான் சுதந்திரமாகிவிட்டதாகச் சொல்லிவிட்டேனே. அதைத்தான் திருப்பிச் சொல்லுகிறேன்."

அவள் எழுந்து, அவனுக்குப் பக்கத்து நாற்காலியில் உட்கார்ந்து அவன் முகத்தைக் கவனிக்கலானாள். அவள் அவன் பேச்சை நம்பாது அவனுடைய அந்தரங்கத்தை அறிய விரும்பினாள். அவள் அவன் முகத்தை பார்த்ததுமே அவளுக்கு நம்பிக்கை ஏற்பட்டுவிட்டது. அவன் கண்ணொளி அவளுக்கு ஆறுதலையளித்தது.

"எனக்கு எப்பொழுது பாஸ்போர்ட் கிடைக்கும்?" என்றாள் ஈனமாக.

"ஒருபொழுதும் கிடைக்காது" என்று சொல்ல வாயெடுத்தான். ஆனால் அதை மறைத்துக்கொண்டு, "எப்பொழுது விரும்புகிறாயோ! அப்பொழுது" என்றான்.

"ஒரு மாதத்திற்குத்தான் போய்வரவேண்டும்."

"நீ நல்லவேளையாக ரீஸோடே போய்விடு நான் உனக்கு விவாகரத்து வாங்கித்தருகிறேன். என் குற்றத்தை நானே ஒப்புக்கொள்ளுகிறேன். ரீஸ் உன்னைக் கல்யாணம் செய்து கொள்ளட்டும்."

"எனக்கு விவாகரத்து வேண்டாம்" நான் தங்களிடமிருந்து விவாகரத்து கோறவில்லை. எனக்கு ஒரு பாஸ்போர்ட்தான் தேவை. எனக்கு வேண்டியது அவ்வளவுதான்" என்றாள்.

"உனக்கு ஏன் விவாகரத்து வேண்டாமென்று சொல்லுகிறாய்?"

"நீ ஒரு அதிசயப் பெண்ணாக இருக்கிறாய். என்ன விநோதம்! உனக்கு அவன்மீது காதல் இருந்தால், அவனும் உன்னை நேசித்தால், உன்னுடைய நிலைமையில் அவனைக் கல்யாணம் செய்துகொள்வதைத் தவிர வேறு நல்ல வழி

யில்லே. நீ கல்யாணம் செய்துகொள்ளாமலே—களவுத்தொழில் செய்யலாமென்று நினைக்கிருயோ—என்னமோ?'' என்ருர் டாக்டர்.

"உங்களை நான் புரிந்துகொண்டிருக்கிறேன்'' என்று அவனைவிட்டு விரிட்டென்று எழுந்தாள். அவள் முகத்தில் அவனைப் பழிவாங்கவேண்டுமென்ற உணர்ச்சி பிரதிபலித்தது.

"உங்களை எனக்கு நன்ருகத் தெரியும். உங்களுக்கு என்னமோ என்னைப் பிடிக்கவில்லே. என்னை எப்படியாவது தொலைத்து முழுகவேண்டுமென்று முடிவுக்கு வந்துவிட்டீர்கள். அதற்காக விவாகரத்தை என்மீது திணிக்கிறீர்கள். அதற்காக உங்களுக்கு கோடி கோடி வந்தனம். நீங்கள் நினைச்கிறது மாதிரி நான் அவ்வளவு முட்டாள் அல்ல. நான் விவாகரத்தையே ஒத்துக்கொள்ளமாட்டேன். நான் தங்களை விட்டுப்பிரியவுமாட்டேன். நான் மாட்டேன்...மாட்டேன்.''
"முதலில் எனக்கு சமுதாயத்தில் உள்ள அந்தஸ்தை இழந்து விடமாட்டேன்'' அவள் மேலும் "இரண்டாவதாக எனக்கு வயது 32. ரிஸ்ஸுக்கு வயது 23; அவன் ஒரு வருஷத்திலேயே என்னை வேண்டாமென்று சொல்லிவிடுவான். அது மட்டுமல்ல; நான் இன்னமும் அதிகமாக வெள்ளையாகச் சொல்லவேண்டுமானுல் — என்னுடைய உணர்ச்சி அதிக நாளைக்கு நீடிக்காது ... ... ... ஆகவே நான் தங்களைவிட்டுப் பிரியேன்''.

"நான் உன்னை வீட்டைவிட்டு அப்புறப்படுத்தி விடுவேன்'' என்று தரையை உதைத்து, "நான் உன்னை வெளியேற்றியே தீருவேன், குச்சுக்காரி, வேஷக்காரி'' என்று கர்ஜித்தார்.

"ஓஹோ—சரி, சரி'' என்று சொல்லி அவள் வெளியே போய்விட்டாள்.

வெளியில் அப்பொழுது பட்டப் பகலாக இருந்தது. ஆனுல்...டாக்டர் மேஜைமீது உட்கார்ந்து, பென்சிலால் எதோ எழுதிக்கொண்டிருந்தார்.

"அன்புள்ள ஐயா ... ... ...சிறிய கால்" பின் அவர் இங்குமங்கும் நடந்தார். பத்தாண்டுகளுக்கு முன், அவருக்குக் கல்யாணமான பிற்பாடு எடுத்த புகைப்படத்தை, நீண்ட நேரம் நின்று பார்த்துக்கொண்டிருந்தார். அது அவர்களுடைய குடும்பப் படம். அவருடைய மாமனர், மாமியார், இருபது வயது மனைவி டிமிட்டிரிவின, வாலிபஞன தான் எல்லோரும் சேர்ந்து எடுத்த படம். பிரிவி கவுன்சிலரான மாமனர் ஆடம்பரக்காரர்; பருத்த மாமியார் பட்டுப்பூச்சி போன்றவள்; ஆனல் தன் மகள் இஷ்டத்திற்கு நடக்கும்படி விட்டுவிட்டவள். அவளோ பட்டுப்பூச்சியல்ல. பெரிய ஒரு காண்டாமிருகம். அவள் கண்ணும், மூஞ்சியும் களவையும் கள்ளத் தனத்தையுமே காட்டுகின்றன என்று எண்ணமிட்டார்.

அவர் தன்னைப்பற்றி ஒன்றுமறியாத அப்பாவி; எதையும் உள்ளது உள்ளபடி உணரும் வெள்ளை உள்ளம் படைத்தவன்; எளியவன்; கள்ளங்கபடமற்றவன்; குற்றமற்றவன் என்று நினைத்துக்கொண்டார்.

"ஒரு பாதிரியின் மகன்,செல்வமாக வளர்க்கப்பட்டவன், உயர்தர படிப்புப்பெற்று டாக்டர் தொழில் செய்துவருபவன் கேவலம் ஒரு அபலையிடம், கால்காசு பொருத, தனக்குச் சம்பந்தமில்லாத அயலாளிடம், 'கழுதை'யிடம் அவமானப்படுவது, அடங்கிக்கிடப்பது எப்படி" என்று மீண்டும் மீண்டும் அவர் மண்டையைப் போட்டுக் குழப்பிக்கொண்டிருந்தார்.

காலை மணி 11 அடித்தது. டாக்டர் உடுப்புகளை மாட்டிக்கொண்டு ஆஸ்பத்திரிக்குப் புறப்படும் சமயம், வேலைக்காரன் உள்ளே வந்தான். அவனை "என்ன?" என்று வினவினர் டாக்டர்.

"அம்மா எழுந்திருந்துட்டாங்க. நீங்கள் இராத்திரி கொடுப்பதாகச் சொன்ன இருபத்தைந்து ரூபிளையும் மறந்துவிடாமல் கேட்டு வாங்கிவரச் சொன்னங்க" என்ருன். ○

# மூன்று ஆண்டுகளில்...

அன்று அந்திப்பொழுது. அங்குமிங்கும் வீடுகளில் விளக்கேற்றும் வெளிச்சம் தென்பட்டது. தெருக்கோடியில் சந்திரனும் வெளுத்துத் தோன்றினன். அப்பொழுது அர்ச் பேதுரு ஆலயத்தின் சமீபமாகக் கிடந்த நாற்காலியில் லப்தேவ் உட்கார்ந்திருந்தான். அந்திப்பிரார்த்தனை முடிந்து வரும் யூலியாவுக்காக அவன் காத்துக்கொண்டிருந்தான். ஆம்... அவள் அந்தப்பக்கந்தான் போவாள். அவளைக்கண்டு பேசி அவளோடு அன்று மாலைப்பொழுதைப் போக்க வேண்டுமென்பது அவனது ஆசை.

அவன் அந்த இடத்தில் கிட்டத்தட்ட ஒன்றரை மணி நேரத்திற்கதிகமாக உட்கார்ந்திருந்தான். அவன் அச்சமயம் தனது மாஸ்கோ இல்லத்தைப் பற்றியும், தன் மாஸ்கோ நண்பர்களைப் பற்றியும், தன் நண்பன் பீட்டரைப் பற்றியும் சிந்தனை செய்த வண்ணமாயிருந்தான். அவன் தன்னெதிரே ஆடாது, அசையாது நிற்கும் மரங்களையும், தன் கண்முன்னே புழுதிகளைக் கிளப்பிக்கொண்டு கழுத்து மணியோசையோடு வரும் மாட்டு மந்தையையும், 'ட்ரியோ', 'ட்ரியோ' என்று ஓட்டிவரும் மாட்டிடையனையும் பார்த்து தானும் இப்படி காத்திருக்கிறோமே என்று எண்ணி பாதி ஆச்சர்யமுற்றவனாக உட்கார்ந்திருந்தான். அவனுக்கு அப்பொழுது மாஸ்கோவில் நடந்த ஒரு சம்பாஷணை அவன் மனக்கண்முன் தோன்றியது. அவன் 'காதல்' செலுத்தாது ஒருவரால் வாழ முடியுமென்றும், 'காதல்' என்பதே பொருளற்ற பேச்சென்றும், ஏதோ ஆணும் பெண்ணும் காதல் புரிவது உடலின் கவர்ச்சியேயென்றும் விவாதித்தது அவனுக்கு ஞாபகத்திற்கு வந்தது. அன்றைய அந்த சம்பாஷணைக்காக அவன் வருந்தினன். ஆனாலும் அவன் அப்பொழுதுங்கூட காதல் என்றால் என்னவென்று

விளக்கங்கூற முடியாதவனாக இருந்தான் என்பதில் ஆச்சர்யமில்லை.

பிரார்த்தனை முடிந்து மக்கள் வெளியேறி வந்தனர். லப்தேவ் தன் கண்களைக் கசக்கிக்கொண்டு இருட்டில் வருபவர்களை உற்றுநோக்கி வந்தான். தேவாலயத்தின் மணியோசையும் ஓய்ந்தது. கோயில் பாதிரியாரும் வெளியே வந்துவிட்டார். பிரார்த்தனைக்காகப் போடப்பட்ட விசேஷ வெளிச்சங்களும் அணைந்துவிட்டது. ஆனால் அங்கிருந்த போதிய வெளிச்சத்தில் ஜனங்கள் போவதும், வருவதுமாகயிருந்தனர். ஒருசிலர் ஆங்காங்கு நின்று பேசிக்கொண்டிருந்தனர். கடைசியாக தனக்குவேண்டிய பழகிய குரல் அவன் காதில் விழுந்தது. அவனுடைய இருதயம் படபடவென்று அடித்துக்கொண்டது. ஆனால் அவன் யூலியாவோடு வேறு இரு பெண்கள் பேசிக்கொண்டு வருவதைக் கண்டு கலக்கமடைந்தான். யூலியா தனியாக வருவாளென்றே அவன் எதிர்பார்த்திருந்தான்...பாவம்!

"என்ன அக்ரமம்! என்ன அக்ரமம்!" என்று அவனுடைய சந்தோஷ உணர்ச்சியோடு முணுமுணுத்துக்கொண்டான்.

தெருக்கோடியில் திரும்பும்பொழுது அவள் தனது நண்பர்களிடமிருந்து விடைபெற்றுக்கொள்ளத் திரும்பும் சமயம் லப்தேவ் பார்த்துவிட்டான்.

"நான் உன்னைப் பார்க்கத்தான் வந்தேன். உன் அப்பா வீட்டில் இருக்கிறாரா? அவரோடு பொழுது போக்கலாமென்று வருகிறேன்" என்றான்.

"அனேகமாக இருப்பார். அவர் இதற்குள் கிளப்புக்குப் போயிருக்கமாட்டார்." என்றாள்.

வழிநெடுக மாத்தோட்டங்கள் இருந்தன. பங்களாக்களின் வேலியோரங்களிலிருந்த எலுமிச்சை மரங்களின் வாசனையும், தென்றல் காற்றும், சந்திர ஒளியின் ரம்யமும் லப்தேவை வசீகரித்தன. அதோடு ஆங்காங்கு கட்டிடங்

களினுள்ளிருந்து வந்த குதூகலிப்பும், கேலியும், சிரிப்பும் அவனைப் பரவசப்படுத்தியது. அவன் அப்பொழுது அவளைக் கட்டியணைத்து அவளுடைய கன்னங்களிலும், கைகளிலும், தோள்களிலும் ஆயிர முத்தங்களிட்டு அவள் கால்களில் வீழ்ந்து அவளுக்காக எவ்வளவு நேரந்தான் காத்திருந்தோமென்பதைச் சொல்லிப் பரவசப்படலாமென நினைத்தான். போதாக்குறைக்கு அவளுடைய கழுத்திலும், முகத்திலுமிருந்துவீசிய பவுடர்வாசனை அவனை மயக்கியது. அதோடு, முன் அவன் கடவுள் நம்பிக்கையோடு இருந்த பொழுது, அக்கால மாலைநேரங்களில் சர்ச்சுக்குப் போய்வந்ததும், அப்பொழுது கட்டிளம் குமரிகளை காதல் களியாட்டத்தோடு விரும்பியதும் ஞாபகத்திற்கு வந்தது. ஆனால், யூலியா தன்னை விரும்பவில்லை யென்ற எண்ணம் வந்ததும் அவன் கனவு கொண்டிருந்த சகல இன்பமும் அடியோடு ஒழிந்ததாக நினைத்தான்.

அவள் அவனுடைய தங்கையின் உடல் நிலையைப்பற்றி பரிவோடு கேட்டாள். அவன் தங்கை நினு, இரண்டு மாதங்களுக்குமுன் புற்றுநோய்க்காளாகி சஸ்த்திர சிகிச்சை செய்துகொண்டிருந்தாள். ஆனால் அந்நோய் இன்னும் குணமாகவில்லை.

“நான் அவளைக் காலையில் பார்க்க விரும்பினேன். சென்றவாரம் பார்த்தபொழுது அவ்வளவாக இளைத்துக் காணப்படவில்லை” என்றாள் யூலியா.

“அவள் இப்பொழுது என்னமோ நாளுக்குநாள் மெலிந்துதான் வருகிறாள். அவள் மெலிவுக்கு காரணமென்னவென்று தெரியவில்லை” என்றான்.

அவள் ஒருவினாடி மௌனத்திற்குப்பின் “அவள் என்ன அழகாயிருந்தாள், நல்ல சிவப்புடன் சிறந்த உடற்கட்டோடு விளங்கினாள்; அவளை நாங்கள் மாஸ்கோ பெண் என்று அழைப்போம்; விடுமுறை நாட்களில் அவள் சாதாரணக் குடியானப்பெண் மாதிரி உடையுடுத்தி வருவாள்; அப்பொழுது என்ன அழகாயிருப்பாள் தெரியுமா? அவள்

சிரிப்பே தனிரகம்; என்ன கவர்ச்சி ஆஹா! என்ன கவர்ச்சி''
என்றாள்.

டாக்டர் செர்ஜீ வீட்டில்தான் இருந்தார். அவர் பருமனானவர்; உருண்ட முகமுடையவர்; முழங்காலுக்குக் கீழ் தொங்கும் நீண்ட கோட் அணிந்திருந்தார். அவர் இங்கு மங்கும் உலாவிக்கொண்டிருந்தார்.

''லப்தேவ் தங்களைப் பார்க்க விரும்புகிறார்'' என்றாள் மகள் தந்தையிடம்.

''வரச்சொல்'' என்று சொல்லி, லப்தேவை ''என்ன சமாசாரம்'' என்று முகமன் கூறி வரவேற்றார்.

அந்த அறை அப்பொழுது இருட்டாகவே இருந்தது. லப்தேவ் நின்றுகொண்டே தன் சகோதரி இளைத்து மெலிந்து வருவதற்கு என்ன செய்யலாமென்றும், அவள் இரவில் தூங்குவதற்கு ஏதேனும் மருந்து கொடுக்கலாமாவென்றும் கேட்டான். அதே கேள்விகளை அவரிடம் காலையிலேயும் கேட்டிருந்ததால் அவனுக்கு அசடுதட்டிவிட்டது. அதைச் சமாளித்துக்கொண்டு தான்வந்து தொந்தரவு செய்வதற்காக மன்னிக்கவேண்டுமென்று கேட்டுக்கொண்டு ''மாஸ்கோவிலிருந்து புற்றுநோய் சிகிச்சை நிபுணரான ஒரு ஸ்பெஷலிஸ்ட்டை வரவழைக்கலாமா''? என்று கேட்டான்.

டாக்டர் பெருமூச்சுவிட்டு, சைகையால் 'பயன்படாது' என்றார்.

அப்பொழுது யூலியா வீட்டில் விளக்கேற்றினாள். அவள் மெதுவாக படிக்கட்டு ஏறிவந்த சோர்வும், முக வெளுப்பும் அவள் களைப்புற்றிருக்கிறாள் என்பதைக் காட்டின. அவள் சோபாவில் உட்கார்ந்து கைகளை மடிமீது வைத்தபடியே யோசனையில் மூழ்கியிருந்தாள்.

லப்தேவுக்கு தான் அழகனல்ல என்று தெரியும். கன்னங்கள் ஒட்டியவன், மெலிந்தவன், வாயாடி; ஆனால், பெண்களை வசீகரிக்கும் பேச்சாற்றல் படைத்தவனுமல்ல. இத்

தனையும் உணர்ந்து தன்னை நொந்துகொண்டான். இருந் தாலும் அவன் தன் சகோதரியின் வியாதியைப் பற்றியும், வைத்திய சிகிச்சையைப் பற்றியும் டாக்டரிடம் பேசிக் கொண்டிருந்தான். அதோடு, மாஸ்கோவில் ஒரு அகதி நிலையம் ஏற்படுத்த விரும்பியதையும் தெரிவித்தான்.

யூலியா, அவன் முன்னிலையில் சாதாரணமாக சம்பா ஷணையில் கலந்து கொண்டதில்லை. ஒருக்கால் அவன்தான் தன் காதலன் என்ற உணர்வோ — என்னவோ!

அவள் மாலைப் பிரார்த்தனைக்குப் போய் வந்தபின் அவள் உடுப்புகளை மாற்றிக்கொள்ளவில்லை. தேநீர் அருந்த அவள் அறைக்கும் போகவில்லை. அதனால் அவள் மீண்டும் வெளியே போகப்போகிறாள் என்று லப்தேவ் நினைத்தான். அப்பொழுது யூலியா எழுந்து மரியாதைக்காக லப்தேவிடம் தன் கைகளை நீட்டி "என்னை மன்னியுங்கள் நான் வெளியே போகவேண்டியிருக்கிறது தங்கள் சகோதரிக்கு என் அன்பைத் தெரிவியுங்கள்" என்று சொல்லி விரிட்டென்று வெளியேறினாள்.

லப்தேவும் சிறிது நேரத்திற்குப் பின் டாக்டரிடம் விடைபெற்றுக்கொண்டு வீடுதிரும்பினான். அவன் திரும் பிப் போகும்பொழுது சந்திரன் மேலே கிளம்பிவிட்டான். முன்மாதிரி எலுமிச்ச மரங்களின் வாசனையும், நிலவொளி யும் அவனுக்கு இன்பமளிக்கவில்லை, அதோடு அவன், வைத்தியத்தைப் பற்றியும், அகதி நிலையத்தைப் பற்றியும் ஏன் பேசினோமென்று நினைத்தான்.

வீட்டிற்குப் போனதும் அவனுடைய சகோதரியிடம் நேரே சென்றான். நிறை படுத்த படுக்கையில் பார்வைக்கு ஆரோக்யம் உள்ளவளாகக் காணப்பட்டாள். அவள் தூங்கும்பொழுது பிரேதக்களை தென்பட்டது. அவள் பக்கத்தில் அவளின் பத்து வயது மகள் சாஷா உட்கார்ந்து உரக்கப் படித்துக்கொண்டிருந்தாள். "அலோஷா! அதோ வந்துவிட்டார்" என்று மெதுவாக அவள் சொல்லிக்கொண் டாள்.

---

"அலோஷா"— லப்தேவை செல்லமாக அழைக்கும் பெயர்.

நோயாளியான நினுவின் பக்கத்தில் லப்தேவும், சாஷாவும் மாறி மாறி உட்கார்ந்து அவளுக்குப் பணிவிடைசெய்து வந்தார்கள். இப்பொழுது லப்தேவ் வந்ததும், சாஷா தன்னுடைய புத்தகத்தை மூடிவிட்டு நிசப்தமாக அறையை விட்டு வெளியேறினாள். லப்தேவ் டிராயரிலிருந்து ஒரு சரித்திரப் புத்தகத்தை எடுத்து அதில் படிக்கவேண்டிய சரியான பக்கத்தை எடுத்து உரக்கப் படிக்கலானான்.

நினு ஒரு மாஸ்கோ வியாபாரியின் பெண். அவளும், அவளுடைய இரண்டு சகோதரர்களும் அவர்களுடைய குழந்தைப் பருவத்தையும், வாலிப பருவத்தையும் பியாட்ஸ்கி தெருவில் அவர்கள் இல்லத்தில் கழித்தார்கள். அவர்களுடைய தகப்பனார் கர்ண கடூரமானவர். நினுவைக்கூட இரண்டு மூன்று தடவை சவுக்கால் அடித்திருக்கிறார். அவர்களுடைய தாய் அவர்களை பால்யத்திலேயே விட்டு இறந்துவிட்டாள். அவர்கள் வீட்டிற்கு அடிக்கடி குருமார்களும், சாமியார்களும் வந்து குடித்தும் சாப்பிட்டும் போவார்கள். அவர்கள் உள்ளொன்று வைத்து புறமொன்றுபேசி தங்களுக்கு பிடிக்காதவரையும் போற்றி விட்டுப்போவார்கள். பையன்களுக்கு பள்ளிக்கூடம் போய் கல்விஞானம் பெற வாய்ப்பு இருந்தது. நினுவுக்கு அவ் வாய்ப்பு இல்லை. ஆனால் எப்படியோ எழுதப்படிக்கத் தெரிந்து, கொஞ்சம் சரித்திரசம்பந்தக் கதைகளை படித்துத் தெரிந்திருந்தாள்.

பதினேழு வருஷங்களுக்குமுன் அவளுக்கு இருபத்திரண்டு வயதாக இருக்கும்பொழுது கோடை விடுமுறை நாளொன்றில் அவள் பானுராவ் என்ற நிலச்சுவான்தாரரை அவளுடைய தந்தையின் கருத்துக்கு விரோதமாக காதல் மணம் செய்துகொண்டாள்.

பானுராவ் ஒரு கட்டழகன். ஆனால் திமிர்பிடித்தவன். தன் தந்தையையே பிரயோஜனமற்றவனென்று கருதி அடித்துத் துரத்திவிட்டான். அவன் சீட்டியடிப்பதும், புகை பிடிப்பதும் சர்வசாதாரணம். அதிலும், கோயில்

விளக்கில் சிகரட் பற்றவைப்பதில் அவனுக்கு அலாதி குஷி. அவன் தனக்கு ஸ்ரீதனம் வரவேண்டுமென்று தன்னுடைய மாமனாருக்கு கடிதம் எழுதியிருந்தான். அதற்கு அந்த மாமனார், பெண்ணின் தாயார் வைத்துப்போன ஆடை ஆபரணங்களையும், வெள்ளி சாமான்களையும், தட்டுமுட்டு சாமான்களையும், முப்பதினாயிரம் ரூபிளையும் சேர்த்து தன் மகளுக்கு அனுப்புவதாகவும், ஆனால் அதில் தந்தையாகிய தன்னுடைய ஆசீர்வாதம் இல்லை என்றும் குறிப்பிட்டு எழுதியிருந்தார். பின்னாலும் அவர் இருபதினாயிரம் ரூபிள் அனுப்பிவைத்தார். ஆனால் இந்தப் பணமும், இதற்குமுன் கிடைத்த ஸ்ரீதனமும் விரயமாகி விட்டன. கடைசியாக பானுராவ் அவருடைய நிலபுலத்தை விற்று குடும்பத்தோடு பட்டணத்தைப்பார்க்க வந்து விட்டார். அங்கு மாகாண சர்க்காரில் ஒரு உத்தியோகத்தில் அமர்ந்தார். இந்தப் பட்டணவாசம் வேறொருத்தியோடு குடித்தனம் பண்ணுகிற அளவுக்கு ஆகிவிட்டது. முதலில் இது இரகசியமாயிருந்து, பின் அம்பல வாழ்வாகிவிட்டது.

நினு, அவள் பட்ட கஷ்டங்களையெல்லாம் நினைத்துப் பார்த்து படுத்துக்கொண்டிருந்தாள். அவள் தனக்கேற்பட்ட வியாதிக்கு குடும்பத் தொல்லையும், புருஷனின் இரக்கமற்ற நடத்தையுமே காரணம் என்று நம்பினாள். அதோடு அவள் அழுதழுது நொந்துபோனதுதான் அவளின் மோச நிலைக்குக் காரணமெனவும் உணர்ந்தாள்.

லப்தேவ் புத்தகத்தைப் படித்து முடித்ததும் "இன்று இவ்வளவுதான்-நாளை வேறுபுத்தகம் படிப்போம்" என்றான். அதற்கு நினு விழுந்து விழுந்து சிரித்தாள். வியாதியால் அவள் மனம் பலஹீனமடைந்ததால் அவள் காரணமில்லாமலே எதற்கெடுத்தாலும் சிரிக்க ஆரம்பித்து விட்டாள் என்பது லப்தேவுக்குத் தெரியும்.

"நீ பகல் சாப்பாட்டிற்குமுன் வெளியே போயிருந்த பொழுது யூலியா இங்கு வந்திருந்தாள்; நான் புரிந்து கொண்ட அளவுக்கு அவளுடைய தகப்பனாரிடம் தக்க

நம்பிக்கையில்லை; அவள் எனக்காக பிரார்த்தனை செய்யும்படி சாமியாருக்கு ரகசியமாக கடிதம் எழுதும்படி சொன்னாள்; அதோ தன்னுடைய பொட்டணத்தை ஏதோ யூலியா இங்கு மறந்து வைத்துவிட்டுப்போய்விட்டாள்; அதை நாளையதினம் அவளிடம் கொண்டுபோய் கொடுத்துவிடு." என்று சொல்லி பின்னும் சிறிது நேரத்திற்குப்பின் "முடிவு ஏற்பட்டுவிட்டால் டாக்டர்களோ அல்லது சாமியார்களோ என்னசெய்துவிட முடியும்." என்றாள் நினா தன் சகோதரனிடம்.

'நினா நீ தூங்கு' என்று பேச்சைமாற்றினான் லப்தேவ்.

"ஓ...நான் தூங்கமாட்டேன்; நான் படுத்து புலம்பிக் கொண்டுதான் இருப்பேன்." என்றாள்.

"அப்படி என்ன புலம்பல்?" என்றான்.

"என்னுடைய குழந்தைகளைப் பற்றி, என்னைப் பற்றி, உன்னுடைய வாழ்க்கையைப் பற்றி ஆம்! நான் ரொம்பபாடு பட்டிருக்கிறேன்; அலோஷா நினைத்தாலே—ஓ கடவுளே!" என்று சொல்லி சிரித்தாள். நான் ஐந்து குழந்தைகளைப் பெற்றெடுத்தேன்; மூன்றை உடனே பறிகொடுத்துவிட்டேன்; நான் பிரசவ வேதனையால் அவதிப் பட்டுக்கொண்டிருப்பேன்; அப்பொழுது என்னுடைய கணவர் வேறொருத்தியோடு உட்கார்ந்து சல்லாபமாடிக்கொண்டிருப்பார்; அப்பொழுது மருத்துவச்சியைக் கூப்பிடவோ, வைத்தியரை அழைத்துவரவோ ஆளிருக்காது; நானே வேலைக்காரனைத் தேடிக்கொண்டு உள்ளேயும், வெளியேயும் போகவேண்டும். அங்கு யூதர்களும், லேவாதேவிக்காரர்களும் வியாபாரிகளும் என் கணவருக்காகக் காத்திருப்பார்கள்; அப்பொழுது என் தலையே கிறுகிறுக்க ஆரம்பித்துவிடும்; அவர் என்மேல் காதல்கொள்ளவில்லை; இதை என்னிடம் பகிரங்கமாகச் சொன்னது கிடையாது; நான் இப்பொழுது என்னமோ பெருத்துப்போய் விட்டேன்; நான் வாலிபமாக யிருந்த பொழுது இது எனக்கு எவ்வளவு வேதனையாக இருந்தது தெரியுமா? தாங்கமுடியாத வேதனை; ஆம் தாங்கமுடியாது

தான்; ஒருசமயம் நாங்கள் கிராமத்திலிருக்கும்சமயம் அவர் வேறொருத்தியோடு தோட்டத்தில் சல்லாபமாக இருக்கும்பொழுது நான் எதிரே போய்விட்டேன். அப்பொழுது என் நிலை பித்தம் பிடித்தது போலாகியது. எங்கு போனேன் என்று எனக்கே தெரியாது. நான் கடைசியாக மாதா கோயிலில் மண்டியிட்டு 'ஓ மாதாவே' என்று பிரார்த்தித்தேன். அன்று இரவு பால்நிலவு வீசிக் கொண்டிருந்தது...

இவ்விதம் பேசிக்கொண்டிருக்கும்பொழுதே அவளுக்கு மூச்சுவாங்க ஆரம்பித்தது. சிறிதுநேரம் இளைப்பாறியவுடன் அவளுடைய சகோதரனின் கையைப் பிடித்துக்கொண்டு மெதுவான குரலில் "அலோஷா — நீ எவ்வளவு பிரியமாய் இருக்கிறாய்... நீ வளர்ந்துவிட்டாய்" என்றாள். கடைசியாக லப்தேவ் தன் சகோதரிக்குச் சமாதானம் சொல்லிவிட்டுப் படுக்கைக்குப் புறப்பட்டான். அவன் போகும்பொழுது யூலியா மறந்துவிட்டுப்போன பொட்டணத்தைக் கையோடேயே எடுத்துச்சென்றான்.

அப்பொழுது இரவு அதிகநேரமானாலும் வேலைக்காரர்கள் அனைவருமே தேநீர் குடித்துக்கொண்டிருந்தார்கள். குழந்தைகள்கூட படுக்கைக்குப்போகாமல் சாப்பாட்டறையிலேயே உட்கார்ந்திருந்தார்கள். அப்பொழுது புகை சூழ்ந்து விளக்கு அணையும் தருவாயில் இருந்ததைக்கூட யாரும் கவனிக்கவில்லை.

பெரியவர்களும், சிறியவர்களும் ஏதோ கலக்கமடைந்திருந்தனர். அப்பொழுது ஹாலிலிருந்த ஜாடி உடைந்ததும் சோமபானம் 'புஸ்' என்று இரைச்சலுண்டாக்கியது. நினா பூட்ஸை மாட்டிக்கொள்ளும்பொழுது சுண்டெலி பூட்ஸிலிருந்து வெளியேறியது. இவைகளையெல்லாம் கெட்ட சகுனங்களென்று அனைவரும் நம்பி பயந்திருந்தனர். அதிலும் சிறுவர்கள்பாடோ சொல்லவேண்டியதில்லை. பெரிய பெண்ணான சாஷா அசைவற்ற சிலைபோல் நாற்காலியில் மெலிந்து உட்கார்ந்திருந்தாள்; முகம் வெளுத்துப்போய்

இருந்தது; அவளுடைய ஏழுவயது தங்கை அவள் பக்கத்தில் நின்றுகொண்டு வெளிச்ச நிழலைப் பார்த்துக்கொண்டிருந்தாள்.

லப்தேவ் கீழ் தளத்திலிருந்த தன்னுடைய அறைக்குச் சென்றான். அந்த அறை எப்போதுமே வாசனைமயமானது. அப்பொழுது அவனுடைய அறையில் நினுவின் கணவனான பானுராவ் அன்றையப் பத்திரிகையைப் புரட்டிப் புரட்டி வாசித்துக்கொண்டிருந்தான். லப்தேவ் அவனுக்கு தலையை அசைத்து வணக்கம் செலுத்திவிட்டு அவன் எதிரே உட்கார்ந்தான். இருவரும் ஒன்றுமே பேசவில்லை. இம்மாதிரியே அவர்கள் பேசாமலேயே அநேக மாலைப்பொழுதைக் கழித்திருக்கிறார்கள். இதற்காக அவர்கள் யாரும் அதிர்ப்தியடைந்தது கிடையாது.

சிறிய பெண்கள் மெத்தைப் படிகளிலிருந்து கீழே இறங்கிவந்து அன்றைய வந்தனத்தைச் செலுத்தினார்கள். அத்தனையும் மௌனமாகவே இருந்தது. பானுராவ் அவர்கள்மீது மும்முறை சிலுவைக் குறியிட்டு அவனுடைய கையை முத்தமிடக்கொடுத்தான். அவர்கள் லப்தேவிடம் சென்றார்கள். லப்தேவும் அம்மாதிரியே சிலுவைக்குறியிட்டு முத்தமிடக் கையைக் கொடுத்தான். இந்த சடங்கு, சம்பிரதாயங்கள் நாள் தவறாமல் ஒவ்வொருநாள் மாலையும் நடப்பதுண்டு. குழந்தைகள் படுக்கைக்குப்போன பிற்பாடு பானுராவ் பத்திரிகையை மேஜைமேல் போட்டுவிட்டு "நம்முடைய நகரத்தில் ரசிப்பதற்கு எதுவுமில்லை" என்று சொல்லி பெருமூச்சுவிட்டு "ஏதோ ஒரு மாறுதலுக்காக வழிவகையை கண்டுபிடித்துவிட்டாயே என்பதில் எனக்குத் திருப்தி" என்றான்.

" தாங்கள் என்ன சொல்லுகிறீர்கள் ? " என்று கேட்டான் லப்தேவ்.

"தாங்கள் டாக்டர் பெலவின் வீட்டிலிருந்து வந்ததைப் பார்த்தேன். அங்கு அந்த வயதானவரைப் பார்க்கப் போக மாட்டீர்களென்று நினைக்கிறேன்" "வாஸ்தவம்தான்" என்று

சிரித்துக்கொண்டே லப்தேவ் சொன்னான். "ஆம் வாஸ்த வத்திலேயே நீங்கள் அலைந்து தேடிப்பார்த்தாலும் அந்த வயதானவரைப்போல காட்டாளை கண்டுபிடிக்கமுடியாது. அவர் என்ன அநாகரிகம்! படித்தவர்களாகிய நீங்கள் நாகரிக மானவர்களையும், விஷயஞானம் தெரிந்தவர்களையும் விரும்பு வீர்கள்; ஆனால் இங்கு அப்பேர்பட்டவர்களே அகப்பட மாட்டார்கள். இங்கு காட்டுத்தனமும், கருமித்தனமும், அற்பத்தனமுந்தான் விரைவி நிற்கும். இந்த ஊரில் விஷய ஞானம் தெரிந்தவர்கள் எவ்வளவுபேர் இருக்கிறார்கள்? இந்த நகரத்தில் 28 டாக்டர்கள் இருக்கிறார்கள். அவர்கள் எப்படியோ பணத்தை தேட்டைபோட்டுவிட்டார்கள். அவர் கள் சொந்தமாக பங்களாக்களில் வாசம் பண்ணுகிறார்கள். ஆனால் பொதுமக்களோ நிரந்தரமாக அன்றுகண்ட திரு மேனிகளாகவே இருக்கின்றனர். நினைவுக்கு ஒரு சாதாரண ஆப்ரேஷன்தான்; அதற்கு மாஸ்கோவிலிருந்து சர்ஜன் வரவேண்டியிருக்கிறது. இங்குள்ள எந்த டாக்டருக்குமே ஆப்ரேஷன் செய்யத்தெரியாது. அவர்களுக்குத் தக்க வைத்தியமும் செய்யத்தெரியாது. அதை அவர்களாக புரிந்துகொள்வதுமில்லை. உதாரணத்திற்கு வேண்டுமானால் அவர்களை "புற்று நோய்" என்றால் என்னவென்று கேட்டுப் பாருங்களேன். அது எப்படி ஏற்படுகிறதென்று சொல் லட்டுமே".

பானுராவ் தானே புற்றுநோயைப்பற்றி விளக்கம்கூற முற்பட்டான். அவனுக்கு சயன்ஸ் சம்பந்தமான விஷயங் களில் கலாஞானமிருந்தது. அவனுக்கு ரசாயனம், பூத பௌதிகம், வானசாஸ்திரம் முதலியவை தெரிந்திருந்தது. அவன் தனக்குத்தெரிந்த விஷயங்களை ஆர அமர அமைதலாக சொல்லிவந்தான்.

"எனக்கு பசிக்கிறது; நான் ஏதேனும் சாப்பிட்டாக வேண்டும்" என்றான் லப்தேவ்.

உடனே மேலேசென்று இருவரும் சாப்பிட்டார்கள். லப்தேவ் ஒருகோப்பை வாட்கா சாப்பிட்டு, தேநீர் குடித்

தான். பானுராவ் குடிக்கவேயில்லை. அவனிடம் குடிப் பழக்கமே கிடையாது. சூதாட்டமும் கிடையாது. ஆனாலும் தன் சொத்துபூராவும் போய், தன் மனைவியுடைய செல்வமும் போய் கடனாளியாகவுமாகிவிட்டான்.

பானுராவ் அபார ஆடம்பரப்பிரியன். விருந்து வைப்பதிலும், கச்சேரி நடத்துவதிலும் அவனுக்கு அலாதி குஷி. தனக்கு வணங்கி வந்தனம் வைப்பவர்களுக்கு நோட்டு நோட்டாகக் கொடுப்பான். எந்த லாட்டரியையும் விட்டுவிட மாட்டான். எதற்கும் நன்கொடை கொடுப்பான். பெண்களுடைய பிறந்தநாள் வைபவத்திற்கு இனிய வெகுமதிகளை அனுப்புவான். அவன் ஆடம்பரப் பொருள்களை அதிகமாக வாங்கிக் குவிப்பான். கோப்பைகள், கண்ணாடிகளுக்கு ஸ்டாண்டுகள், டைகள், பொத்தான்கள், ஊன்றுகோல்கள், செண்டுகள், சிகரட் ஹோல்டர்கள், பைப்புகள், மடிமீது தவழும் நாய்கள், கிளிப்பிள்ளைகள், ஜப்பான் சாமான்கள், பொம்மைகள் முதலியவற்றை விதவிதமாக வாங்குவான். அவன் படுக்கையறையே ஒரு தனியழகு நிறைந்தது. அவன் கட்டில் கருங்காலியில் செய்யப்பட்டு முத்துக்கள் பதிக்கப் பட்டதாகும். உடுப்புகள் ஒவ்வொரு நேரத்திற்கும் ஒவ்வொருவகை. மிக நேர்த்தியான உடுப்புகளை சர்வசாதாரணமாக உபயோகப்படுத்துவான். இத்தனையிலும் தினந்தோறும் செலவுசெய்வான். அவனே பணம் 'பிரளயம்' ஆகிறதென்றும் சொல்லுவான்.

இரவு சாப்பாட்டிற்குப் பின் பெருமூச்சுவிட்டவாறு "இவ்வுலகத்தில் அனைத்திற்கும் ஒரு முடிவு இருக்கிறது." பின்னும் அவன் மெதுவாகச் சொன்னான்... "நீங்கள் காதலித்து கஷ்டப்படப்போகிறீர்கள்; நீங்கள் காதலைக்கடந்து ஏமாறப்போகிறீர்கள்; பெண்களே ஏமாற்றும் சாகஸக்காரர்கள். அதில் விதிவிலக்குக் கிடையாது. ஆம்! நீங்களும் அவதியுறப்போகிறீர்கள். அவர்கள் அப்பேர்பட்ட விசுவாசமற்றவர்கள். ஆனால் காலக்கிரமத்தில் இவைகளையெல்லாம் நீங்களே அற்பமென்றும், சர்வசாதாரணமென்றும் நினைத்து நிம்மதியடைந்து விடுவீர்கள்...".

லப்தேவ் களைப்பால் குடித்துத் தீர்த்தான். பானுராவ் சாப்பாட்டுக்குப்பின் அவனுடைய வேறோர் வீட்டுக்குப் போனான். லப்தேவ் அவனை வழியனுப்ப சிறிது தூரம் சென்று திரும்பினான். அன்றைய நிலாவும் பால்போல் வெண்மையாக பிரகாசித்துக்கொண்டிருந்தது.

மீண்டும் அவன் அறையை அடைந்ததும், நாற்காலி மீதிருந்த யூலியாவின் பொட்டணம் கண்ணில்பட்டது. அவன் அதை எடுத்து ஆவலோடு முத்தமிட்டான். அந்தப் பொட்டணம் பழய பட்டுத்துணிகளாலானது. அது ஏதோ தன்னுடைய மகிழ்ச்சிப்பொருளென்று கருதினான்.

அவன் மீண்டும் அமைதியாக நாற்காலியில் அமர்ந்து பொட்டணத்தை மடிமீதுவைத்து தன் மாஸ்கோ நண்பனொருவனுக்கு என் அருமை கோஸ்டியா, என ஆரம்பித்து கடிதம் எழுதினான்.

"உனக்கு ஒரு நற்செய்தி! மீண்டும் நான் காதல் கொண்டுள்ளேன். "மீண்டும்" ஆம்! நான் மீண்டும் என்று எழுதுகிறேன். ஏனென்றால், ஆறு வருஷங்களுச்குமுன் நான் மாஸ்கோ நடிகையொருத்தியைக் காதலித்தேன்; ஆனால் நான் அவளை அறிமுகம்கூட செய்துகொள்ள முடியவில்லை; பிறகு கடந்த ஒன்றரை வருஷங்களாக... உனக்குத் தான் தெரியுமே வாலிபமுமல்ல, நல்ல அழகியுமல்ல, அவளோடு ஊசலாடினேன்; ஆம்! நான் எவ்வளவு துரதிர்ஷ்டக்காரன் தெரியுமா? எனக்குக் காதலே ஒருபொழுதும் கைகூடி வாவில்லை; நான் வேண்டுமென்றுதான் மீண்டும் என்று குறிப்பிடுகிறேன். என்னுடைய வாலிபமே அநியாயமாக காதலின்றியே கழிந்துவிட்டது. என்னுடைய வாழ்க்கையின் 34-ம் வயதில் நான் மீண்டும் காதல் கொண்டுள்ளேன். ஆம்! 'மீண்டும்'—தான்.

அவள் எப்பேர்பட்டவள் என்று நீ அறிந்தால்... அவளை அழகி என்று சொல்லிவிட முடியாது. அவள் விசாலமுகம் படைத்தவள். ஒற்றை நாடி. அவள் சிரிக்கும்பொழுது வசீகரமாயிருப்பாள். அவள் பேச்சு வெண்கல

த்வனிதான். அவள் என்னோடு சம்பாஷிப்பதில்லை. நான் அதற்குக் காரணமறியேன். நான் அவள் பக்கத்திலிருக்கும் பொழுது, அவளை ஏதோ அபூர்வ அணங்கு என்றே உணர்கிறேன். அவள் உள்ளப் பாண்மையும், அறிவும் அபாரமானது. அவள் கடவுள் பக்தி கொண்டவள். அது ஒன்றே என்னை அவள்மயமாக்கிவிட்டது. இதுசம்மந்தமாக நான் உன்னோடு வாதாடமுடியும். உன்னுடைய எண்ணத் தின்படி நீ சரியாக இருக்கலாம். ஆனால் நான் அவளைப் பிரார்த்தனையில் பார்க்கும்பொழுது காதலிக்கிறேன். அவள் மாஸ்கோவில் படித்தவள்; நடையுடையெல்லாம் மாஸ்கோ தான்; மாஸ்கோ என்றாலே அவளுக்கு அலாதி மோகம்; அதற்காகவே அவளைக் காதலிக்கிறேன்—அவளைக் காதலிக் கிறேன்—காதலிக்கிறேன்... நீ எனக்காக காதல் என்றால் என்ன, யாரைக் காதலிக்கவேண்டும், யாரைக் காதலிக்கக் கூடாது என்று அளந்துகட்டக் கிளம்பிவிடாதே. ஆனால் பிரிய கோஸ்டியா, காதல் என்று ஒன்றை உணராதபோது நானும் உன்னைப்போலத்தான்.

உன்னுடைய செய்திக்கு என் சகோதரி நன்றியறிதல் தெரிவிக்கிறாள்; அவள் "பாவம் ஏழை கோஸ்டியா" என்றே உன்னைப்பற்றி பேசும்போதெல்லாம் சொல்லுகிறாள்... என் காதல் இரகசியமாகயிருக்கிறது. கொஞ்சநாளைக்குக் குறிப்பிட்ட மனிதரிடம் தெரிவித்துவிடாதே. அது இனிது முடியுமென்று நினைக்கிறேன்; அல்லது 'டால்ஸ்டாயின் காலாள்' சொல்லுவதுபோல் அது எல்லாம் சரிப்பட்டு விடும்".

கடிதத்தை எழுதிமுடித்துப் படுக்கச்சென்றான் லப் தேவ். அவனால் கண்விழித்திருக்க முடியாத அளவு களைப்பும், அசதியுமிருந்தது. ஆனால் படுத்தும் எக்காரணத் தாலோ தூக்கம் வரவில்லை. தெருவில் இரைச்சல் கேட்டுக் கொண்டிருந்தது. மாட்டு மந்தையும், 'ட்ரியோ' 'ட்ரியோ' என்ற மாட்டிடையனின் சத்தமும், மாதா கோயிலின் காலை மணியோசையும் கேட்க ஆரம்பித்துவிட்டது. ஒரு நிமிஷம் வண்டி உருளும் சத்தம், அடுத்தநிமிஷம் மார்க்கெட்டுக்குப்

போகும் பெண்களின் பேச்சு, ஆனால் சதா வானம்பாடிக் குருவி 'கீச், கீச்' என்று சப்தமிட்டுக்கொண்டிருந்தது.

* * *

மறுநாள் மனோகரமான நாள்; அன்று விடுமுறையுங் கூட. காலை 10 மணிக்கு நினா கொஞ்சம் நடக்கமுயன்றாள். மற்றவர்களின் துணையைக்கொண்டு ஜன்னலண்டை நின்றாள். அவள் புன்னகைபூத்த முகத்தைக்கண்ட குடும்பத்தார் அனைவரும், அவள் பிழைத்து சௌகரியமாகிவிடுவாள் என்று கருதினார்கள். அவளும் அப்படியே நினைத்தாள். குழந்தைகள் அவர்கள் மாமாவோடு ஒளிந்து—மறைந்து ஓடி விளையாடினார்கள். அன்று அவளுக்காக எல்லா ஆலயங்களிலும் பிரார்த்தனை செய்யப்பட்டது.

அப்பொழுது டாக்டர் கனைத்துக்கொண்டு மெத்தை மீதேறிவரும் சப்தம்கேட்டது. அவரிடமிருந்து தப்பித்துக் கொள்ள லப்தேவ் மேல்மெத்தையிலிருந்து வேறோர் வழியாக இறங்கி தன் அறைக்கு வந்துவிட்டான். டாக்டரைக் கண்டு, அவருக்கு உபசாரணைசெய்து, அவரோடு பேசி—அளவளாவி அவரை வீட்டுவரைத் திருப்பி அழைத்துச் செல்வதென்பது அவ்வளவு லேசான காரியமல்ல. அவருக்குப்பயந்தே லப்தேவ் யூலியாவைப் பார்க்கப்போவதில்லை. ஆனால் இப்பொழுதோ டாக்டர் இங்கு வந்துவிட்டார்; யூலியா வீட்டிலே தனித்திருப்பாள்; இப்பொழுது அவளைப் பார்ப்பதுதான் ஏற்றது என்று அவன் மனம் துடிதுடித்தது.

அவன் பொட்டணத்தை எடுத்துக்கொண்டு காதலின் இறக்கைகளோடு பறந்து சென்றான். வழிநெடுக வெயில் கடுமையாக இருந்தது. டாக்டர் வீட்டின் முன்புற புல்வெளி தோட்டத்தில் சின்னஞ்சிறுவர்கள் பந்தாடிக்கொண்டிருந்தனர். இதனை யூலியா, மெத்தையின் முன்மாடியிலிருந்து கைகட்டிநின்று கவனித்துக்கொண்டிருந்தாள். "காலை வந்தனம்" என்றான் லப்தேவ். அவள் சுற்றுமுற்றும் பார்த்

தாள். அவள் அப்பொழுது பந்தாடும் பையன்கள்களைப் போலவே உற்சாகமாகக் காணப்பட்டாள். லப்தேவைக் கண்டதும் "மாஸ்கோவில் இதுமாதிரி சிறுவர்கள் உற்சாக மாக விளையாடமாட்டார்கள் பார்த்தீர்களா? அங்கு பெரிய தோட்டங்கள் கிடையாது; ஓடியாடிவிளையாட விஸ்தாரமான இடம் அங்கு எங்கிருக்கிறது?...அப்பா இப்பொழுதுதான் தங்களைக்காணச் சென்றார்." என்றாள்.

"எனக்குத்தெரியும், நான் அவரைப்பார்க்க வரவில்லை; நான் உன்னையே பார்க்கவந்தேன்." என்று சொல்லி அவள் அழகிய கழுத்தையும், அக்கழுத்தில் தொங்கிய அழகிய சங்கிலியையும், அப்பொழுதுதான் முதன் முறையாகப் பார்த்துப்பரவசமானான். அவன் மீண்டும் "நான் உன்னையே பார்க்கவந்தேன்... என்னுடைய சகோதரி நீ நேற்று மறந்து வைத்துப்போன பொட்டணத்தை உன்னிடம் கொடுக்கச் சொன்னாள்." என்றான்.

அவள் பொட்டணத்தைப் பெற்றுக்கொள்ள கையை நீட்டினாள். ஆனால் அவன் அதனை மார்போடணைத்துக் கொண்டு பரவசத்திலாழ்ந்து "இது என்னிடம் இருக் கட்டுமே; இது உன் ஞாபகார்த்தமாக என்-நம் சிநேகிதத் தின் அறிகுறியாக—இதை நான் வைத்துக்கொள்ளுகிறேனே இது எவ்வளவு அற்புதம் என்றான்?"

"எடுத்துக் கொள்ளுங்களேன் அதில் அற்புதத்திற்கு ஒன்றுமில்லையே" என்று சிரித்து பதிலளித்தாள்.

அவனுக்கு ஏற்பட்ட மகிழ்ச்சியில் என்ன சொல்வ தென்றே தெரியாமல் சிறிது மௌனமாக யிருந்தான். அவள் சிறிதுநேரம் கழித்து "தாங்கள் ஏன் வெளியில் உட் கார்ந்திருக்கவேண்டும்? வேண்டுமானால் நாம் உள்ளே போய் உட்காருவோமே" என்றாள் மீண்டும் சற்று சிரிப் போடு.

அவர்கள் ஹாலுக்குள் போனார்கள். யூலியா மேலே படிக்கட்டுகளிலேறி ஓடினாள். அவளுடைய வெள்ளை ஆடையும், அதிலே காட்சியளித்த நீலநிற புஷ்பங்களின்

தோற்றமும் அவனைக் கொள்ளைகொண்டுவிட்டன. அவள் தளத்தில் நின்றுகொண்டு "எனக்கு வேலையிருக்கிறது, நான் காலையிலிருந்து சும்மா இருந்துவிட்டேன்". என்றாள்.

"நீ சொல்லுவது எனக்கு விளங்கவில்லையே" என்று சொல்லிக்கொண்டே அவளருகில் போய் "யாருமே இந்த உலகத்தில் சும்மா இருக்கிறதில்லை" என்றான்.

"வேலையில்லாவிட்டால்"?

"வேலையில்லாவிட்டால் வாழ்வேது" என்றுசொல்லி பொட்டணத்தை மார்போடு அணைத்துக்கொண்டு மிக ஈனக் குரலில், "நீ என் காதலியானால் நான் எல்லாவற்றையும் உனக்கு அற்பணிப்பேன். உனக்காக எதையும் செய்யத் தயார்" என்றான்.

அவளுக்குத் தூக்கிவாரிப்போட்டு ஆச்சர்யத்தையுண்டாக்கியது. அவள் முகம் வியர்த்துவிட்டது. "தாங்கள் என்ன சொல்லுகிறீர்கள் – அது ஒருக்காலும் முடியாது. அதற்காக என்னை மன்னித்து விடுங்கள்." என்றாள்.

அவள், முன்படிக்கட்டுகளில் ஏறிய அலங்காரக் காட்சியோடு மேல்மெத்தைக்குச் சென்று மறைந்துவிட்டாள்.

லப்தேவின் எண்ணத்தில் இடி விழுந்தது போலாகிவிட்டது. ஒரு நொடியில் அவனுக்கு சகலமும் இருண்டுவிட்டது.

விரும்பப்படாத—வேண்டப்படாத—நிராகரிக்கப்பட்ட அவன், வெட்கத்தோடு–அவமானத்தோடு, வேதனையோடு குனிந்த தலை நிமிராமல் வீட்டைவிட்டு வெளியே வந்தான்.

அசல் வியாபாரிமாதிரி "நான் எல்லாவற்றையும் தருகிறேன் என சொன்னேனே!" என்று நினைத்துக் கொண்டே சென்றான். அவன் அவளிடம் பேசியதனைத்தும் முட்டாள்தனமென்று உணர்ந்தான்.

கடைசியாக அவன் ஒருவாறு தன்மனதைத் தேற்றிக் கொண்டு இனிவாழ்க்கையில் எதன்மீதும் பற்றுதல்வைக்கக் கூடாதென்றும் ஏதோ மற்றவர்கள் நலனுக்காகப் பாடுபட

வேண்டுமென்றும் நிச்சயித்தான். அவன் இறுதியாக வீட டைந்ததும் மிக்க பலஹீனமடைந்ததை உணர்ந்து படுக்கை யில் சாய்ந்தான். ஐந்து நிமிஷங்களுக்கெல்லாம் மெய்மறந்து தூங்கிவிட்டான்.

எதிர்பாராதவிதமாகக்கிளம்பிய லப்தேவின் கோரிக்கை யூலியாவை குழப்பத்திற்காளாக்கியது. அவள் லப்தேவை அதிகமாக அறியமாட்டாள். அவனை மாஸ்கோவில் ஒரு பிரபலமான "பியோடர் லப்தேவ் அண்ட் ஸன்ஸ்" என்ற தொழில் ஸ்தாபனத்தின் பங்காளி என்று உணர்வாள். அவள் லப்தேவை அறிமுகம் செய்துகொண்டதுகூட எதிர் பாராத விஷயந்தான். அவள் லப்தேவின் சகோதரி யிடத்தில் அக்கரைகொண்டிருந்தாள். அவளுக்கு லப்தே விடமிருந்து எதிர்பாராதவிதமாக 'காதலி' என்ற சொல் வந்தமாத்திரத்திலேயே, அவளுக்கு அவனிடத்தில் என்ன பதில் சொன்னோம் என்றுகூடத்தெரியாது. அவன் ஒரு வியாபாரிமாதிரி காணப்பட்டானே தவிர, வேறு கவர்ச்சிகர மானவனாக அவளுக்குத்தோன்றவில்லை. ஆகவே அவள் அவனுக்கு நிச்சயம் வேறுவிதமாக பதில் சொல்லியிருக்க முடியாது. என்றாலும் அவள் மறுதளித்ததை அவளே திருப்திகாமாக உணரவில்லை. வாஸ்தவத்திலேயே அவள் ஏதோ தவறுசெய்துவிட்டதாகக் கருதினாள்.

அவளுடைய ஏகாந்த நிலையில் அவளுக்கேற்பட்ட மனப்புயலின் வேகம் மணிக்கு மணி அதிகரித்தது. அவ ளுக்கு தனக்கேற்பட்ட சம்பவத்தை யாரிடமாவதுசொல்லி, அவள் நடந்துகொண்டது சரியென்று எடுத்துக்காட்ட விரும்பினாள். ஆனால் அவள் பேசுவதற்கு அங்கு யாரு மில்லை. அவள் தாயையிழந்து நீண்டகாலமாகிவிட்டது. அவள் தகப்பனாரிடத்தில் பேசலாமென்றாலோ அவரொரு அலாதிப் போக்கு!

யூலியா வெளுத்த முகத்துடன் வெறுப்போடு சாப் பாட்டு அறைக்குப்போய், தேநீரைத் தயாரித்து ஒரு கோப் பையை தன் தந்தைக்குக் கொண்டுசென்றாள். அவர் கூண்டி

லடைபட்ட மிருகம் இங்குமங்கும் உலாவுவதுபோல, அவர் ஹாலில் கையை நீண்ட அங்கிக்குள் வைத்துக்கொண்டு சிவந்த முகத்தோடும், பரந்த தலையோடும் உலாவிக்கொண்டிருந்தார்.

"லப்தேவ் இன்று தன்னைக் கல்யாணம் செய்துகொள்ளச் சொன்னர்" என்றுள். அப்போது யூலியாவின் முகம் நாணத்தால் சிவந்தது.

'லப்தேவா?' 'பானுராவின் மைத்துனரா?' என்றார். டாக்டருக்கு தன் மகளிடத்தில் பிரீதியிருந்தது. அவள் கல்யாணமாக வேண்டியவள்தான்; ஆனால் அவள் தன்னை பிரிந்துவிடுவாளோ என்ற கவலை. ஏதோ, தான் தனிமையானல், அந்தப் பெரியவீட்டில் வாதவியாதியால் கஷ்டப்பட நேரிடுமென பயந்தார். இவைதான் அவர் மனதிற்குள் இருந்த எண்ணங்கள்.

அவர் தன் தோள்களை ஆட்டிக்கொண்டு "ரொம்ப சந்தோஷம், நான் மனப்பூர்வமாக ஆசீர்வதிக்கிறேன்; உன்னுடைய முழு திருப்தியோடு நீ என்னைவிட்டுப் போகலாம்; நான் உன்னை உணர்ந்திருக்கிறேன்; உன்னுடைய வயதில், வயதுசென்ற தந்தையாகிய என்னிடமிருப்பது கஷ்டந்தான்; நானே முடியாதவன், நாளைமறுநாள் பாயும்படுக்கையுமாக வேண்டியவன்; அப்பொழுது பலருக்கு மகிழ்ச்சியாகவிருக்கும்; நான் மனப்பூர்வமாக உன்னைப் பாராட்டுகிறேன்" என்றார்.

"நான் அவரை மறுதளித்துவிட்டேன்" என்றுள். டாக்டருக்கு 'அப்பாடா' என்றிருந்தது. ஆனால் அவர் மேலும், "நான் பைத்தியக்கார ஆஸ்பத்திரிக்கு போகவேண்டியதுதான் பாக்கி; இப்பொழுதே சிறுவர்கள், என்மீது கல்லைவிட்டெறிகிருர்கள்; நீயோ, நல்ல அதிர்ஷ்டத்தை வேண்டாமென்று சொல்லிவிட்டாய்" என்று தொடர்ந்து சொன்னர்.

"அப்பா, நான் தங்களோடு அறிவுக்குப் பொருத்தமில்லாமல் பேசமுடியாது." என்று யூலியா சொல்லிக்

கொண்டே விரிட்டென்று அவ்விடத்தை விட்டகன்று தன் அறைக்குப் போய்விட்டாள். தன் தகப்பனருடைய பேச் சால் அவளுக்கு அடங்காக் கோபமேற்பட்டது. ஆனல் சிறிது நேரத்திற்குள் தன் தகப்பனர்மீது பரிதாபப்பட லானள். அவர் கிளப்புக்குப் புறப்பட்டுச் சென்றதும், அவள் அவர் பின்னடியே போய் கதவைத் தாளிட்டுக் கொண்டாள்.

அன்று காற்று கடுமையாக வீசியது. அவள் எல்லா ஜன்னல் கதவுகளையும் மூடிவிட்டாள். அவளுக்கு என் னமோ அன்று அனைத்தும் விரிச்சென்று தென்பட்டது கொஞ்சம் பீதியும் உண்டானது.

"அவரிடம் வசீகரத்தோற்றம் இல்லையே என்ற கார ணத்தால் அவரை நிராகரித்தது சரிதானு"? என்று அவளையே கேட்டுக்கொண்டாள். அவரை தான் காதலிக்க வில்லை என்பது என்னவோ வாஸ்தவம். அவளுக்கு வயது. அப்பொழுது இருபத்தொன்று. அவள் தனக்குத்தெரிந்த ஆடவர்களைப்பற்றியெல்லாம் சிந்தனைசெய்து பார்த்தாள். சர்க்கார் குமாஸ்தாக்கள், ஆசிரியர்கள், உத்தியோகஸ்தர்கள், மணமானவர்கள் — ஆகாதவர்கள் அத்தனைப்பேரையும் அவள் தன் மனக்கண்முன் கொண்டுவந்து நிறுத்திப்பார்த்தாள். தனக்குப் பிடித்தமாக அவளுக்குயாருமே படவில்லை.

லப்தேவ் என்ன இருந்தாலும் மாஸ்கோவாசி— படித்தவர் — பட்டதாரி — பிரஞ்சுமொழி தெரிந்தவர். அவர் பட்டணத்தின் தலைநகரில் வாழ்பவராதலால் அங்கு வேண்டியவாறு செயற்கை வனப்பும், எழில் விளையாட்டும், மிகுந்து நிற்கும். சினிமா, நாடகம், நடனம், கூத்து, கும் மாளம், பட்டு ஜவுளிகள், நல்ல தையல்கள், சிறந்த சாப் பாட்டு வகைகள்...இல்லாமலா போகும்...வேதாகம நூலில் மனைவி தன் புருஷனைக் காதலிக்க வேண்டுமென்று எழுதி யிருக்கிறது. நாவல்களில் வேண்டியமட்டும் காதல்செய்ய எழுதியிருக்கிருர்கள். ஆனல் அவை அதீதமான யோச னையா? காதல் இல்லாமல் கல்யாண வாழ்வில் பிரவேசிப்பது என்பது கூடாத காரியமா? காதல் ஏதோ தொலைந்துபோய்

விட்டது. ஆனால் பழக்கத்தால் சேர்ந்து வாழ்வதாக பிறர் சொல்லக் கேள்விப்படுகிறேன். கல்யாண வாழ்க்கையின் நோக்கமே காதலிலல்ல—இன்பத்திலல்ல; ஆனால் கடமையிலும் குழந்தை பெறுவதிலும் வீட்டைக்காப்பதிலும் தானே என்னவோ. ஒருசமயம் வேதாகமநூலில் சொல்லியிருப்பது போல“தன்னைப்போல பிறரை நேசி, மரியாதைசெய், தான தருமங்களைச்செய்'' என்பதைப் போலவோ என்னவோ.

அன்று இரவு யூலியா, மாலைப்பிரார்த்தனையை சிரத்தையோடு செய்தாள். அவள் கைகளை மார்போடணைத்து முழந்தாளிட்டுப் “பரிசுத்த மாதாவே, எனக்கு ஞானத்தைக் கொடுப்பாய். ஏ ரக்ஷகனே! ஆண்டவனே!! எனக்கு ஞானத்தை அருளுங்கள்'' என்றாள்.

அவள் தன்னுடைய வயதிற்குள் எத்தனையோ பெண்கள் தங்கள் வாழ்க்கையில் நல்ல காதலர்களை உதறிவிட்டதற்காக வருந்திய சோகக் கதைகள் அவள் ஞாபகத்திற்கு வந்தன. அதுமாதிரி துர்பாக்யம் தனக்கு ஏற்படக்கூடாதென்று விரும்பினாள். தான் ஏன் கான்வெண்டுக்குப் போய் விடக்கூடாது? ஏன் கன்னிப் பெண்ணாகவே இருந்துவிடக் கூடாது? என்றும் நினைக்கலானாள்.

அவள் படுக்கைக்குப் போனாள். தனக்கும் தன்னைச் சுற்றிலும் சிலுவைக் குறியிட்டுக்கொண்டாள்.

திடீரென்று தெருவாயிற்படியில் மணியோசை கேட்டது. அது அவளுக்கு பீதியை யுண்டாக்கியது. வாழ்வே எப்படி நிம்மதியில்லாமல் குழப்பமும், வேதனையாகவுமிருக்கிறதென்று உணர்ந்தாள். மீண்டும் தெருவாயிற்படியில் மணியோசை கேட்டது. வேலைக்காரர்கள் ஒருக்கால் தூங்கிப்போயிருப்பார்களோ வென்று கருதி, ஒரு மெழுகு வர்த்தியை எடுத்துக்கொண்டு வேலைக்காரர்களைக் கடிந்து கொண்டே வெளியேவந்தாள். அப்பொழுதுதான் வேலைக்காரி கதவைத் தாளிட்டவளாய் ‘எஜமான் ஐயா என்று நினைத்தேன்—யாரோ நோயாளியாம்' என்றாள்.

யூலியா மீண்டும் படுக்கைக்குப் போனாள். டிராயரிலிருந்த சீட்டுக்கட்டைக் கலைத்துப்போட்டு சிவப்புச்சீட்டு

வந்தால், தான் லப்தேவின் காதலை ஏற்றுக்கொள்ள வேண்டியது; அன்றி கருப்புச்சீட்டு வந்தால் கண்டிப்பாக மறுதளிக்கவேண்டியது என்ற முடிவுக்குவந்து சீட்டைக் கலைத்துப்போட்டு எடுத்தாள். அப்பொழுது பத்தாம்மந்து ஸ்பேட் வந்தது. அவள் மனமும் நிம்மதியடைந்தது. அவளும் அயர்ந்துவிட்டாள்.

ஆனால் விடிந்ததும் அவளுக்கு மீண்டும் குழப்பமேற்பட்டது அவரை ஏற்றுச்சொள்வதா—வேண்டாமா என்பதுவே பிரச்னை. எப்படியோ பதினொரு மணிக்கு அவள் அழகாக உடுத்திக்கொண்டு நினைவைப் பார்க்கப்போனாள். அவளுக்கு லப்தேவைப் பார்க்கவேண்டுமென்பதும் ஆசைதான். அவன் இப்பொழுது ஒருக்கால் அழகனாகக் காணக்கூடும். அவள் இதுவரை அவனை நன்றாக உணராதிருக்கலாம். அதுபோது அவளால் புயல்காற்றை எதிர்த்து நடக்க முடியவில்லை. அவள் தொப்பியை இருகைகளாலும் பிடித்துக்கொண்டு புழுதியையும் பொருட்படுத்தாது புயலைக் கடக்கலானாள். ஆம். அவள் இயற்கைப் புயலை மட்டுமல்ல, மனப் புயலையுந்தான்.

அவள், லப்தேவின் சகோதரி வீட்டுக்குச் சென்றபொழுது லப்தேவைக்கண்டு வந்தனமளித்தாள். அவள் அப்பொழுது வருத்தத்தோடு, கண்ணைக் கசக்கிக்கொண்டிருப்பதாக அவனுக்குத் தோன்றியது. லப்தேவும் தான் நிராகரிக்கப்பட்டவனெனக் கருதி வெறுப்படைந்தவனாகயிருந்தான். அவள் அங்கு பத்து நிமிஷங்கள்கூட தங்கவில்லை. அவள் வீட்டிற்குப் போகும்போது லப்தேவிடம் "வீட்டிற்கு வருகிறீர்களா?" என்றாள்.

அவர்கள் இருவரும் மௌனமாக நடக்கலானார்கள். லப்தேவ், காற்றின் வேகம் அவளைத் தாக்காதவாறு அவளுக்குப் பின் சென்றான். சந்து வந்ததும் மரங்களின் நிழலேற்பட்டது. அப்பொழுது இருவரும் சேர்ந்து நடந்தார்கள்.

"நேற்று நான் நடந்துகொண்ட விதத்திற்கு மன்னித்துவிடுங்கள்" நான் மகா பாவி நான் இரவு முழுதும் அதனை

லேயே தூங்கவில்லை" என்று சொன்னாள். அவள் அப்பொழுது அழுதுவிடுவாள் போலிருந்தது.

லப்தேவ் அவளைப் பார்க்காமலேயே "நான் நேற்றிரவு நன்றாக தூங்கினேன். அதனால் நான் சந்தோஷமாயிருந்ததாக நினைத்துவிடாதே. என் வாழ்வு சிதறுண்டிருக்கிறது. நான் பெரிதும் சந்தோஷமற்று இருக்கிறேன். நீ என்னை நிராகரித்த பிற்பாடு நான் ஏதோ விஷமிடப்பட்டவனைப் போல ஆகிவிட்டேன். நேற்று நடந்தது என்னமோ – மிக மோசந்தான். ஆனால் இன்று எனக்கோ கொஞ்சமும் கவலையில்லை. நான் தாராளமாக உன்னோடு பேசலாம். நான் உன்னை என் சகோதரியைவிட, ஏன் – இறந்துபோன என் தாயைவிட அதிகமாக நேசிக்கிறேன்... என்னுடைய சகோதரி இல்லாமல் என்னால் வாழமுடியும். என்னுடைய தாயார் இல்லாமலும் அப்படித்தான். எவருமே இல்லாமல் நான் வாழ்ந்துவிடுவேன். ஆனால்... நீ இல்லாத வாழ்வு...எனக்கு அர்த்தமற்றதாக இருக்கிறது. அது என்னால் சகிக்கக்கூடியதாக இல்லை.

வழக்கம்போல அவன் அவளை உணர்ந்துகொள்ள ஆசைப்பட்டான். நேற்று நடந்ததற்கு அவள் என்ன சமாதானம் சொல்லப்போகிறாள்? என்ன புது யோசனை அவள் மூளையில் முளைத்துவிடப்போகிறது? என்று யோசித்தான்.

அவள் பேச்சு, அவள் சிரிப்பு, அவள் தலையசைப்பு, அவள் நடை அத்தனையையும் கவனித்தாலே அவள் தன்னை காதலிக்கவில்லையென்று அவன் முடிவுக்கு வந்தான்.

அவன் டாக்டர் வீட்டையடைந்ததும் "தங்கள் வரவு நல்வரவாகுக! லப்தேவ்!! நான் தங்களைப் பார்க்க எப்பொழுதுமே மகிழ்ச்சி அடைகிறேன்" என்றார் டாக்டர்.

மகிழ்ச்சி! என்றான் லப்தேவும். ஆனால் லப்தேவுக்கு டாக்டரோடு நேருக்கு நேரே உட்கார்ந்து சம்பாஷிப்பதில் உற்சாகமில்லை. என்ன இருந்தாலும் தான் பணக்காரன் என்ற ஒரே காரணத்தால், தன்னை மணம் செய்துகொள்ளும்படி தன் மகளுக்கு டாக்டர் உபதேசம் செய்திருப்பாரென்று

மட்டும் நினைத்துக்கொண்டு, நிராகரிக்கப்பட்ட தன்னுடைய திருமண விஷயம் டாக்டருக்கு எட்டிப்போனதே என்று பெருமுச்சுவிட்டான்.

யூலியா, சற்றுமுன்தான் தன் சகோதரியைப் பார்க்க வந்திருந்தாள். அதோடு தன்னையும் அழைத்து வந்திருக்கிறாள். இப்பொழுது தன்னை திருமணம் செய்துகொள்ள சம்மதம் என்று சொல்கிறாளென்றால், அது ஏதோ தன் சகோதரி செய்த சிபார்சு என்று டாக்டர் நினைப்பாரோ என்னவோ என்று கவலைப்பட்டு "என்ன வெட்கக்கேடு, என்ன வெட்கக்கேடு" என்று அவதிப்பட்டான்.

டாக்டர் அப்பொழுதே நோயாளிகளைப் பார்க்க வெளியில் செல்லலானார். லப்தேவும் வெளியேற முயன்றான். ஆனால் யூலியா, அவனைத் தங்கும்படி கேட்டுக்கொண்டாள். தன்னைக் காதலித்த ஒரு நல்ல மனிதரை – கவர்ச்சிமிக்கவராக இல்லை என்ற காரணத்தால் தான் நிராகரித்ததானது சரியல்லவென்று உணர்ந்தாள். அதோடு தான் அவரை மணம் செய்துகொண்டால், தான் எவ்வளவோ, சுகமாக வாழமுடியுமென்று நம்பினாள். அதைவிட அவளுக்கு வேறு நல்ல வாய்ப்பு இருப்பதாகவும் புலனாகவில்லை. இதனாலெல்லாம் அவள் அவனை நிராகரித்தது சுத்த பைத்தியக்காரத்தனம், முட்டாள்தனம், கடவுள் அதற்காக நிச்சயம் தன்னை தண்டிக்கச் செய்வார் என்றெல்லாம் தனக்குத்தானே நினைத்துக்கொண்டாள்.

தகப்பனார் வெளியேறினதுதான் தாமதம். அவர் காலடி சப்தம் மறைந்ததுமே அவள் லப்தேவ் முன்னின்று, "நான் நேற்று நீண்டநேரம் சிந்தித்துப் பார்த்தேன். நான் தங்களையே திருமணம் செய்துகொள்கிறேன்." என்று தீர்க்கமாகவும்–திடமாகவும் சொன்னாள்.

அவன் தலைவணங்கி அவள் கைகளை முத்தமிட்டான். அவள் தனது குளிர்ந்த உதடுகளால் அவனது தலையில் முத்தமிட்டாள்.

இந்தக் காதல் கட்டத்தில் – மிக முக்கியமானது அவள் 'காதல்' விஷயமல்லவா? ஆம். அது சூன்யமாக யிருக்கிற

தென்று அவள் முத்தத்தின் பான்மையால் அவன் முடிவு கட்டினன். அவன் அப்பொழுதே அங்கிருந்து ஓடிவிடலாமா வென்று யோசிக்கத் தொடங்கினன். ஆனல் அவளோ பக்கத்திலிருக்கிருள். அவளோ கட்டழகியாகக் காண்கிருள். அவன் உள்ளம் பரவசத்தால் பொங்கி வழிந்தது. அவன் உடனே அவளை இறுகக் கட்டி அணைத்தான். கழுத்திலும், கன்னத்திலும், நெற்றியிலும் மாறிமாறி முத்தமிட்டான்.

இச்சம்பவத்திற்குப்பின் அவள் ஜன்னலருகில் சென்று விட்டாள். அவர்கள் இருவருமே அப்பொழுது நடந்த நிகழ்ச்சிக்கு வருந்தினர்கள்.

அவள் கையைப் பிசைந்துகொண்டு, "நான் எவ்வளவு வேதனையடைந்திருக்கிறேன் தெரியுமா தங்களுக்கு?" என்ருள்.

"என்ன" என்று சொல்லிக்கொண்டே அவளண்டை நெருங்கி, அவனும் கையை பிசைந்தவனய் "என் அருமைக் கண்ணே! என்ன சொல்கிருய்? உண்மையைச் சொல்— உண்மையைச் சொல்" என்ருன். "அதற்காக உங்களுக்கு வேதனை வேண்டாம்" என்று சொல்லி அவள் ஒரு சிரிப்பை வரவழைத்துக்கொண்டு "நான் தங்களுக்கு என்றும் உண்மையுள்ளவளாகயிருப்பேன். மாருத அன்போடுமனைவி யாக யிருப்பேன்... இன்று மாலை மீண்டும் நீங்கள் வந்து போங்கள்." என்ருள்.

அவன் வழக்கம்போல், தன் சகோதரியுடன் உட்கார்ந்து வாசித்துக்கொண்டிருக்கும்பொழுது, அவனுக்கு அன்று நிகழ்ந்த சம்பவங்களைப்பற்றிய மனசஞ்சலமேற்பட்டது.

"அவள் தன்னை காதலிக்கவில்லை. ஆனல் பணத்திற்காக தன்னை நேசிக்கிருள். முதலில் தன் விருப்பத்தை நிராகரித் தாள். ஆனல் தன் செல்வக்கொழிப்புக்காக தன்னேடு வாழ உறவாடுகிருள்."

"தன்னுடைய உயரிய மனப்பண்பு எங்கே?... அந்தோ! ஒரு பேதையால்...!"

"யூலியா என்ற அவளுடைய பெயரே, காதுக்கு இனிமையாயில்லை."

"என்ன இருந்தாலும் தன்னை திருமணம் செய்து கொண்டவள் தன்னைக் கடைசியாக காதலிக்காமலா போய் விடுவாள்?"

"தான் மட்டும்தானா இதுபோன்ற காதலற்ற மணம் செய்துகொள்ளப்போகிறோம். எத்தனையெத்தனையோ பேர் காதலின்றி தாரகர்களால் மணம் செய்துகொள்ளவில்லையா? தான் மட்டுமென்ன அதிசய மனிதனா? தன்னைப்போன்று முன் எத்தனையோ பேர் இருந்திருப்பார்கள், பின்னும் எத்தனையோ பேர் இருக்கப்போகிறார்கள்" என்று பல பல சிந்தித்தான்.

அவன் புத்தகத்தை மூடிவிட்டு "ரோமியோவும் ஜூலி யட்டும்" என்று சொல்லி ஒரு சிரிப்பு சிரித்தான். பின் லப்தேவ் தன் சகோதரியிடம் "நான் தான் ரோமியோ, நினா. இன்று யூலியாவை கல்யாணம் செய்துகொள்ளும்படி கேட்டேன்" என்றான்.

நினா முதலில் இச்செய்தியை நம்பவில்லை. ஏதோ பரிகாசமாகப் பேசுகிறான் என்று நினைத்த அவளுக்கு திருப்தி ஏற்படவில்லை. அவள் "நான் உன்னை பாராட்டு கிறேன். ஆனால் ஏன் இவ்வளவு அவசரம்?" என்றாள்.

"அவசரம் ஒன்றுமில்லையே! மார்ச் மாதத்திலிருந்து எத்தனித்ததுதான். நீ என்னவோ கவனிக்கவில்லை" என் றான்.

சற்று நேர மௌனத்திற்குப்பின், "மாஸ்கோ பெண் அணங்கில் எவளையேனும் ஒருவளைத் திருமணம் செய்து கொள்வாயென்று நினைத்தேன்" என்றாள் நினா.

"நமது பெண்கள் எளியவர்கள். ...அதனாலென்ன நீ என்னமோ சந்தோஷமாக இருக்கவேண்டும். அதுதான் எனக்கு ஆசை. என் கணவர் என்னை காதலிக்கிறாரா? இல்லையே! எங்கள் வாழ்க்கை என்ன என்பது உனக்குத் தெரியுமே! எவளும் உன்னுடைய நல்ல குணத்திற்கும், உன்

கெட்டிக்காரத் தனத்திற்கும் உன்னை நிச்சயம் விரும்புவாள். யூலியா நல்ல குடும்பத்தில் பிறந்தவள்—படித்தவள். வாலிப முங்கூட. நீயோ அவ்வளவு வாலிபனல்ல. அழகனுமல்ல” என்று சொல்லியவள் கடைசியாக எதையோ தவறி சொல்லி விட்டதாக உணர்ந்து, சொன்ன வார்த்தைகளை மறைக்க முயன்றாள். “என்ன இருந்தாலும் நீ அருமையானவன்” என்றாள்.

முடிவாக அவள், அவனின் திருமணம் சிறப்புற நடக்க யோசனை கூறினாள்.

லப்தேவ், தினசரி மூன்று நான்கு தடவை தன் காதலியின் வீட்டுக்குப் போய்வந்தான்.

வழக்கமாக, அவன் சகோதரியின் அருகில் உட்கார்ந்து அவளுக்கு ஆறுதல் அளிக்க புத்தகம் படித்துவந்த பழக்கம் மெதுவாக நின்றுவிட்டது. சாஷா மட்டும் தன் தாயாருக் காக பக்கத்திலேயே இருந்துவந்தாள்.

லப்தேவ், தான் மட்டும் தனியனல்ல என்று உணர ஆரம்பித்தான். அவன் தன் காதலியின் வீட்டிற்கு மூன்று நான்கு தடவையும், அவளின் தந்தையான டாக்டரோடு மூன்று நான்கு தடவை கிளப்புக்கும் சென்றுவந்தான்.

டாக்டரோ — தொழில் மூலம் அதிக வருமானம் இல்லாதவர். ஆனால் வீடுகள் அடமானம் பிடிப்பது, அடமானம் பிடித்த வீடுகள்மீது கடன் வாங்குவது, ஒத்தி வீடுகளின் வாடகைகளை வசூல் செய்வது அவரது வாடிக்கை. அவரும், அவர் மகளும் குடியிருந்த பங்களாக் கூட, அடமானம் வைக்கப்பட்டிருந்தது. அந்த பணத்தைக் கொண்டு ஒரு காலி மனை வாங்கியிருந்தார். அதில் ஓர் இரண்டு அடுக்குக் கட்டிடம் கட்டி அது முடிவடைந்ததுமே அதையும் அடமானம் வைத்துவிடவேண்டுமென நினைத் தார். லப்தேவ், டாக்டருக்கு கட்டிடம் கட்ட பணஉதவியும் செய்திருந்தான்.

ஒருநாள் பானுராவைப் பார்க்க லப்தேவ் சென்றிருந் தான். அப்பொழுது பானுராவ் இரவு சாப்பாட்டிற்கு

அழைத்திருந்தான். அவன் அதை ஏற்றுக்கொண்டிருந்தான். அப்பொழுது முப்பைத்தைந்து வயதான மெலிந்த உயர மான பெண்ணொருத்தி அவனை வரவேற்ருள். அவளின் கருத்த புருவங்களும் — கரிய கூந்தலும் அவள் ரஷ்யக்காரி யல்லவென்று தெளிவுபடுத்திவிட்டது. அவள் முகம் முழு தும் பவுடரை அப்பிக்கொண்டிருந்தாள். அவள் லப்தேவை வரவேற்கும்பொழுது தேனினுமினிய இனிமையோடு வர வேற்று கைலாகு கொடுத்தாள். அவள் கையைக் குலுக்கும் போது அவளது வைர வளையல்கள் பிரகாசித்தன. அங்கு ஐந்து வயது, மூன்று வயதான சாஷாவின் சாயலையொத்த இரு குழந்தைகளையும் அவன் கண்டான். இரவு சாப்பாடு மிக ஆடம்பரமாக தயாரிக்கப்பட்டிருந்தது. ஆனல் அது சுவையற்றதாக இருந்தது.

லப்தேவ் தான் ஒரு சுவையற்ற விருந்துக்கு ஒத்துக் கொண்டோமோ என்று கவலைப்பட்டான். ஆனல் உபசரிப்ப வளான சீமாட்டியோ ஓயாது பல்லை இளித்துக்கொண்டிருந் தாள். அதோடு பானுராவோ காதலைப்பற்றி அளந்துகொட் டிக்கொண்டிருந்தான்.

"ஒவ்வொருவரிடமும் மைக்கிராஸ்கோபிக் தசைநார் கள் இருக்கின்றன. அதனிடையே மின்சார சக்தி இருக் கிறது. அப்பேர்ப்பட்ட சக்தி—ஒத்த, இணையான, சமமான, சமதூரத்தில் உடைய இருவர்களின் சந்திப்பால் காதல் ஏற்படுகிறது" என்று பிரஞ்சு மொழியில் பானுராவ் ஏதோ விளக்கிக் கூறினன்.

முடிவாக லப்தேவ் வீடடைந்ததும், அவன் எங்கு போனன் என்று அவன் சகோதரி கேட்டபொழுது, அவன் முகம் அசடு வழிந்ததேதவிர, அவன் எந்த பதிலும் சொல்லவில்லை.

லப்தேவ் வரவர, காதற் கடலில் மிதக்கலானன். யூலி யாவை கவிதைச்செல்வியாகக் கருதினன். ஆனல் அவர் களுக்குள் பரஸ்பரம் காதல் உண்டா? உண்மையைச்சொல்ல வேண்டுமானல் அவன் அவளை விலைக்கு வாங்கினன். அவ ளும் அவனிடம் விற்பனையானள்.

அவன் சில சந்தர்ப்பங்களில் சிந்திக்கும்போது, அவன் எண்ணம் மாஸ்கோவுக்குச் செல்லும். முன்பு கடிதத்தில் எழுதினானே 'ஒரு குறிப்பிட்ட பேர்வழி' அது நினைவுக்கு வரும். தன் தந்தையாரும், தன் சகோதரனும் யூலியாவை வரவேற்பார்களா? என்று எண்ணிப் பார்ப்பான். அவன் தந்தையார் யூலியாவை முதலில் வரவேற்கவே மாட்டார் என்று கருதினான். அவன் சகோதரன் வர வர மோசமாகி வருவதாக நினைத்தான்.

செப்டம்பரில் அர்ச் பேதுரு தேவாலயத்தில் திருமணம் நிகழ்ந்தது. அன்று மாலையே மணமக்கள் மாஸ்கோவுக்குப் பயணமானார்கள்.

லப்தேவும் யூலியாவும் – நினாவிடம் விடைபெற்றுக் கொள்ளும்பொழுது "நான் சாகவேண்டுமென கடவுளுக்கு விருப்பமிருக்குமானால் என் குழந்தைகளைக் காப்பாற்றி விடுங்கள்" என்று சொன்னாள் நினா. யூலியா சரியென்று வாக்குறுதியளித்தாள், லப்தேவ், தான் அடுத்தமாதம் வந்து சந்திப்பதாகவும் அவள் சீக்கிரமே குணமடையப் பிரார்த்திப்பதாகவும் கூறி, உள்ளம் உருக தேறுதல் சொன்னான்.

அவர்கள் முதல் வகுப்பில் பயணமானார்கள். அவர்கள் இருவருமே சோபிதமற்று காணப்பட்டார்கள். அவள் தொப்பியைக் கழட்டாமலேயே ஒரு மூலையில் உட்கார்ந்திருந்தாள். அவன், தன் தந்தை எப்படியோ, அந்த 'குறிப்பிட்ட பேர்வழி' எப்படியோ, அன்றி யூலியாவுக்குத்தான் மாஸ்கோ பிடித்திருக்கிறதோ, இல்லையோ என்றவிதமாக யோசனையிலாழ்ந்து எதிர்த்த ஆசனத்தில் படுத்துக்கிடந்தான். இந்த நிலையில் எதிரேயிருந்த தன் மனைவியைப் பார்த்ததும் "தன் வாழ்க்கையில் ஏன் இவ்விதம் சம்பவித்தது" என்று அவன் மனதில் கவலைசூழ ஆரம்பித்தது.

* * *

லப்தேவ்கள் மாஸ்கோவில் பெரிய வியாபாரிகள். அலங்காரப் பொருள்கள், பெண்களுக்கு வேண்டிய உள் தொங்

கட்டான்கள், டேப்புகள், ரிப்பன்கள், பொத்தான்கள் முத லியன அவர்கள் வியாபாரம். அவர்களுடைய மொத்த வியா பாரம் வருஷத்திற்கு இருபதுலக்ஷம் ரூபிள்களாகும். ஆனால் நிகர லாபம் என்னவென்று வயோதிக தந்தையாரைத்தவிர மற்றவர்களுக்குத்தெரியாது. குமாஸ்தாக்களும், குமாரர் களும் வருஷமொன்றுக்கு மூவாயிரம் ரூபிள்கள் இருக்கு மென்று கருதினார்கள். ஆனால் வயோதிகத் தந்தையார் இஷ்டம்போல் கடன் கொடுத்து வியாபாரம் செய்யாமலிருந் தால், இன்னும் ஓராயிரம் ரூபிள்கள் அதிக லாபம் வரக் கூடும் என்பதும் அவர்களது கருத்து. சடந்த பத்து வருஷங்களுக்குள் மட்டும், வசூலாகாத தொகை பத்து லக்ஷத்திற்கதிகமாகும். ஆனால் இதுபற்றி கேட்டாலோ, யாருக்கும் புரியாத வகையில் 'ஏதோ கால விசேஷம் இப்படித்தான் இருக்கும்' என்று முக்கிய நிர்வாகி கூறிவிடு வார்.

மாஸ்கோவுக்கு வந்துசேர்ந்த அன்று பகலே லப்தேவ் தன்னுடைய தொழில் நிலையத்திற்குச் சென்றான். அங்கு ஐம்பதுபேர் வரை வேலை செய்தார்கள். அவரவர்களும் அவரவர் வேலையில் மும்முரமாக இருந்ததால் யாரும் லப் தேவ் வருகையைக் கவனிக்கவில்லை. தபால்காரன்கூட லப் தேவைப் பார்த்தும், பார்க்காததுபோல் போய்விட்டான். அவன் முதல்முதலாக மாடிக்குச்சென்று தன்னைப்போலவே ஒத்த உருவினனான தன் சகோதரன் பியோடரை சந்தித் தான். பொதுவாக சகோதரர்கள் இருவரையும் இரட்டையர் கள் என்றே மதித்தனர். தன் சகோதரனைக் கண்டதும் தன் னுருவமும் அத்தன்மையதுதானா என்ற ஆச்சர்யமேற் பட்டு "நானும் இப்படித்தான் குட்டையாகவும், கவனிப் பாரற்றவனாகவுமிருக்கிறேனா" என்ற கேள்வியைக் கேட்டுக் கொண்டான்.

"நான் உன்னைப்பார்க்க பெருமகிழ்ச்சி கொள்கிறேன்" என்று பியோடர் சொல்லி தன் சகோதரனை முத்தமிட்டு மேலும் சொன்னான்: "ஒவ்வொரு நாளும் உன்னைப் பார்க்க வேண்டுமென்று நினைத்தேன். நீ மணம் செய்து கொண்டா

யென்றதுமே உன்னை எப்படியாவது சந்திக்க ஆசைப்பட்டேன். ஆனால் முடியாமல் போய்விட்டது. நாம் சந்தித்தே ஆறு மாதங்களாகிறதல்லவா? நினு எப்படியிருக்கிருள்? மிக மோசமாகவா? கவலைக்கிடமாகவா?"

"ஆம். கவலைக்கிடமாகத்தான்"

"எல்லாம் ஆண்டவன் செயல்... உன்னுடைய மனைவி அழகுள்ளவள்தானே! அவள் இனி எனக்கு என் இளைய சகோதரி. நான் முன்னமேயே அவளை நேசிக்க ஆரம்பித்துவிட்டேன்."

அப்பொழுது லப்தேவ், பெட்டியடியில் வளைந்து உட்கார்ந்திருந்த தந்தையைக் கண்டுவிட்டான்.

"அப்பா! அப்பா! அண்ணன் வந்துவிட்டார். கடவுள் நம் வயிற்றிலெல்லாம் பால் வார்த்து இருக்கிருர்" என்ருன் பியோடர்.

தந்தையாரான பியோடர் ஸ்டேப்னுவிச் எண்பது வயதினராளுலும், திடகாத்திரத்தோடு இருந்தார். அவர் பேச்சு கணீர் என்று இருந்தது. அவருக்கு தாடி கிடையாது. ஆனால் ராணுவ மீசையிருந்தது. அவர் சுருட்டுக் குடிப்பதுண்டு. அவர் பார்வை கொஞ்சம் மங்கல். ஆனால் கண் சிகிச்சை செய்துகொண்டிருந்தார். அவர் எப்பொழுதும் வாடிக்கைக்காரர்களோடு பேசிக்கொண்டும், தேநீரும் ஜாமும் அருந்திக்கொண்டுமிருப்பார். அவருக்கு வேறு வேலை எதுவும் கிடையாது.

லப்தேவ் அவருக்கு வணங்கி வணக்கம் செலுத்தினுன். தந்தை மகனுக்கு ஆசி கூறினர். "உன் மனைவியை அழைத்து வந்துவிட்டாயா? என்ன..." என்று கேட்டுக்கொண்டே ஒரு வாடிக்கைக்காரரிடம் "... ... இந்தக் காலத்திலெல்லாம், பையன்கள் திருமணம் செய்துகொள்வதற்கு தகப்பனுரை அனுமதி கேட்பதில்லை. இந்தக் காலமே அலாதி. எனக்கு திருமணம் ஆகும்பொழுது வயது நாற்பது. நான் முழந்தாளிட்டு மண்டியிட்டு என் தந்தையை ஆலோசனைக் கேட்டேன். ஆனால் இப்பொழுதோ காலம் மாறிவிட்டது" என்ருர்.

பியோடர் ஒரு வாடிக்கைக்காரரை அறிமுகம் செய்து "இவர் தாம்போவின் வள்ளல். ஐம்பது வயதினர். பனி ரெண்டு குழந்தைகள்பெற்றவர். இவரை முன்மாதிரியாக இன்றைய வாலிபர்கள் கொள்ளவேண்டும்" என்று லப்தே வுச்குக்கூறினன். அதைக் கேட்ட அனைவருமே சிரித்தனர். வாடிக்கைக் காரனும் சிரித்தான்.

கடையிலிருந்த ஒரு வயோதிக குமாஸ்தா "தங்கள் குறையை கடவுள் தீர்த்துவிட்டார்" என்று சொல்லி ஆசீர் வதித்தான்.

இதுபோலவே கடையிலிருந்த அனேகர் லப்தேவை பலவாறு பாராட்டினுர்கள். லப்தேவ் இந்த தொந்திரவு தாங்காமல் வீட்டுக்குப் போகலாமாவென்றுகூட நினைத் தான். ஆனுல் ஒரு சிலர் தேநீரும், பானங்களும் கொடுத்து அவனுக்கு மகிழ்ச்சியூட்டினர். ஆனுல் அத்தனையும் உள் ளன்போடோ, பிரீதியோடோ செய்ததல்லவென்பது லப் தேவுக்குத் தெரியும்.

கடைசியாக லப்தேவ் தன் சகோதரனுக்கு வந்தனம் சொல்லி "நான் நாளை என் மனைவியோடு வீட்டிற்கு வரு கிறேன். அப்பொழுது அப்பா எதாவது எக்கச்சக்கமாக ஒரு வார்த்தை அவளிடம் சொல்லிவிட்டால் அவ்வளவு தான். நான் அந்த நிமிஷமே வெளியேறிவிடுவேன் தெரி கிறதா?" என்றுன்.

"நீ முன்னைப்போலத்தான் இப்பொழுதுமிருக்கிருய். திருமணமாகியும் உன் நடவடிக்கைகளில் கொஞ்சமும் மாறு தலில்லை. வயது சென்றவரிடம் கொஞ்சம் பொறுமையாகத் தான் இருக்கவேண்டும். எதற்கும் பகல் பிரார்த்தனைக்குப் பின் உடனே வந்துவிடு. நாங்கள் தயாராக இருக்கிறோமென் ருன்" பியோடர் பதிலுக்கு.

"நான் பிரார்த்தனைக்கு போவதில்லையே"

"அதனுலென்ன, பதினெரு மணிக்கு முன்னதாகவே வந்தால் – ஆண்டவனைத் தொழுதபின் – பகல் உணவை அனைவரும் அருந்தலாம். எனது சிறிய சகோதரிக்கு

வந்தனங்கள். எனக்காக அவள் கையை முத்தமிடுங்கள்... நான் அவளை விரும்புகிறேன்" என்றான்.

லப்தேவ் தலையை அசைத்துக்கொண்டு வெளியேறினான். ஆனால் தன் சகோதரன் பேச்சில் ஏதோ மாறுதல் இருந்ததாக உணர்ந்தான். எதற்காக, "கடவுள் எல்லோர் வயிற்றிலும் பால்வார்த்தார்" என்று பியோடர் சொன்னான் என்ற சிந்தனை ஏற்பட்டது.

* * *

மறுநாள் ஞாயிற்றுக்கிழமை பகல் 11மணிக்கு லப்தேவ் தன் மனைவியுடன் ஒற்றைக் குதிரைவண்டியில் பிரயாணமானான். தன் தகப்பனார் எங்கு ஏதாவது தாறுமாறாக நடந்துகொண்டுவிடுவாரோ என்ற பயம் லப்தேவுக்கு இல்லாமலில்லை. கணவனுடைய வீட்டில் இரண்டு நாட்கள் வாழ்வதற்குள்ளாகவே யூலியாவுக்கு கசப்பு தோன்றிவிட்டது. மாஸ்கோவல்லாது வேறு நகரத்தில் தான் திருமணம் செய்துகொண்டிருந்தால், தான் வாழவே முடியாது என்று கருதினாள். மாஸ்கோவினுடைய தெருக்கள், தேவாலயங்கள் அவளுக்கு ரம்மியமூட்டின. அவளுக்கு பணிக்கட்டிகள்மீது சருக்கு விளையாடுவது மிக மகிழ்ச்சியாக இருந்தது.

வண்டிக்காரன் இரண்டடுக்கு மெத்தை வீட்டின்முன் வண்டியை நிறுத்தினான். பாராக்காரர்களும், ஜவான்களும் அலங்கரித்துக்கொண்டு முன்நின்றனர். தெருவிலிருந்து தோட்டம் முழுதும் நல்ல மணல் பரப்பப்பட்டிருந்தது. பாராக்காரர்களும், ஜவான்களும் குனிந்து வணங்கினர். பியோடர் புன்முறுவலோடு அவர்களை வரவேற்று, "சிறிய தங்காய்! உன்னோடு அறிமுகமாகும் வாய்ப்புக்கு பெருமகிழ்ச்சி. உன் வரவு நல்வரவாகுக" என்று சொல்லி யூலியாவின் கைகளில் முத்தமிட்டு, அவளை கையோடணைத்து பங்களாவினுள் நுழைந்து — படிக்கட்டுகள் ஏறி — முன் ஹாலைத்தாண்டி — நடு ஹாலுக்கு வந்து சேர்ந்தான். வழிநெடுக ஆண்களும், பெண்களும் குழுமியிருந்தனர். எல்லா பக்கங்களிலிருந்தும் நறுமணங்கள் வீசின.

"முதலில் எங்கள் தந்தையாரிடம் அறிமுகம் செய்து வைக்கிறேன்" என்று மெதுவாக அவள் காதோடு சொல்லி "இவர் எங்கள் அருமைத் தந்தையார்" என்று பியோடர் அறிமுகம் செய்துவைத்தான்.

நடுஹால் பிரார்த்தனைக்காக ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. பாதிரியாரும், துணைப் பாதிரியாரும் அலங்காரமாக நின்றுகொண்டிருந்தனர். ஹால் முழுதும் அலங்கார தீபங்களேற்றப்பட்டு நறுமணங்கள் வீசிக்கொண்டிருந்தன. அனைவரும் பூர்ண அமைதியோடு நின்றிருந்தனர். வயோதிகத் தந்தையார் – யூலியாவோடு மௌனமாக கைகுலுக்கினார். துணைப்பாதிரியார் "ஆண்டவனுடைய ஆசீர்வாதங்கள்" என்று ஆரம்பித்தார்.

பயபக்தியோடு பிரார்த்தனைகளும், இயேசுவுக்கும், மாதாவுக்கும் விசேஷப் பிரார்த்தனையும் நடந்தது. பாடகர்கள், மிக நிதானமாகப் பாடினர். "பிதாவே எங்கள்மீது கருணை கூறுங்கள்" என்று அடிக்கடி சொல்லி சிலுவைக் குறி செய்தார்கள். 'இந்த சடங்குகள், இந்தப் பாதிரிகள், இந்தக் கூட்டம் எதற்கு' என்று லப்தேவ் தன்னையே கேட்டுக்கொண்டு – தன் மனைவி குழம்பியிருப்பதைக் கவனித்தான். பிரார்த்தனைக்குப்பின் பாதிரியானவர் 'பல வருஷங்களுக்குப்பின்' தந்தைக்குப்பின் லப்தேவிடம் சிலுவையை முத்தமிடக் கொடுத்தார். அப்பொழுது யூலியா அவ்விடத்தை விட்டகன்றாள். அதுபோது எம்தா பாதிரியார் சொல்ல நினைத்ததால் – பாடகர்களின் தேவகீதங்கள் நிறுத்தப்பட்டது.

"ஆண்டவனுடைய திருக்கட்டளையின்படி சாமுவேலானவர் பெதல்ஹேம் சென்றார். அங்கிருந்த முதியோர்கள் பீதியால் நடுநடுங்கிக்கொண்டே 'தாங்கள் சமாதானத்திற்கு வந்திருக்கிறீர்களா?' என்று வினவினார்கள். அதற்கு 'சமாதானத்திற்காக – நான் ஆண்டவன்முன் தியாகத்திற்கு சித்தமாக நிற்கின்றேன். உங்களை பரிசுத்தப்படுத்திக் கொள்ளுங்கள். நீங்களும் என்னோடு தியாகத்திற்கு வாருங்கள்' என்

ளுர். அதுபோலவே 'யூலியா நீங்கள் இவ்வீட்டிற்கு சமாதானத்தைக் கொண்டு வந்திருக்கிறீர்களா? என்று உங்களை நாங்கள் கேட்கலாமா?' என்ருர் பாதிரியார்.

யூலியா இதைக்கேட்டு நாணமடைந்தாள். பாதிரியாரும் அவளிடம் சிலுவையை முத்தமிடக் கொடுத்துவிட்டு, 'இனி பியோடருக்கு திருமணமாகவேண்டும். மங்களம் உண்டாகக் கடவதாக!' என்ருர்.

மீண்டும் தேவ கீதங்கள் ஒலிக்க ஆரம்பித்தது. அங்குமிங்கும் ஆண்களும் பெண்களும் போகவர ஆரம்பித்தனர். எல்லா திசைகளிலும் இரைச்சல் ஏற்பட்டது.

வயோதிகர் கண்களில் நீர்கலங்க, மும்முறை யூலியாவை முத்தமிட்டு, அவள் முகத்தில் சிலுவைக் குறிகாட்டி "இது உன் வீடு. நானே கிழவன். எனக்கு வேண்டியதெதுவுமில்லை"என்ருர்.

வந்திருந்தவர்கள் பலர் பாராட்டினுர்கள். அந்த தேவ கீதத்தால்—யார் என்ன சொன்னுர்களென்று யாருக்குமே தெரியாது.

பகல் விருந்து நடந்தது. அனைவரும் 'சாம்பெய்ன்' அருந்தினுர்கள்.

அவள் வயோதிகரோடே உட்கார்ந்திருந்தாள். அவர் 'குடும்பம் பிரிவினையாகக்கூடாது. அனைவரும் ஒரே வீட்டிலேயே சேர்ந்து வாழவேண்டும். பிரிவினை என்று ஏற்பட்டுவிட்டால் நிரந்தரவிரோதமும் ஒற்றுமையின்மையுந்தான் ஏற்பட்டுவிடும். நான் பணத்தைத் தேடிவிட்டேன். பிள்ளைகள் அதை செலவு செய்யப் போகிருர்கள். ...நீ என்னேடு இரு. பணத்தை சேமித்து வை. வயதான நான் இனி ஓய்ந்துவிட வேண்டியதுதான்' என்ருர்.

பியோடர், அடிக்கடி தன் கையை முத்தமிட்டதால் யூலியா கலவரமடைந்தாள். ஆனுல் பியோடர் "சிறிய தங்காய்! நாங்கள் நேர்மையானவர்கள்" எனருன். அவ்விதம் சொல்லும் பொழுதே அவன் கன்னங்கள் விம்மின.

"நாங்கள் கிறிஸ்தவர்களைப்போல - ரஷ்ய முறையில்- எளிமையைக் கைக்கொண்டு வாழ்கிறோம்" என்றான் பியோடர்.

கடைசியாக லப்தேவ் வீட்டுக்குச் சென்று 'அப்பாடா' என்று பெருமூச்சுவிட்டான். எல்லாம் இனிது முடிந்ததில் அவனுக்குத் திருப்தி. அவன் தன் மனைவியிடம் "அகன்ற மார்பும், விரிந்த தோள்களையுமுடைய எங்கள் தந்தையார் குறுகிய உடலமைந்த எங்களைப் பெற்றாரே என்ற ஐயமேற்படலாம்; அது சரியான ஐயமேதான். என்னுடைய தகப்பனார் என் தாயைக் கல்யாணம் செய்துகொள்ளும் போது அவருக்கு வயது நாற்பத்தைந்து, அம்மாவுக்கு வயது பதினேழு. எங்கள் அம்மாவுக்கு எங்கள் தந்தையைக் கண்டாலே நடு நடுங்கி வியர்த்துக் கொட்டிவிடும். நினா முதலில் பிறந்தாள்; அவள் ஆரோக்கிய தாயுக்கு முதலானவ தானதால் அவள் எங்களைவிட அழகாக யிருக்கிறாள். எங்கள் தாயார் பயத்தால்-பீதியால் பூரணவும் ஆட்கொள்ளப் பட்டபொழுது பியோடரும், நானும் பிறந்தோம்; என் தந்தையார் என்னை வளர்ப்பதற்காக அடித்து உதைத்திருக்கிறார்; அது ஐந்து வயதிலேயே நடந்திருக்கிறது. இத்தனையும் எனக்கு நல்ல ஞாபகமிருக்கிறது. சவுக்கைமிளாரால் அடிபட்டிருக்கிறேன்; காதுகளில் கிள்ளி இரத்தம்வரும்; தலையில் குட்டுவாங்கி சீழ்வரும். ஒவ்வொருநாளும் பொழுது விடிந்ததுமே எனக்கு எங்கு உதைவிழப்போகிறதோ என்ற கவலைதான் முதலில் ஏற்படும். ஓடியாடுவதும், விளையாடுவதும் கூடாத காரியங்கள். நாங்கள் விடியற்காலைப் பிரார்த்தனைக்கு செல்லவேண்டும். வரிசையாக பிரார்த்தனைக்குப் போவதுதான் எங்கள்வேலை. வீட்டிலும் எப்பொழுதும் தேவ கீதங்களே பாடவேண்டும். பாதிரியார்களையோ, சாமியார்களையோ நாங்கள் பார்க்க நேரிட்டால், உடனே அவர்கள் கைக்கு முத்தமிடவேண்டும். உனக்கு மதப் பற்றுதல் இருக்கிறது; நீ அத்தனையும் விரும்புவாய்; ஆனால், எனக்கு மதமென்றால் பிடிக்கவில்லை. நான் இப்பொழுது கோவில் பக்கம் போவேனேயானால்கூட எனக்கு அந்த சிறு பிராய

ஞாபகம் வந்து, எனக்கு பீதியேற்பட்டு விடுகிறது. நான் எட்டு வயது பையனாக யிருக்கும்பொழுதே கடைக்கு கொண்டுபோகப்பட்டேன். நான் அங்கு கடைக்காரப் பையன்களைப்போல வேலைவாங்கப்பட்டேன். நான் அங்கு அடியும், வசவும் வாங்காத நாளே கிடையாது. நான் உயர்தரப் பள்ளிக்கூடம் சென்றுங்கூட பகல் உணவுக்கு முன்வரை கடைக்குப் போகவேண்டும்; பின் கடையிலே இரவுவரை வேலைகளைச் செய்யவேண்டும். இவ்விதம் ஒரு வாரம் இரண்டு வாரமா? ஒரு மாதம் இரண்டு மாதமா? ஒரு வருஷம் இரண்டு வருஷமா? இவ்விதம் இருபத்திரண்டு வருஷங்கள் கழிந்தன. நல்ல சமயத்தில் எனக்கு யார்ட்சேவ் என்ற நண்பன் என்னை வீட்டைவிட்டு வெளியேற எனக்கு நல்லவாறு திட்டமிட்டுக் கொடுத்தான். அவன் செய்துள்ள ஒத்தாசை அபரிமிதமானது. நான் அதை உனக்கு பிற்பாடு சொல்லுகிறேன். அதற்குமுன் நாம் யார்ட்சேவைப் போய் உடனே பார்ப்போம். அவன்மிக நல்லவன். ஆஹா! எவ்வளவு ஷோக்கான பேர்வழி" என்றான்.

* * *

நவம்பர் மாத சனிக்கிழமை யொன்று ஆண்டான் ஒரு இன்னிசை நடத்தினான். அன்று கோடைநாள். கூட்டமும் அதிகமிருந்தது. லப்தேவ் கச்சேரிக்குப் பின்புறமிருந்தான். ஆனால் அவன் மனைவியும், கோஸ்டியாவும் எதிரே மூன்றாவது வரிசையில் உட்கார்ந்திருந்தார்கள். இடைவேளையின் ஆரம்பத்தில் குறிப்பிட்ட பேர்வழியான போலினா லப்தேவின் எதிரே போனாள். அவன் தன் கல்யாணத்திற்குப் பின் அவள் முகத்தில் விழிக்கவேண்டுமே என்று பயந்து நடுங்கி யிருந்தான். ஆனால் அவன் இப்பொழுது அவளை நேரே சந்தித்ததுமே ஒருமாதிரி கலவரம் அடைந்துவிட்டான். அதனால் முகத்தில் அசடுவழிய ஆரம்பித்தது. அவள் அவன் கையைப் பலமாகப்பற்றி...

"யார்ட்ஸாவைப் பார்க்கவில்லையா?" என்று கேட்டுக் கொண்டே, அவனிடமிருந்து பதில் வருவதற்குள்ளாகவே

பின்னலிருந்து யாரோ தள்ளிவிட்டதுமாதிரி அவன் மீது முற்றிலும் சாய்ந்தாள்.

அவள் மெலிந்தவள். ஒல்லியானவள். நீண்ட மூக்கும், கூறிய பார்வையுமுடையவள். கழுகுப் பார்வைக்காரி. பேச்சை மடமடவென்று அள்ளிக்கொட்டுவாள். அவள் பிறர் சொல்லுவதைக் கேட்டு வாங்கிப் பேசமாட்டாள். அவளே அத்தனையையும் பேசித்தீர்ப்பாள். அவளோடு காதல் கொள்வதென்பது அவ்வளவு சுலபமான காரியமல்ல. லப்தேவிடம் அவள் தனித்திருந்தபொழுது அவள் நீண்ட நேரம் சிரித்துக் கும்மாளமடித்துக்கொண்டிருந்திருக்கிறுள். அவள் முப்பது வயதானவள்; ஆனுல் அவள் பதினேழு வயது பருவமங்கை என்று கருதியிருந்தாள். அவள் அடிக்கடி முகத்தை தன் கையால் பொத்திக்கொள்வாள். அவன் அவளை முத்தமிடும்பொழுதெல்லாம் விளக்குகளை அணைத்தாகவேண்டும். அவள் தன்னுடைய வாழ்க்கையில் காதல்தான் முக்கியம் என்று கொள்ளவில்லை என்று அவனிடம் சொல்வாள். அவள் ஒரு பள்ளி ஆசிரியரைக் கல்யாணம் செய்துகொண்டிருந்தாள். ஆனுல் அவனேடு ஒரு வருஷம் கூட வாழவில்லை. அவள் பிறருக்கு சங்கீதம் சொல்லிக்கொடுத்து வாழ்க்கை நடத்திவந்தாள்.

அன்று கச்சேரி முடியுந் தருணம் அவள் லப்தேவுக்குப் பின்புறம் நின்று கொண்டிருந்தாள். அவள் சடந்த வருஷமும், அதற்கு முந்திய வருஷமும் எந்த வெல்வெட் 'ப்ளவ்ஸ்' அணிந்திருந்தாளோ, அதையே அணிந்து வந்திருந்தாள்; ஆனுல் கையுறைகளும், விசிறியும் புதியன. அவளுக்கு ஆடைவிஷயத்தில் அதிக மோகமிருந்தது. ஆனுல் அவளுக்கு உடுத்திக்கொள்ளத் தெரியாது. அவள் நன்றுக உடுத்திச்கொண்டு பாடம் சொல்லிக்கொடுக்கப் போகும் பொழுது அவளைப்பார்த்தால் ஏதோ ஒரு வாலிப கன்னியாகத் தோன்றும்.

கச்சேரியில் ஆரவாரம் அதிகமிருந்தது. 'ஒன்ஸ்மோர்' கூச்சல் எழும்பியது.

போலினு, லப்தேவை நெருங்கி "இன்று மாலைப் பொழுதை என்னோடு கழிக்கலாம். நான் சொல்லி நீங்கள் தட்டிக்கழிக்கமுடியாது. கச்சேரி முடிந்ததும் நாம் வெளியே சென்று தேநீர் அருந்துவோம். நீங்கள் எனக்கு ரொம்பவும் கடமைப்பட்டவரல்லவா? என் அற்பவேண்டுகோளை நீங்கள் உதறிவிடமாட்டீர்களென்று நம்புகிறேன்" என்றாள் மடமட வென்று.

"சரி நாம் போவோம்" என்று தலையை அசைத்தான்.

கச்சேரி முடிந்தது. வந்திருந்தோர் கலைய ஆரம்பித் தனர். லப்தேவ் தன்மனைவியிடம் சொல்லாமல் வெளியே போவதற்கில்லை. அவன் அதற்காக கதவண்டை சென்று காத்துக்கொண்டிருந்தான்.

"எனக்கு வரட்சியாக இருக்கிறது. தேநீர் குடித்தாக வேண்டும். என்னுடைய இருதயமும் வரண்டு தவிக்கிறது" என்றாள் போலினு.

"இங்கேயே சாப்பிட ஏதாவது கொண்டுவரச் சொல்லட்டுமா? சரி...சரி. நாம் 'பவ்வட்டு'க்குப் போவோம்" என்றான்.

"நான் என்ன வியாபாரியா? கள்ளமார்க்கெட்டில் சம்பாதித்து வைத்திருக்கிறேனு! அங்குள்ள 'சர்வர்'களுக் கெல்லாம் காசு விட்டெறிய" என்றாள்.

அவன் அவளை கையால் அணைத்து அழைத்துச்செல்ல முயன்றான். ஆனால் அவள் அவனை விடுவித்துக்கொண்டு தான் அபலை அல்ல, தனக்காக எந்த ஆடவர் பாதுகாப்பும் தேவையில்லை என்று சுற்றி வளைத்துப் பேசினாள்.

அவள் லப்தேவோடு சேர்ந்துபோகும்போது "நீங்கள் யாரை திருமணம் செய்துகொண்டீர்கள்? தங்களுக்கு கண் கள் தான் இருந்ததா? இருந்திருந்து அவளைப்போய் மணம் செய்துகொண்டீர்களே! நான் ஏதோ தங்களை பிரமாதமாக தங்களுடைய புத்திசாலித்தனத்திற்காகவும். உதார குணத் திற்காகவும் விரும்பியிருந்தேன். அந்த சீனப் பொம்மைக்கு

தங்களிடம் என்ன வேண்டியிருக்கிறது. தங்களுடைய பணம். ஆம். தங்களுடைய பணம்" என்ருள்.

"போலின! அந்த விஷயத்தை விட்டுவிடு. நானே என்னுடைய கல்யாண விஷயமாக — நீ சொன்ன அத்தனை கேள்விகளையும் கேட்டுக்கொண்டிருக்கிறேன். ......என்னை வீணை மனே வேதனைக்கு ஆளாக்காதே" என்ருன்.

யூலியா அப்பொழுது கோஸ்டியா, இரு டாக்டர்கள், ஒரு ஆபீசர், கிஷ் என்ற ஒரு வாலிபர் ஆகியோரோடு வந்தாள். அவள் அவளுடைய மாமனர் வெகுமதியளித்திருந்த வைர புரூச்சை அணிந்து அழகாக உடுத்தியிருந்தாள்.

"நீ கோஸ்டியாவோடு போ. நான் பின்னல் வந்து சேருகிறேன்" என்று தன் மனைவியிடம் லப்தேவ் விடை பெற்றுக்கொண்டான்.

யூலியா அதற்கு சரியென்று தலையையசைத்து வீடு நோக்கிச் சென்ருள்.

அப்பொழுது போலின அவனை வெறுப்போடும், ஆத்திரத்தோடும், வேதனையோடும் பார்த்தாள்.

லப்தேவ், அவளோடுவீட்டுக்குப் போகவிரும்பவில்லை. ஏனெனில் அவள் அழுவாள், கட்டிப் புரளுவாள், கண்டவாறு பேசுவாள் என்பதெல்லாம் தெரிந்தே வைத்திருந்தான். ஆகவே அவளை ஒரு விடுதிக்கு அழைத்து அங்கு தேநீர் அருந்தலாமென்று நினைத்து முயன்ருன். அதற்கு அவள் "முடியாது. முடியாது. நாம் வீட்டுக்குத்தான் போக வேண்டும். என் முன்னே விடுதி — கிடுதி என்றெல்லாம் பேசக்கூடாது" என்ருள். அதோடு அங்கு ஆண்களுடைய சுருட்டு வாடையும் — பலபல ஆண்கள் வாடையுமே அதிகம் வீசுமென்றுகூறி, அங்கு கேட்கப்படும் சங்கீதமோ, ஒரே இரைச்சலை உண்டாக்கி தலைவேதனையையும் கிளப்பிவிட்டுவிடுமென்ருள்.

அவர்கள் ஹாலைவிட்டு வெளியே வந்ததும், 'ஸ்லெட்ஜ்' அமர்த்திக்கொண்டு அவள் தங்கியிருந்த வீடுநோக்கிச்

சென்றூர்கள். போகும்போதே அவளுக்கு பழைய நினைவுகள் தோன்றின. அவளை முதன்முறையாக யார்ட்ஸேவ் வீட்டில் தான் சந்தித்திருந்தான். அப்பொழுது அவள் யார்ட்ஸே வுக்கு சங்கீதம் சற்றுக்கொடுத்திருந்தாள். அவனும் தனக்கு முன்பின் தெரியாத சங்கீத ஞானத்தைக் கற்றுன்.

போகும்பொழுதே அவள் "நான் தங்களுக்கு ஐந்து பாடங்கள் வரை கற்றுக்கொடுத்திருக்கிறேன். அதை நன்ருக நினைவுபடுத்திக்கொள்ளுங்கள். என்னிடத்தில் பாடங் கற்றுக்கொள்கிறவர்கள் சுத்த முட்டாள்களாயிருக்கின்றனர். அவர்களுக்கு சொல்லிக்கொடுப்பதைவிட தெருக்கம்பங் களுக்குச் சொல்லிக்கொடுத்தாலும் பயன்படும். நான் தங் களைப் போன்றவர்களுக்கு சொல்லிக் கொடுத்து அலுத்துப் போய்விட்டேன். நான் எவ்வளவு நாளைக்குத்தான் கஷ்டப் படுவது? எப்படியாவது கஷ்டப்பட்டு நான் முன்னூறு ரூபிள் சேர்த்துவிட்டால் போதும். பின் நான் எல்லாவற்றை யும் உதறிவிட்டு கிரீமியா போய், அங்கு கடற்கறையில் படுத்து ஆனந்தமாக கடற்காற்றை சுவாசித்து அனுபவிப் பேன். என்ன கடற்காற்று! என்ன மந்தகாசமான கடற் காற்று!!" என்ருள்.

"நீ ஒருநாளும் அப்படிப் போகப்போவதில்லை. ஏனெ னில், முதலில் உன்னுல் பணத்தை மிச்சப்படுத்த முடியாது. இரண்டாவது உன்னுல் விருதாவாக பணத்தையும் செலவு செய்ய மனம் வராது. நான் இப்படிச் சொல்கிறேனென்று வருத்தப்பட மாட்டாயென்று நினைக்கிறேன். உனக்குப் பணம் வேண்டுமென்ருல் உனக்கு வேண்டிய சிநேகிதர்களி டம் கேட்டு வாங்கிவிடலாமே!"

"எனக்கு சிநேகிதர்களே கிடையாது" என்று ஆத் திரம் நெஞ்சடைக்கச்சொல்லி "என்னிடம் மடத்தனமாக எதையும் பேசவேண்டாம்; நான் பாட்டாளி வகுப்பைச் சேர்ந்தவள்; எங்களுக்குள்ள ஒரே உரிமை, எவராலும் நாங்கள் வாங்கப்படாமலிருப்பதுதான். எந்த வர்த்தகக் கூட்டமும் எங்களை விலைக்கு வாங்கிவிட முடியாது; நாங்கள்

கடை முதலாளியை துச்சமென மதிக்கிறேம். எப்படியும் என்னை உங்களால் விலைக்கு வாங்கமுடியாது. நானென்ன பூவியாவா?''என்றுள்.

இதற்குள் வண்டியும் வீடுவந்தடைந்தது. லப்தேவ் வண்டிக்காரனுக்குக் கூலி எதுவும் கொடுக்கவில்லை. ஏனெனில், அதற்கு அவளொரு தனிப் பிரசங்கம் ஆரம்பித்து விடுவாள் என்கிற பயம். அவளே அவள் இஷ்டப்படி வண்டிக்காரனுக்கு வாடகை கொடுத்தாள்.

அவள் குடியிருந்த இடம் சிறுமுன்கட்டு வீடு. வீட்டுக்காரியே அவளுக்கு சாப்பாடும் போட்டுவந்தாள். அவளுடைய 'பியானே' வாத்தியம் யார்ட்சேவின் வீட்டிலிருந்தது. அவள் தினந்தோறும் யார்ட்சேவ் வீட்டிற்குப்போய் அங்கு வீணை வாசித்து வருவாள். அவளுடைய அறையில் ஒரு நாற்காலியும், ஒரு படுக்கையுந்தான் இருந்தது. வேறு அவ்வறையில் புத்தகங்களோ, வாசனை வஸ்துக்களோ அல்லது மேஜையோ கிடையாது. ஒரு சர்வகலாசாலை படிப்புப் படித்தவளுடைய இடமா இப்படி இருக்கிறதென்று யாருக்கும் சந்தேகம் ஏற்படாமற்போகாது.

வேலைக்காரி சோமபானம் கொண்டுவந்து லப்தேவுக்கு கொடுத்தாள். போலினு தேயிலையைத் தயார்செய்து தானே மூன்று கோப்பை தேநீரைப் பருகினுள்.

"எப்படியோ கல்யாணம் செய்துகொண்டாகிவிட்டது. நான் ஏதோ வேதனைப்படுத்திவிடுவேனென்று நினைக்க வேண்டாம். நான் என்னுடைய இருதயத்திலிருந்து தங்களை அகற்றிவிடுகிறேன்; ஆனுல் இருந்தும் – இருந்தும் பெண் என்றல் அறிவுள்ளவளையோ, ஞானமுள்ளவளையோ தேடிப் பிடிக்காமல், அழகுக்காரியாக, பசப்புக்காரியாக, கண்ணுக்குக் குளிர்ச்சியானவளாகப்பார்த்துப் பிடித்துவந்தீர்களே! போதும் போதும் தங்கள் யோக்கியதை, என்ன...கண்ணுக்குக்குளிர்ச்சி! ஹ-ஹா-ஹா-வென்று சிரித்தாள்". சிரிப்போடு கண்களினின்றும் கண்ணீரைக்கொண்டுவந்து பின்னும் சம்பாஷிக்கலானுள்.

" எப்படியிருந்தாலும் சந்தோஷந்தானே!"

" இல்லை "

" அவள் தங்களை காதலிக்கிறுளா? "

" இல்லை "

அதற்குள் லப்தேவ் குழப்பமடைந்துவிட்டான். ஒரு மாதிரி கலவரமடைந்தவனுகி அந்த அறையிலேயே இங்கு மங்குமாக உலாவலானுன்.

"இல்லை போலினு" நீ உண்மையைத் தெரிந்துகொள்ள வேண்டுமென்றுல் நான் உண்மையிலேயே சந்தோஷமா யில்லை. அதற்கு நான் என்ன செய்யமுடியும்? நான் ஏதோ முட்டாள்த்தனமாக நடந்துகொண்டுவிட்டேன். நடந்தது நடந்ததுதான். இனி நான் வேதாந்தம் பேசவேண்டியது தான். அவள் என்னை காதலுக்காக கல்யாணம் செய்து கொள்ளவில்லை. ஏதோ என்னிடம் திரண்ட செல்வம் குவிந்துகிடக்கிறதென்பதற்காகத்தான்... அவளும் தவறை உணராமலில்லை — நானும் தவறை உணர்ந்துதான் இருக் கிறேன்.... நாங்கள் இருவரும் என்னமோ சேர்ந்தே படுத்து தூங்குகிறேம். ஆனுல் பகலிலே என்னிடம் பத்து நிமிஷங் கள் கூட நிற்கமாட்டேனென்கிறுள். அவளுக்குப் பகலில் என்னேடு பழக வெட்கப்படுகிறுள்போலிருக்கிறது. அவள் ஏதோ சாக்குபோக்குகள் காட்டி என்னை உதறிவிடுகிறுள்" என்றுன்.

"அப்படியிருந்தும் அவள் தங்கள் பணத்தைத்தானே செலவழிக்கிறுள் " என்றுள்.

"என்ன முட்டாள்த்தனம்! பணம் யாருடையதாயிருந் தாலென்ன? என்னுடையது வேறு அவளுடையது வேறு? பாவம்! அவள் நல்லவள் அவளென்னசெய்வாள்? தன் தகப்பனுருக்குப்பயந்து அவள் என்னைக் கல்யாணம் செய்து கொண்டாள்; அவ்வளவுதான்" என்றுன்.

" நீங்கள் பணக்காரராகயில்லாவிட்டால் அவள் தங் களைக் கல்யாணம் செய்துகொண்டிருப்பாளென்று நினைக்கி றீர்களா என்ன? " என்றுள் மீண்டும் போலினு.

"நான் எப்படி நிச்சயமாக சொல்லமுடியும்" என்று வெறுப்போடுசொல்லி "போலினு, அனுவசியமாக அவளைப் பற்றி பேசாதே கடவுள்மீது ஆணை. போதும்! போதும்!" என்றான்.

"தாங்கள் அவளைக் காதலிக்கிறீர்களா?"

"வேறு வழியில்லாமல்."

அப்படியே அமைதி சூழ்ந்தது. அவள் நான்காவது தடவையாக தேநீரைப் பருகினுள். அவன் இங்குமங்கும் நடைபோட்டுக்கொண்டிருந்தான். அவனுக்கு அப்பொழுது தன்மனைவி டாக்டர்வீட்டில் விருந்துண்பாள் என்ற எண்ண மோடியது.

"காரணமே இன்னதென்று தெரியாமல் காதலிப்ப தென்பது வேடிக்கைதான். அதற்குப்பெயர் மிருக உணர்ச்சி நீங்கள் பகட்டு உடலுக்கு அடிமையாய் போனீர்கள். உங்களுக்கு விஷமிட்டுவிட்டாள். உங்களுக்கும் மிருகத் திற்கும் என்ன வித்தியாசம்? நீங்கள் அவளிடமேதான் போகத் தகுதி"என்றுள் வம்புக்காரி.

அவள் அவனைப்பிடித்து தள்ளாததுதான் பாக்கி. அவன் தொப்பியை எடுத்து விசிறி அடித்து அவனைப் போட்டு அலங்கோலப்படுத்திவிட்டாள்.

பாவம் அவன் என்ன செய்வான்? அவன் கம்பளக் கோட்டை எடுத்து மாட்டிக்கொண்டு வெளியேறினுன். ஆனுல் அவள் விட்டு விடுகிறவளா? அவள் பின்னுலேயே ஓடினுள். அவனை வழிமறித்து அவன் இரு கைகளையும், பற்றிக்கொண்டு ஓ...வென்று அழுதாள்.

"சரி போ-போ" என்று அவன் அவளை உதறினுன். ஆனுல் அவள் கைப்பிடியிலிருந்து அவனுல் விடுவித்துக் கொள்ள முடியவில்லை: "ஆத்திரப்படாதே! போனுல் போகி றது" என்றுன்.

அவள் கண்களில் நீர் வழிந்துகொண்டிருந்தது. அவள் முகம் சவம்போல் வெளுத்துப்போய்விட்டது. அப்படி

யிருந்தும், அவள் பிடியிலிருந்து அவனால் மீட்டுக்கொள்ள முடியவில்லை. அவள் அப்படியே களைத்துச் சோர்ந்து பிரக்ஞைபற்று விழுந்தாள். அவன் அவளை பத்திரமாகத் தூக்கி வீட்டுமெத்தையில் படுக்கவைத்து அவளுக்கு பிரக்ஞைவர பத்து நிமிஷமானவரை அவளருகிலேயே உட்கார்ந்திருந்தான். அவள் கைகள் ஜில்லிட்டுவிட்டது. நாடிகள் பலஹீனமாகியது.

அவள் கண்ணை விழித்துப்பார்த்து, "நீங்கள் போங்கள் போய்விடுங்கள், இல்லாவிட்டால் நான் மீண்டும் அலற ஆரம்பித்து விடுவேன்; எனக்கு என்னைக் காப்பாற்றிக்கொள்ளத் தெரியும்" என்றாள்.

அவன் அவள் வீட்டைவிட்டு வெளியேறி தனக்காக நண்பர்கள் காத்துக்கொண்டிருப்பார்களென்று தெரிந்துங்கூட, நேரே டாக்டரின் கிளப்புக்குப்போகாமல், வீட்டிற்குப் போனான். போகும்போதே தன்னையே முழு அன்போடு காதலித்து நேசித்த அவளையே தான் ஏன் கல்யாணம் செய்துகொண்டிருக்கக் கூடாதென்று நொந்துகொண்டான். தன்னை உயிருக்குயிராக மதித்தவள், தன்னுடைய நல்வாழ்வுக்காகக் கவலைப்பட்டவள், தன்னுடைய இன்பத்திற்கு ஆக்கமளித்தவள் — அப்பேர்பட்டவளை, தான் கைவிட்டதின் பலன்தான், தனக்கு சந்தோஷமில்லாத ஒரு மனைவி கிடைத்தாள் போலும் என்று யோசித்தான். தனக்கு நல்ல தண்டனை வேண்டுமென்றும் நினைத்தான்.

காதலர்களின் தேனினுமினிய இன்பக் களியாட்ட நாட்கள் நூறாகியும், தன் மனைவி எப்பேர்ப்பட்டவளென்று அவனால் உணர்ந்துகொள்ள இயலவில்லை. அவள் பள்ளி சிநேகிதிகளுக்கும்— தகப்பனாருக்கும் பக்கம் பக்கமாக வரைந்து கடிதம் எழுதுகிறாள். ஆனால் தன்னிடமோ 'சாப்பாடு தயாராகிவிட்டது', 'சாப்பிட வருகிறீர்களா?' 'காற்று ஜில்லென்று வீசுகிறது' என்று மட்டுந்தானே பேசுகிறாள் என்று கவலைப்பட்டான். இராக்காலங்களிலோ— அவள் அப்படியே பிரார்த்தனையில் உட்கார்ந்து விடுகிறாள். எவ்வளவு நேரந்தான் பிரார்த்தனை செய்வது? அம்மம்மா.

அதற்குப் பின்னல் ஒரு விக்கிரகம் பாக்கியில்லாமல் அத்தனைக்கும் கும்பிடுதண்டங்கள். அதோடு சிலுவைக்குவேறு முத்தங்கள் என்று அங்கலாய்த்தான்.

"அவளுக்கு என்ன பிரார்த்தனை வேண்டிருக்கிறது? என்னதான் அவள் நீண்ட பிரார்த்தனை செய்கிருள்? எதற்காகத்தான் செய்கிருள்?" என்ற கேள்விகள் அவனை உறுத்தி வேதனையளித்தது.

இத்தனையும் நினைத்துப்பார்த்து அவன் தன்னையும் அவளையும் தனக்குள்ளேயே கடிந்துரைத்துக்கொண்டான்.

ஆனல் இரவு நேரங்களிலோ அவளோடு இன்பத் தூக்கங்கள் தூங்கும் போது அவளுடைய பரிசுத்தத் தன்மை, அவளுடைய குற்றமற்றத் தன்மை, அவளுடைய பயபக்தி அவனை அப்படியே கவர்ந்திருந்தது. அப்பொழுதெல்லாம் அவளை அன்போடு அரவணைத்துக்கொள்வான்.

என்ன இருந்தாலும் அவனுடைய திருமண வாழ்வு அவனுக்கு வேதனையாகத்தானிருந்தது. அவன் அவளோடு சினிமாவோ — நாடகமோ பார்க்கப்போனல் தன்னையும் அவளுடைய ரசிகத் தன்மையில் ஈடுபடுத்திக் கொள்ளாமல், அவள் சினிமாவையோ நாடகத்தையோ பார்த்துப் பரவசப்படுவதும், பரிதாபப்படுவதும் அவனுக்கு வெறுப்பையேயூட்டின. அவளை அவன் புரிந்துகொள்ள முடிந்ததை விட—அவனின் சிநேகிதர்கள் அத்தனை பேரும் அவளை நன்கு புரிந்து அவளிடம் பிரீதியோடு நடந்தது அவனுக்கு இன்னும் அதிக கசப்பையூட்டியது.

அவன் வீடுசேர்ந்ததும் உடுப்புகளை மாற்றிக்கொண்டு படிக்கும் அறைக்குச் சென்று ஒரு நாவலைப் படிக்கத் தொடங்கினன். அவன் மனைவி அப்பொழுது வீட்டிலில்லை. அரைமணி நேரத்தில் அவள் வந்து சேர்ந்தாள். அவள் மான்விழியோடும், சிவந்த கன்னங்களோடும், புன்னகைப் பூத்து நேரே அவனின் படிப்பு அறைக்குச் சென்ருள். என்ருலும் மூச்சுத் திணறியவளாய் " பிரஸினுவில் பெரு நெருப்புப் பிடித்திருக்கிறது. ஜுவாலைகள் மேகமண்டலம்

வரை தெரிகிறது. நான் இவானுவோடு போய் பார்த்து வருகிறேன்" என்றாள். அதற்கு "சரி! சரி!! போய் வா என் அன்பே" என்று மறுமொழி அளித்தான்.

அவளுடைய வசீகரத் தோற்றம், அவளுடைய புதுமைத் தன்மை, நெருப்பைப்பற்றி அவள் சொன்னபொழுது அவளிடைத் தோன்றிய கள்ளங்கபடமற்ற அவளின் குழந்தை உள்ளம் லப்தேவை அப்படியே காந்தம்போல் இழுத்தது. அவன் அதற்குப்பின் அரைமணி நேரம் படித்துவிட்டு படுத்துறங்கிவிட்டான்.

அதற்கு மறுநாள், லப்தேவிடமிருந்து முதலில் வாங்கிய இரு புஸ்தகங்களையும். அவன் சம்பந்தப்பட்ட எல்லா புஸ்தகங்களையும், புகைப்படங்களையும் போலினு அவனுக்குத் திருப்பியனுப்பி 'நமஸ்தே' என்று மட்டும் குறிப்பு அனுப்பியிருந்தாள்.

* * *

அக்டோபர் மாத இறுதியில் நினுவின் நிலை கவலைக்கிடமாகிவிட்டது. அவள் நாளுக்கு நாள் மெலிந்து எலும்பும் தோலுமானுள். ஆனுல் அவள் மட்டும் அப்பொழுது சாகப்போவதில்லை என்று நினைத்துக்கொண்டு தினசரி நன்கு உடுத்திக்கொண்டு படுத்த படுக்கையிலிருந்து வந்தாள். அவள் நாளுக்கு நாள் மெலிந்தாளே தவிர பேச்சு மட்டும் வரவர அதிகப்பட்டே வந்தது. அவள் மூச்சு விடுவதற்கு கஷ்டப்பட்டாலும் அவள் பேச்சை நிறுத்தவில்லை.

அன்று பௌர்ணமி மாலை. பனிக்கட்டிகளில் சரிந்து விளையாடும் கோலாகலம் அவளுடைய காதுக்கும் எட்டியது. நினுவின் பக்கத்தில் சாஷா அரைத் தூக்கத்தில் படுத்திருந்தாள். பாவம் தனிமையில் எவ்வளவு நேரந்தான் நோயாளிக்குத் துணையா யிருப்பாள்.

"அவன் தந்தையின் பெயர் எனக்கு ஞாபகத்திற்கு வரவில்லை. ஆனுல் அவன் பெயர் இலான்—ஒரு குமாஸ்தா.

அவன் நல்ல குடிகாரன். மாதா மாதம் எங்களிடம் வந்து ஒரு பவுண்டு சீனியும், இரண்டு அவுன்ஸ் தேயிலையும், பண மும் வாங்கிப்போவான். அவன் மிதமிஞ்சிய குடியினுல் மரணமடைந்தான். அப்பொழுது அவன் ஏழுவயது சிறு வனை விட்டுச்சென்ருன். பாவம் அனுதை...நாங்கள் அவனை உன் தந்தைக்குத் தெரியாமல் ஒளித்து வைத் திருந்து ஒரு வருஷம் வளர்த்தோம். கோஷ்டியாவுக்கு ஒன்பது வயதாகிவிட்டது. எனக்கும் கல்யாண நிச்சயமா னது. அவனை பகல் பள்ளிக்கூடத்திற்கு அழைத்துச் சென்றேன். ஒருவரும் அவனை சேர்த்துக்கொள்ள இசைய வில்லை. அவன் அழுதான். 'எதற்கடா அழுகிருய், அழா தேடா தங்கம்' என்றேன். அவன் ரஸாகுழாய் பள்ளிக் கூடத்தில் சேர்க்கப்பட்டான். அவன் தினந்தோறும் பள்ளிக் கூடம் நடந்துபோய்வந்தான்.—லப்தேவ் அவனுக்காக சம் பளம் கொடுத்து உதவினுன். அவன் படித்துத் தேறி முன்னேறினுன்... அவன் இப்பொழுது மாஸ்கோவில் லாயராக இருக்கிருன். ஸயன்ஸில் நல்ல பாண்டித்தியம். லப்தேவுக்கு நல்ல நண்பன்...அவன் எங்கள் குடுப்பத்தால் வளர்க்கப்பட்டவன். அவனும் எங்களை மறக்கவேயில்லை... இல்லை'' என்ருள் நினு சாஷாவிடம்.

நினு மெது மெதுவாகப் பேசி அப்படியே சும்மா இருந்து பிறகு எழுந்து உட்கார்ந்து 'எனக்கு மூச்சுவிட முடியவில்லை கடவுளே என்மீது கிருபை பாலிப்பாயாக' என்ருள்.

சாஷாவுக்கு தன் தாய் உடனே இறந்துவிடுவாளென்று தோன்றிவிட்டது. அவள் முகம் அந்த அளவுக்கு மாறி யது.

'அம்மா சும்மா இரு' என்று சமாதானப் படுத்தினுள்.

"அடுப்பங்கரைக்கு ஓடு. நான் நன்ருக இருக்கிறேன். அப்பாவை அழைத்துவா'' என்ருள்.

சாஷா "அப்பா! அப்பா!'' என்றழைத்துக்கொண்டே அங்குமிங்கும் ஓடினுள். வீட்டில் வேலைக்காரர்கள் கூட

இல்லே. விடாமட்டும் அழுக்கு துணிகளுக்கு மத்தியில் தலேகாணி யில்லாமல் படுத்துக் கிடந்தாள். சாஷா வீதி வழியே ஓடிஞள். நர்ஸ் மட்டும், பனிக்கட்டியில் சருக்கி விழும் விளையாட்டைக் கவனித்துக்கொண்டு நின்ருள். ஆற்றுக்கு அப்பால் சருக்கு விளையாடுமிடத்திலிருந்து ராணுவ வாத்தியம் ஒலித்தது.

"நர்ஸ்! அம்மா இறந்துகொண்டிருக்கிருள்... அப்பா எங்கே" என்ருள் சாஷா.

நர்ஸ், ஓடோடி வீடுநோக்கிச்சென்று விளக்கேற்றி வைத்தாள். சாஷா தெருவோடு ஓடிஞள். அவளுக்குத் தன் தகப்பஞர்—இரண்டு குழந்தைகளுடன் வேருெருவளுடன் பாஜர்னித் தெருவில் வசிப்பதாக வேலேக்காரர்கள் மூலம் தெரிந்துவைத்திருந்தாள். அவள் போகும்போது ஒரு 'ஸ்லெட்ஜ்' எதிரே தென்பட்டது. அவள் அதை அமர்த்திக்கொள்ளலாமென்று நினைத்தாள். ஆனுல் அந்த ஸ்லெட்ஜ்காரன் அவளே வழிதெரியாத பக்கம் ஓட்டிக் கொண்டுபோய் நகைகளேத் திருடிக்கொண்டு கழுத்தை முறித்து—சுடுகாட்டில் எறிந்துவிடுவான் என்று அவள் கேட்டிருந்த கதை ஞாபகத்திற்கு வந்ததால், அவள் வெகு வேகமாக ஓடிஞள். கடைசியாக, மேல்மூச்சு கீழ்மூச்சு வாங்கும் நிலேமையில் அவள் பாஜர்னி தெருவுக்குப்போய் வழியில் ஒரு கிழவியைச் சந்தித்து தன் தந்தையைப்பற்றி விசாரித்தாள். அவள் சாஷாவை கையைப்பிடித்து அழைத்துக்கொண்டுபோய் வீட்டைக் காட்டிஞள். அங்கு அவன் இரு குழந்தைகளோடும்—ஒரு சீமாட்டியோடும்—சோமபானத்தைப் பருகிக்கொண்டு உட்கார்ந்திருந்தான். அவன் சாஷாவைக் கண்டதும் நிலேமையை உணர்ந்தவஞய் 'அம்மாவுக்கு என்ன! என் கண்ணே சொல்' என்ருன்.

சோகச்செய்தியை அவன் கேள்வியுற்றதுமே, படபடத்தவஞகி ஸ்லெட்ஜைக் கொண்டுவரச்சொல்லி புரப்பட்டான்.

அவர்கள் வீடுவந்தடைந்தபோது விளக்கேற்றப்பட்டிருந்தது. அவள் முகம் கருத்திருந்தது. கண்கள் மூடி

இருந்தது. அவளைச்சுற்றி நர்ஸ், வேலைக்காரி, சமையல்காரி, ஒரு குடியானவன் மற்றும் சிலர் சூழ்ந்திருந்தார்கள். அறையின் உள்ளே லிடா நின்றுகொண்டு கண்கொட்டாமல் தன் தாயையே உற்றுப் பார்த்துக்கொண்டிருந்தாள்.

பானுராவுக்கு ஏற்றியிருந்த விளக்கைக் கண்டதுமே கோபம் பொங்கி வந்தது. இதெல்லாம் என்ன? என்று சொல்லிக்கொண்டே — நினுவிடம் நடுக்கத்தோடு போய் "நினு நன்ருகப் படுத்துக்கொள், என் கண்ணே படுத் துறங்கு" என்ருன். அவளும் அவனைக் கண்விழித்துப் பார்த்தாள். ஆனுல் அவனை யாரென்று அவள் அறியாள்.

பாதிரியும் டாக்டருமான ஸெர்ஜி அங்கு வந்து சேர்ந் ததுமே—வேலைக்காரர்கள் பயபக்தியோடு சிலுவைக்குறி செய்து அவளுக்காகப் பிரார்த்தனை செய்தார்கள்.

டாக்டர் அறையைவிட்டு வெளியேறும்போது "என்ன துக்ககரமான சம்பவம். அவள் இன்னமும் வாலிபந்தான். இன்னும் நாற்பது வயதுகூட ஆகவில்லை" என்ருர்.

குழந்தைகளின் அழுகுரல் கிளம்பியது. பானுராவ்— கண்ணீரோடு டாக்டரிடம் சென்று ஈனக் குரலில்

'எனக்கு ஒரு உதவி செய்யுங்கள் மாஸ்கோவுக்கு ஒரு தந்தி கொடுங்கள்' என்ருன்.

டாக்டரும் அதற்கு சம்மதித்து தன் மகளுக்கு கீழ் வருமாறு மாஸ்கோவுக்குத் தந்தி கொடுத்தான்.

"சீமாட்டி பானுராவ் இன்று மாலை 8-மணிக்கு இறந்து விட்டாள். தேவர்னுனி தெருவில் ஒரு வீடு ஒன்பதினுயிரத் திற்கு அடமானம் வைக்கப்பட்டது விற்பனைக்கு வருகிற தென்று உன் கணவனிடம் சொல். ஏலம் பனிரெண்டாம் தேதி. இந்த சந்தர்ப்பத்தை தவற விட்டுவிட வேண்டாம். தக்க யோசனை சொல்."

* * *

லப்தேவ், டிமிட்டிரோவ்கா என்ற இடத்தில் ஒரு பெரிய வீட்டில் வசித்து வந்தான். அதே தெருவிலிருந்த

லப்தேவுக்குச் சொந்தமான இரண்டடுக்கு மாடி வீட்டில் கோஸ்டியா வசித்துவந்தான் இவ்வீட்டிற்கு எதிரேயிருந்த மாடி வீட்டில் புருஷன் மனைவி ஐந்து குழந்தைகளுடன் கூடிய ஒரு பிரெஞ்சுக் குடும்பமும் இருந்தது.

குளிர் 20 டிகிரி; ஜன்னல்களெல்லாம் பனியால் மூடி விட்டது. கோஸ்டியா காலையிலெழுந்து இருபது துளிகள் மருந்து சாப்பிட்டு தேகப்பயிற்சி செய்யலானான். வேலைக் காரனான பீட்டர் சோமபானத்தைக் கொடுத்துவிட்டு தேநீர் தயாரிக்கலானான்.

"இன்று நல்ல காற்று வீசுகிறது" என்றான்.

"உனக்கும் எனக்கும் இந்தக் காற்று இல்லாமல் தானா பொழுதுபோக மாட்டேனென்கிறது. போடா போ... அந்தக் குழந்தைகள் என்ன செய்கிறார்கள்?"

"பாதிரியார் இன்னும் வரவில்லை, அலெக்ஸியா பாடம் சொல்லிக்கொடுத்துக்கொண்டிருக்கிறார்" என்றான் மறு மொழியாக வேலைக்காரன்.

வீட்டின் அடித்தளத்தில், அலெக்ஸி, சாஷாவுக்கும் விடாவுக்கும் வேதாகமப் பாடங்களைச் சொல்லிக்கொடுத்துக் கொண்டிருந்தான். இந்தக் குழந்தைகள் இங்கு ஆறு மாதங் களாக யிருக்கின்றன.வாரத்திற்கு மூன்று தடவை, நகரத் திலிருந்து ஒரு உபாத்தியாயரும் ஒரு பாதிரியாரும் வந்து பாடங்களைச் சொல்லிக்கொடுத்து வந்தார்கள். சாஷா புது ஆகமத்தையும், விடா பழைய ஆகமத்தையும் கற்றுக்கொண் டிருந்தார்கள். ஆப்ரஹாம் கதை வரை விடா நெட்டுருவுப் போட்டிருந்தாள்.

"ஆதாமுக்கும் ஏவாவுக்கும் இரண்டு குழந்தைகள் இருந்தன" என்றான் லப்தேவ். "அவர்களுக்கு என்ன பெயர்கள் சொல்லுங்கள். நினைவிருக்கிறதா?" என்றான். குழந் தைகள் ஒருவரையொருவர் பார்த்து விழித்தனர். ஏதோ சொல்ல உதட்டைப் பிதுக்கினர். ஆனால் வார்த்தைகள் வெளிவரவில்லை. முகங்களில் அழுகைக் குறிகள் தோன்ற ஆரம்பித்தன.

"இவை உங்களுக்குத் தெரிந்ததுதானே பயப்படாமல் சொல்லுங்கள் பார்ப்போம்" என்றான் லப்தேவ்.

"அபெலும் கேனிலும்" என்றாள் விடா.

'கெயினும் அபெலும்" என்று திருத்தினான்.

விடாவின் கண்களிலிருந்து முத்துபோல் ஒரு நீர்த் துளி புஸ்தகத்தில் விழுந்தது. சாஷாவும் அழுகைக்குத் தயாராகிவிட்டாள். லப்தேவுக்கு இந்தக் காக்ஷிகளைக் கண்டதும் எழுந்து சிகரெட் பிடிக்கக் கிளம்பிவிட்டான். அப்பொழுது கோஸ்டியா கையில் பேப்பரோடு மெத்தைப் படிகளிலிருந்து கீழே இறங்கினான். குழந்தைகள் அவனைப் பார்ப்பதற்கு முன்பே வணக்கம் செலுத்தினர்.

"கோஸ்டியா, அவர்களுக்கு பாடம் சொல்லிக்கொடு—நான் கொஞ்சநேரம் அவர்களோடிருந்தால் நானும் அழநேரிடும். சாப்பாட்டிற்குமுன் நான் பண்டசாலைக்குப் போக வேண்டும்" என்றான் லப்தேவ்.

"சரி சரி" என்று சொன்னான் கோஸ்டியா.

லப்தேவ் போய்விட்டான். கோஸ்டியா மேஜைக்கெதிரே உட்கார்ந்து வேதாகம சரித்திரத்தைப் புரட்டினான்.

"எவ்வளவு வரைப் படித்திருக்கிறீர்கள்" என்று அவர்களை கேட்டான் கோஸ்டியா.

"எனக்குப் பிரளயம்வரைத் தெரியும்" என்றாள் சாஷா.

"பிரளயம்—சரி—சரி. வேதாகமத்தில் செல்லியிருக்கிறது மாதிரி பிரளயமே நடந்திருக்கமுடியாது. நோவா என்பவனே இருந்திருக்கமாட்டான். இயேசு பிறப்பதற்கு ஆயிரக்கணக்கான வருஷங்களுக்கு முன்பு பூமியில் பெரிய அளவுக்கு ஜலப்பிரளயமிருந்திருக்கிறது. இது யூத பைபிளில் மட்டுமல்ல புராதனமான கிரீக்க, சால்தேனிய, இந்துக்களுடைய கிரந்தங்களிலும் கூறப்பட்டிருக்கிறது. ஜலப் பிரளயம் எப்படியிருந்திருந்தபோதிலும்—பூமி பூராவும் ஜலப்பிரளயமாக யிருந்திருக்க முடியாது. சமவெளிப்

பிரதேசங்களெல்லாம் வெள்ளக் காடாக இருந்திருக்கலாம். மலை ஏதோ இருந்திருக்கவேண்டும். இந்த கதைகளை நீங்கள் படிக்கலாம். ஆனால் இதில் நம்பிக்கைகொள்வது சரியல்ல'' என்றான்.

லிடாவின் முகத்தில், மீண்டும் அழுகைதோன்ற ஆரம் பித்து உடனே வாய்விட்டு அழுதாள். கோஸ்டியாவுக்கு ஒன்றும் புரியாமல் மலைத்துவிட்டான்.

"நான் வீட்டிற்குப் போகணும் அப்பாகிட்டே நர்ஸ் கிட்டே போகணும்'' என்றாள் லிடா.

சாஷாவும் அழுதாள். கோஸ்டியா தன்னுடைய மாடி அறைக்குப்போய் யூலியாவோடு டெலிபோனில் "என் அருமையே, சின்னக் குழந்தைகள் மீண்டும் அழுகின்றன. அவர்களைக்கொண்டு ஒன்றும் செய்யமுடியாது'' என்றான்.

யூலியா வீட்டிற்குள்ளேயே அணிந்திருந்த துணிகளோடு—குளிர்பனியில் புறப்பட்டுவந்து குழந்தைகளை ஒவ்வொன்றாக கட்டியணைத்து "அப்பா இன்று வந்துவிடுவார் தந்தி கொடுத்திருக்கிறார் அழாதீர்கள்'' என்று ஆறுதல் கூறி அவர்களை விளையாட வெளியே அழைத்துச் சென்றாள்.

லப்தேவ் வீட்டில், பகல் சாப்பாடு மூன்று மணிக்குத் தான் நடக்கும். பீட்டர்தான் காலை 5 மணிக்கு ஸ்டவ் ஏற்றுவதிலிருந்து, சமையல் வேலை செய்வது, தபால் வாங்கப் போவது, கோர்ட்டுக்குப்போவது, பண்டசாலைக்குப்போவது, சிகரெட் சுற்றுவது, யார் இரவில் வீட்டைத் தட்டினாலும் திறந்துவிடுவதுமாகிய அத்தனை காரியங்களையும் செய்துவந்தான். அவன் இரவில் எங்குதான் படுத்துத் தூங்குகிறானென்பதே யாரும் அறியாத விஷயம். அவனுக்கு 'ஸெல்ட்ஜர்' பாட்டில்களை திறந்துவைப்பதில் அலாதி குஷி. ஒருசொட்டுகூட சிந்தாது, ஒழுங்காகத் திறந்து வைப்பான்.

கோஸ்டியா சூப்பு சாப்பிடுவதற்கு முன்பு 'வோட்கா' சாப்பிட்டான்.

முதலில் கோஸ்டியாவை யூலியாவுக்குப் பிடிக்கவில்லை. அவனுடைய பேச்சும் தொண்டையும் அவளுக்கு ரம்மிய மாக யில்லை. ஆனால் அவனை வரவர தெரிந்துகொள்ள வாய்ப்பேற்பட்டதும் அவனை விரும்ப ஆரம்பித்தாள்.

கோஸ்டியாவும் அவனை அந்தரங்கமாக விஸ்வாசித் தான். அவன் தான் எழுதிவைத்திருந்த, நாவலை அவளுக்கு படிக்கக்கொடுத்திருந்தான். அவளும் படித்து அவனைப் பாராட்டி ஊக்கமளித்தாள். அவனும் புகழ்மிக்க எழுத்தா ளனாக ஆகிவிடலாமென்று எண்ணமிட்டான். அவனுடைய எழுதுமாற்றல் லப்தேவ் யார்ட்ஸேவ் போன்ற நண்பர்களுக் குக்கூடத் தெரியாது.

கோஸ்டியா லாயர்களின் கடமையை நன்குணர்ந்திருந் தான். ஆனாலும் நாவல்கள் எழுதுவதில் அவனுக்கு ஆர்வம் மிஞ்சியிருந்தது.

கோஸ்டியாவிடம் பண்டசாலையின் நூருண்டு விழா வைச் சிறப்பாகக்கொண்டாட நாள் பார்க்க வேண்டுமென்று லப்தேவ் சொல்லி வயோதிக தன் தந்தையைப்பற்றி வரவரக் கவலை யேற்படுகிறது என்றான். பின் பியோடரைப்பற்றிப் பேசினார்கள்.

அன்று மாலை 7 மணிக்கு யூலியாவும் கோஸ்டியாவும் தியேட்டருக்குப் போனார்கள். லப்தேவ் குழந்தைகளோடு வீட்டிலேயே தங்கிவிட்டான்.

அன்று மாலை 7 மணிக்கு வரவேண்டிய வண்டி இரவு ஒன்பது மணிக்குத்தான் வந்தது. கடைசியாக பானுராவ் வுந்து சேர்ந்தான். இதுவரை பொறுமையை யிழந்து காத் திருந்த குழந்தைகள் தகப்பனைக் கண்டதும் தாவிக்குதித்து கட்டிப்பிடித்து கும்மாளமடித்தன. பானுராவும் அவர்களை அன்போடு அணைத்து முத்தமிட்டான். அதோடு "நான் இங்கு சாவதானமாக தங்குவதற்கு வரவில்லை, நாளையே நான் பீட்டர்ஸ்பர்க் செல்லவேண்டும். என்னை வேறொரு நகரத்திற்கு மாற்றுதல் செய்து விட்டார்கள்" என்றான் லப்தேவிடம்.

அவன் டிரெஸ்டன் ஹோட்டலில் தங்கியிருந்தான்.

*    *    *

லப்தேவின் வீட்டிற்கு அடிக்கடி வரக்கூடியவர்கள் யார்ட்ஸேவும், கிஷ்ஷூம். யார்ட்ஸேவ் நல்ல கட்டமைந்த கருத்த கேசங்களையுடைய முக வசீகரமுடையவன்.. ஆனால் தலைமயிரை ஒட்ட கிராப் செய்திருந்ததால் அவன் தலை விகாரமாகக் காணப்பட்டது. லப்தேவ் சகோதரர்களுடன் கூடச்சேர்ந்து அவன் மொழியில் வல்லுணனாக பட்டதாரி யானான். ரசாயன சாஸ்திரமும் படித்து பட்டம் பெற்றிருந் தான். ஆனால் அவன் பூதபௌதீக சாஸ்திரத்தையும், இயற்கை சரிதத்தையும் இரு பெண்கள் உயர்தர பாட சாலைகளில் போதித்துவந்தான். வீட்டில் அவன் சமூக சாஸ்திரமும், ரஷ்ய சரித்திரமும், ரசாயன சாஸ்திரமும் ஒருங்கே ஆராய்ச்சி செய்துவந்தான். அவன் பத்திரிகைகளு க்கு புனைபெயருடன் கட்டுரை எழுதிவந்தான். அவன் தாவர சாஸ்திரத்தைப்பற்றியோ, உயிர் நூல்கள் வரலாற்றைப் பற்றி யோ பேசும்போது சரித்திரம் போதிப்பதுபோன்று போதிப் பான்; சரித்திர விஷயங்களைப்பற்றி ஆராயும்போது ஸயன்ஸ் ரீதியில் விவாதிப்பான்.

கிஷ் மூன்று வருஷம் வைத்தியப் படிப்புக்காகப் படித்துவிட்டு கணிதம் படிக்க ஆரம்பித்தான். அதில் இரு இரண்டு வருஷங்களைக் கழித்தான். அவன் தகப்பனார் பிர பல "அப்பா கம்பெனி"க்காரர். மாதா மாதம் அவனுக்காக நாற்பது ரூபிள் அனுப்பிவந்தார். அவன் தாயார் தகப்பனா ருக்குத் தெரியாமல் பதினைந்து ரூபிள் மாதாமாதம் கொடுத் துதவிவந்தாள். ஆனால் இந்தப் பணம் அவனுக்கு போதாது. கொஞ்சம் வழுக்கைத்தலையன். ஆனால் நாகரீகமாக உடுத்திக் கொள்வான். செண்ட் பைத்தியம் உண்டு; அடிக்கடி நண்பர்களோடு போட்டோ எடுத்துக்கொள்வான். அவன் மற்றவர்கள் நலனுக்காக முன்னின்று உழைப்பான். ஏதா வது நன்கொடை வசூல்செய்யக் கிளம்புவான். பெண் களுக்கு டிக்கட் வாங்கிக்கொடுப்பான். யாருக்காவது மாலை

கள் வாங்கிக்கொண்டுபோய் கொடுப்பான். பொதுவாகவே ஊரார் "கிஷ் போவான், கிஷ் செய்வான், கிஷ் வாங்கி வரு வான்" என்று சொல்லத் தலைப்பட்டனர். ஆனால் அநேக சந்தர்ப்பங்களில் குறைப்பேச்சும், வசவும், கைக்காசுக்கு நஷ்டமுமேற்படும். இதுமாதிரி காரியங்களால் அவனுக்கு பரம திருப்தியுமல்ல அல்லது ஏமாற்றமுமல்ல. யாசாவது புரபசர் இறந்துபோனால் அவன் மௌன ஊர்வலத்தில் முன்செல்வான். அவன் சம்பாஷணையில் ஒன்றுக்கு வேறொன்றைச்சொல்லி இருப்பவர்களை மகிழ்ச்சியிலாழ்த்தி விடுவான்.

யார்ட்சேவும், கிஷ—ம் வழக்கமாக மாலை நேரங்களில் தேநீர் அருந்த வருவார்கள். லப்தேவ்கள் மாலை நேரங்களில் தியேட்டருக்கோ அன்றி சங்கீத கச்சேரிகளுக்கோ போகா மலிருந்தால் இரவு சாப்பாட்டு நேரம்வரை அவர்கள் தங்கி யிருப்பார்கள்.

ஒருநாள் வெள்ளிக்கிழமை கீழ்க்கண்ட சம்பாஷணை நடந்தது.

"சமுதாயப் பிரச்னைகளை முக்கிய குறிக்கோளாகக் கொண்ட கலைதான் பயனுள்ளது, போற்றத்தகுந்தது." என்றான் கோஸ்டியா — யார்ட்சேவிடம். "அடிமைத் தனத் திற்கு விரோதமாக — பணக்காரத் தனத்திற்கு விரோதமாக எழுதப்படும் கலை மதிப்புக்குரியதாகும். அதைவிட்டு அவன் அவளைக் காதலிப்பதை கைவிட்ட பிறகும், அவள் அவனை மீளாது காதலித்தாள். அவள் காதலுக்காக — மனதில் சிந் திக்கமுடியாததெல்லாம் செய்தாள் என்றெல்லாம் எழுது வது சுத்த அபத்தம்" என்றான் யார்ட்சேவ். அதற்கு "நான் தங்கள் கருத்தை பூர்ணமாக ஒத்துக்கொள்கிறேன் இவானுவிக்" என்றாள் யூலியா. மற்றும் "முதலில் ஒரு காதல் காக்ஷி, அடுத்தது ஒரு சோகக் காக்ஷி, மூன்றாவது பிரிந்தவர்கள் கூடுவது, நான்காவதாக சொல்லவா வேண் டும்! இதுமாதிரி கதை எழுதுவதைத் தவிர—வேறு எழுது வதற்கு விஷயமொன்றுமில்லையா? இதுமாதிரி கதைகளை ஏழ்மையால் துன்புறுத்தப் பட்டவர்கள், வாழ்க்கையில்

அதிர்ப்திக்காளானவர்கள், நோயாளிகள் ஆகியவர்கள் படித்தால், அவர்களுக்கு எப்படி பிடித்தமாகயிருக்கும்?" என்றாள்.

இருபத்திரண்டு வயது நிரம்பப்பெறாத தன்னுடைய மனைவி—காதலைப்பற்றி இப்படி பச்சையாகவும், துணிந்தும் பேசுகிறாளே என்ற வேதனை லப்தேவுக்கு ஏற்பட்டது. அதற்கான காரணம் ஏதோ இருக்கவேண்டுமென்றும் அவன் நம்பினான்.

"கவிதையின் முக்கியத்துவத்தை உணரவேண்டும். அதற்காக நீங்கள் கலை விஷயங்களைப்பற்றிப் படிக்கவேண்டும். உங்களுக்கு அது பிடித்தமில்லாவிட்டால், கிரிமினல் விவகாரம், அரசியல், பொருளாதாரம், விஞ்ஞான இரகசியம் ஆகிய விஷயங்களைப் படிக்கலாம். அதற்காக வேண்டிய புத்தகங்கள் இருக்கின்றன. ஆனால் ரோமியோ ஜூலியட்டில், பேச்சு சுதந்தரத்தைப்பற்றியோ, சிறைக் கொடுமையைப்பற்றியோ எழுதவில்லை யென்று சொன்னால் அது பைத்தியக்காரத்தனமல்லவா? அதுபோல..." என்றான் யார்ட்சேவ்.

"நீங்கள் சொல்வது ரொம்ப அதிகப்படி, ஷேக்ஸ்பியர்—கோதே போன்ற மகா கவிகளைப்பற்றி நாம் பேசவில்லை. நூற்றுக்கணக்கான எழுத்தாளர்கள் காதல், கீதல் என்று எழுதுவதை விட்டு—அறிவு ஞான விஷயங்களை எழுதுவார்களானால் அது மனித சமுதாயத்திற்கு பயனுள்ளதாகயிருக்கும்" என்றான் கோஸ்டியா.

கிஷ், தான் சமீபத்தில் படித்து முடித்த ஒரு நாவலின் கதை வரலாற்றைச் சொல்வதாக ஆரம்பித்து மூன்று நிமிஷம், ஐந்து நிமிஷம், பத்து நிமிஷம் ஆனது. ஆனால் அவன் என்ன சொன்னான் என்று யாருக்குமே தெரியாது. அதோடு அவனுக்கே இன்னது சொன்னோம் என்று புரியாத அளவுக்கு திகைப்பும் முழிப்புமேற்பட்டது. "என்ன பேத்தல், உளறல்" என்றாள் யூலியா.

"கிஷ் — போதும் நிறுத்து" என்றான் கோஸ்டியா.

அனைவரும் விழுந்து விழுந்து சிரித்தனர், கிஷ்ஷனும் சேர்ந்து சிரித்தான்.

அப்பொழுது அங்கு பியோடர் வந்து சேர்ந்தான். அவன் தன் சகோதரனிடம் "வாலிபர்கள் சிரிப்பிலும், கும்மாளத்திலுந்தான் இருப்பார்கள். நாமோ தொழிலைக் கவனிக்கவேண்டும். நீ இங்கு வந்து ஒரு வாரமாகிறதல்லவா?"

"ஆமாம். நான் செய்யவேண்டிய வேலையே இன்னதென்று எனக்குத் தெரியவில்லை. வயதானவரால் நமக்கு தொந்தரவு வேறு".

"வாஸ்தவந்தான் நீயும் நானுமில்லாமலே இந்த பண்டசாலை நடந்துவிடும். ஆனால் நாம் மட்டும் உழைத்துத்தானே சாப்பிடவேண்டும். உழைப்புக்குத்தானே கௌரவம்" என்றான் மீண்டும்.

பீட்டர் கொண்டுவந்த தேநீரை சர்க்கரை இல்லாமலே பியோடர் குடித்துத் தீர்த்தான். அவன் மாலையில் வழக்கமாக பத்து கோப்பைகள் வரை தேநீர் அருந்துவான்.

லப்தேவிடம் நெருங்கி உட்கார்ந்து "தம்பி—வேதாந்த வாழ்வு வேண்டாம். முதலில் நீ நகர கவுன்சிலுக்கு தேர்ந்தெடுக்கப்படவேண்டும். பின் மெது மெதுவாக ஜில்லா போர்டுக்கும், ராஜ்ய சட்ட சபைக்கும் உயரவேண்டும். நீயோ படித்தவன், புத்திசாலி; காலக்கிரமத்தில் நீ பார்லிமெண்டு அங்கத்தினனாகிவிடுவாய். அப்பொழுது உன் கழுத்துப் பட்டைகள்மீது அழகிய ரிப்பன்கள் மிதந்துசெல்லும்".

இதற்கு லப்தேவ் பதில் சொல்லவில்லை. ஏனெனில் பிரிவி கவுன்சிலராவதும், கழுத்துப்பட்டைகள் மீது ரிப்பன்கள் தொங்குவதுமான எண்ணம் பியோடருக்கு உண்டென்பது லப்தேவுக்குத் தெரியும். இந்த நிலையில் அவன் என்ன பதில் சொல்லக்கூடும்?

இரவுசாப்பாட்டுக்கு நேரமாகியும் லப்தேவ் சாப்பிடச் செல்லவில்லை. பியோடர் அப்பொழுது கீழ்வருமாறு விவாதித்துக்கொண்டிருந்தான்.

"காலநிலை வேறுபாடுகள், சக்தி அனுசாரம், விருப்பு வெறுப்புகள், ஏற்றத்தாழ்வான வயதுகள் ஆகிய காரணங் களால் மனிதரிடையே சமத்துவமென்பது முடியாத காரி யம். ஆனால் நாகரிக மனிதர் இந்த சமத்துவமின்மையை, ஒரு பக்கம் சதுப்பு நிலத்தையும், மற்றொரு பக்கம் காடுகளை யும் பக்குவப்படுத்திவிட்டது மாதிரி, பயனற்றதாக்கிவிட லாம். படித்தவன் ஒரு பூனையையும், ஒரு சுண்டெலியை யும், ஒரு வல்லூரையும், ஒரு குருவியையும் ஒரே தட்டில் உண்ணும்படி செய்யலாம். அதுபோலவே மனித சமுதாயத் திடையே கல்வி அந்த அற்புதத்தைச் செய்துவிட முடியும். வாழ்வோ வரவர முன்னேறுகிறது. நாகரிகமும் நம் கண் முன்னே அபிவிர்த்தியாகிறது நாம் இப்பொழுது 'பெண் களு'க்குப் பதிலாக 'நாய்களை' மாற்றிக்கொள்ளும் அடிமைத் தனத்தை எப்படி வெறுக்கிறோமோ அதுபோலவே தொழிற்சாலையில் வாழும் ஜன சமூகத்தையும் அடிமை சமுதாயமென்று கருத நேரிடாமல் போகாது".

"அதற்கு நீண்டநாள் பிடிக்காது—நீண்டநாள் பிடிக் காது" என்று கோஸ்டியா சிரித்துக்கொண்டே சொன்னான். அதோடு "அந்த நிலைமைக்காக நாம் காத்திருக்கக் கூடாது. நாம் அதற்காகப் போராடவேண்டும். பூனையும், சுண்டெலி யும் ஒரே தட்டில் பால் சாப்பிடுகிறதென்றால் அது ஏதோ மனதார உணர்ந்து நடந்துகொள்வதாக அர்த்தமா? ஒரு காலத்திலும் இல்லை. அது அப்படி சாப்பிடும்படி நிர்ப்பந்தப் படுத்தப்படுகிறது."

"பியோடரும் நானும் பணக்காரர்கள். எங்கள் தகப்ப னாரோ முதலாளி. ஆம்! லக்ஷாதிபதி. அதற்காக நீங்கள் எங்களோடு போராடவேண்டியதுதான்" என்றான் லப்தேவ் —தன் தலையைத் தடவிக்கொண்டே.

"என்னோடு போராட்டமென்ற கருத்து எனக்கு விளங்கமாட்டேனென்கிறது. நான் பணக்காரன்தான். ஆனால் பணம் எனக்கென்ன அனுகூலம் செய்திருக்கிறது? நான் எப்படி மற்றவர்களைவிட சந்தோஷமாக யிருக்கிறேன்?

என்னுடைய குழந்தைப்பருவமே சுதந்திரத்தை உணராதே. அப்பொழுதுகூட புளியமிளாறு அடியிலிருந்து என்னைப் பணம் காப்பாற்றவில்லையே! நினு வியாதியாக இருந்த பொழுதோ அல்லது அவள் இறந்தபொழுதோ என்னுடைய பணம் அவளுக்கு என்ன உதவிசெய்துவிட்டது? ஜனங்களோ என்னைப்பற்றி அக்கரையோ, கவலையோ படாத பொழுது—நான் லக்ஷக்கணக்காக செலவு செய்தால்தான் என்ன? அதற்காக என்னை மக்கள் விரும்பிவிடவா போகிறார்கள்?'' என்றான் லப்தேப்.

"எவ்வளவோ நன்மைகளை தாங்கள் செய்யலாம்'' என்றான் கிஷ்.

"செய்யலாம்! நீ—நேற்று ஒரு கணித ஆசிரியரைக் குறித்துச் சொன்னாய்.'' நான் அவருக்கு உன்னைவிட என்ன உதவி செய்துவிடமுடியும்? நான் ஏதோ கொஞ்சம் பணம்கொடுக்கலாம். ஆனால் அதை அவர் விரும்பவில்லையே. நான் ஒரு சிறந்த வயலின் வாசிப்பவருக்கு உதவி செய்யும்படி பிரக்கியாதிவாய்ந்த சங்கீத வித்வானொருவரைக் கேட்டேன். அதற்கு "நீங்களே ஒரு சங்கீத வித்வானாக இல்லாத காரணத்தால நீங்கள் என்னிடம் சிபார்சு செய்கிறீர்கள்?'' என்றார் அதுபோலவே "நீங்கள் பணக்காரனின் நிலைமையில் ஒருகாலத்திலுமில்லாததால் நீங்கள் துணிந்து உதவி செய்யச் சொல்கிறீர்கள் என்று வித்வான் சொன்ன முன் மாதிரியையொட்டி நான் இதுபோது சொல்ல விரும்புகிறேன்.''

"எதற்காக பிரக்கியாதி வாய்ந்த சங்கீத வித்வானை —உவமைக்காக இங்கு இழுக்கிறீர்களென்று எனக்குப்புரியவில்லை'' என்றாள் யூலியா. அதோடு "பிரக்கியாதிபெற்ற வித்வானுக்கும் இதற்குமென்னசம்மந்தம்?'' என்று யூலியா கேட்டாள். அதைச் சொல்லும்பொழுதே யூலியா நாணமும், வெட்கமுமடைந்தாள். எனினும், முகம் ஆத்திரத்தைக் காட்டியது. ஆனால் அத்தனையையும் அவள் மறைத்துக்கொள்ள முயன்றாள். அவள் கணவனுக்கு மட்டுமல்ல,

அங்கிருந்தோர் அனைவருக்குமே அவள் சாகசம் புரிந்து விட்டது.

அவள் மீண்டும் மெதுவாக "பிரக்கியாதி வாய்ந்த வித்வானுக்கும், அதற்குமென்ன சம்பந்தம்? யாருக்காவது ஏழை எளியவர்களுக்கு உதவுவதென்பது அவ்வளவு சுலப மான காரியமல்ல" என்று முணு முணுத்தாள்.

அமைதி சூழ்ந்தது. பீட்டர் கோழிக்கறியைக் கொண்டு வந்தான். அதனை யாரும் உட்கொள்ளவில்லை. ஆனால் 'சலாட்' சாப்பிட்டார்கள்.

லப்தேவுக்கு தான் என்ன பேசினோம் என்று ஞாபகத் திற்கு வரவில்லை. ஆனால் தான் பேசியதில் எதுவும் தவ றில்லை என்று உணர்ந்தான். இருந்தாலும் சம்பாஷணையில் குறுக்கிட்டுப் பேசியதுதான் அவனுக்கு பிடிக்காமல் போய் விட்டது.

சாப்பாட்டிற்குப்பின். படிக்க அறைக்குப் போனான். அவன் மனது படபட வென்று அடித்துக்கொண்டது. ஹாலில் என்ன நடக்கிறதென்று கவனித்துக்கொண்டிருந் தான். அங்கு தானிருந்தால் உற்சாகமற்ற நிலையிலிருக்க நேரிடுமென்று கருதினான். யார்ட்சேவுக்கு பியானோ வாசிக் கவும் பாடவும் தெரியும். அதோடு தந்திர விளையாட்டு களும் செய்வான்.

"நீங்களெல்லாம் சந்தோஷமாகயிருங்கள். நான் இங்கு இருக்கப்போவதில்லை" என்றாள் யூலியா.

"நாம் எங்கேயாவது வெளியே போகலாம் யார்ட் சேவ்" என்றாள்.

அவர்கள் நகரத்திற்கு வெளியேபோக நிச்சயித்து அதற்காக மூன்று குதிரைகள் பூட்டிய 'ஸ்லெட்ஜை' அமர்த்திவரும்படி கிஷ்ஷை அனுப்பினார்கள்.

அவர்கள் தங்களோடு வரும்படி லப்தேவை அழைக்க வில்லை. ஏனெனில் வழக்கமாக லப்தேவ் இதுமாதிரி வெளிக் கிளம்புவதில்லை. ஆனால் லப்தேவுக்கு என்னமோ மனதில் தனிமை யுணர்ச்சி ஏற்பட்டுவிட்டது. அதற்காக அவன்

நினைத்துநினைத்து வருந்தினான். கண்ணீரும் சொரிந்தான். தான் ஏதோ அலட்சியப்படுத்தப்படுவதாகவும், அவமானப் படுத்தப்படுவதாகவும் நினைத்தான். அதோடு தான் ஏதோ பணமூட்டையே தவிர, அசடு என்றும், மண்டு என்றும் அவள் கருதுவதாக முடிவுக்கு வந்தான். அவள் தன் உயி ரினுமினிய நண்பனோடு அன்றிரவு இன்பநுகர்ச்சியை அனு பவித்துவிடுவாளோவென்று படபடப்போடு உணர்ந்தான். ...அவள் மீது கொண்ட இவ்வெண்ணத்தால் அவனுடைய பால்ய சிநேகிதர்களான நடிகர்கள், பாடகர்கள்மீது வெறுப்பு ஏற்பட்டது. அவள் தனக்குத் துரோகியாக, நேரிடையாக மாறிவிட்டால் தேவலாமென்று நினைத்தான். அதற்காக அவள் மற்றவனுடைய ஆலிங்கனத்தில் இருக்கக்கண்டால்— அதோடு அந்தப் 'பீடை'யை அடியோடு ஒழித்துவிடலாமே யென்று நினைத்தான்.

அங்கிருந்த பியோடர் 'மடக்' 'மடக்'கெனதேநீரைக், குடித்துக்கொண்டிருந்தான். ஆனால் அவனும் பிரிந்துபோக எழுந்துவிட்டான்.

பியோடர் கம்பள கோட்டைப் போட்டுக்கொண்டே "நமதுவயோதிகத் தந்தையாருக்கு கண்ணில் சதை வளர்ந் திருக்கவேண்டும். அவருக்கு பார்வையே மங்கிப்போய் விட்டது" என்றான்.

லப்தேவும் கோட்டை மாட்டிக்கொண்டு வெளியே கிளம்பினான். அவன் சகோதரன் அவனை வழியில் விட்டுப் பிரிந்த பிறகு, ஒரு ஸ்லெட்ஜை அமர்த்திக்கொண்டு 'யாரு'க்குப் போனான்.

அவன் பற்களை நரநரவென்று கடித்துக்கொண்டான். அது பொறுமையின் காரணத்தாலா? அல்லது ... ... அவன் மேஜையருகில் சென்று ஹாலில் நடந்த கேலிப் பாடல்களை கவனித்துக் கேட்டான். அங்கிருந்த எலெக்டிரிக் வெளிச்சம், கும்மாளமான பாட்டுகள், பவுடரின் வாசனைகள் அதோடு அங்கிருந்த பெண்களின் பார்வைகளனைத்தும் அவனைக் குழப்பத்திற்குமேல் குழப்பத்திற்காளாக்கியது. அவன் அங்கிருந்த பிரத்தியேக அறைகளில் என்னென்ன

நிகழ்கின்றனவென்று அறிந்துகொள்ள அளவற்ற அவாக் கொண்டு, கதவு இடுக்குகளின் மூலம் மறைந்து மறைந்து பார்த்தான். தான் இவ்வளவு இழிதகையான காரியத்திலீடு படுகிறேமே என்று உணர்ந்துங்கூட — அவன் அவ்வாறு செய்வதை நிறுத்தவில்லை. பின் அவன் 'ஸ்டெர்ல்னு' சென்ருன். அங்கும் யாருமே இல்லை. ஆனுல் அவன் வீட்டுக்குத் திரும்பும்பொழுது 'யாரி'லிருந்து வந்த ஒரு மூன்று குதிரை கள் பூட்டிய 'ஸ்லெட்ஜ்' அவனைத் தாண்டி கடும் வேகத்தில் பறந்து சென்றது. டிரைவரோ குடி போதையில் சீட்டி யடித்துக்கொண்டு போனுன். யார்ட்சேவ் ஹா... ஹா... வென்று அடங்கா சிரிப்போடு பறந்து சென்ருன்.

லப்தேவ் 3 மணி சுமாருக்கு வீடு வந்தடைந்தான். அப்பொழுது யூலியா படுத்திருந்தாள். ஆனுல் அவள் உறங்கி விடவில்லை என்பதை உணர்ந்து அவளண்டை போய் 'என் மீது வெறுப்புக்கான காரியம் — என்னை வேண்டாமென்பது அத்தனையும் எனக்குத் தெரியும். ஆனுல் கட்டிய கணவன் என்பதற்காகவாவது பிறர் முன்னிலையில் என்னை அவமானப் படுத்தாமல் இருக்கக்கூடாதா?" என்ருன்.

அவள் எழுந்து படுக்கையில் உட்கார்ந்தாள். அவள் கால்கள் வெடவெடவென்று ஆடியது. அவள் கண்கள் விழிப்பாகவும் முழிப்பாகவுமிருந்தது.

"என்னை மன்னியுங்கள்" என்ருள்.

அவன் ஆத்திரத்தை அடக்கிக்கொண்டான். அவளுக் கெதிரே ஸ்தம்பித்து நின்ருன். அவளுக்கும் அதிக நடுக்க மேற்பட்டுவிட்டது.

அவன் உட்கார்ந்து தலையைப்பிடித்துக்கொண்டு "நான் என்ன வேதனைப் படுகிறேன் தெரியுமா? நான் அதள பாதாளத்திற்குப் போய்விட்டேன். எனக்கு புத்தியேகெட்டு விட்டது" என்ருன்.

"நானென்ன வாழ்கிறேனு? நான் படும் அவதியை கடவுளேதான் அறியவேண்டும்" என்ருள் யூலியா.

"நீ ஆறுமாதமாக எனக்கு மனைவியாகயிருக்கிறாய். உன்னுடைய இருதயத்தில் சிறிதளவுகூட என்மீது காத லில்லை. அதற்கு நம்பிக்கையுமில்லை. நம்பிக்கைக்கு வழியு மில்லை. இப்படியிருக்கும்பொழுது நீ ஏன் என்னை மணம் செய்துகொண்டாய்? ...ஏன்? எந்த பைசாசம் உன்னை என் மீது திணித்தது? நீ என்னதான் நினைத்துக்கொண்டிருக் கிறாய்? உனக்கு ஆகவேண்டியதுதானென்ன? என்று மடமட வென்று பேசினான்.

அவன் தன்னை எங்கு கொல்லப்போகின்றானோ என்ற திகிலால் அவள் நடுநடுங்கி உட்கார்ந்திருந்தாள்.

அவன் "மீண்டும் உண்மையிலேயே என்னை விரும்பு கிறாயா? சத்தியமாகச் சொல் – என்னை நீ நேசிக்கிறாயா? இல்லவே இல்லை... பின் என்ன? சொல் பின் என்ன?...ஓ பாழான பணத்திற்கல்லவா? பணம்... ஆம்! பணம்..."

"நான் சத்தியமாகச் சொல்லுகிறேன் அதற்கல்ல" என்று கதறி அழுதாள். அவள் முதல் தடவையாக அழு ததை அப்பொழுதுதான் அவன் பார்த்தான். "நான் கடவுள் மீது ஆணையிட்டுச் சொல்கிறேன். அதற்கல்ல" என்று மீண்டும் சொன்னாள்.

"நான் தங்கள் பணத்தைப் பற்றி நினைத்ததே கிடை யாது, எனக்கு பணமே வேண்டாம். நான் தங்களை மறு தளித்ததை – நான் தவறு செய்ததாக உணர்ந்தேன். நான் தங்கள் வாழ்வையும் என் வாழ்வையும் பாழ்படுத்திக்கொள் வதாக உணர்ந்தேன். நான் எனது தவறுக்காக இப்பொழுது வருந்துகிறேன். நான் சொல்லமுடியாத வேதனையால் வருந்துகிறேன்" என்றாள்.

அவளுக்கு ஆத்திரமும் அழுகையும் அதிகமாகிவிட் டது. அவனே அவளை அதிகமாக வைதுவிட்டதாக உணர்ந் தான். அவனுக்கு இன்னது செய்வதென்று வழிதெரியா மல் அவளுக்கு பக்கத்தில் கம்பளத்தில் உட்கார்ந்து 'சரி சரி' என்று மெதுவாக தாஜா செய்தான்.

“நான் பைத்தியம் பிடித்ததுபோல் உன்னைக் காதலித்த தால் இவ்வாறு உன்னை வைய நேரிட்டது” என்று சொல்லி திடீரென அவள் கைக்கு முத்தமிட்டு அவள் காலைப் பற்றிக் கொண்டான். “ஒரு அணுப்பிரமான காதலிருந்தால்போதும் —வா—என்னோடு படுத்துக்கொள், அல்லது பொய்யேனும் சொல்! பொய் சொல்வது தவறு என்று சொல்லி விடாதே...”

அவள் விம்மி விம்மி அழுதுகொண்டிருந்தாள். அவள் தான்செய்துவிட்ட, தடுக்க முடியாத தவறுக்காகத்தான், தனக்குப் பரிவும் அனுசரணையும் அரவணைப்பும் கோருகிறு ளென்று முடிவுசெய்தான்.

அவள் தலைமுதல் கால்வரை இழுத்துப் போர்த்திக் கொண்டு படுக்கலானாள். அவனும் படுக்கைக்குச் சென்று விட்டான்.

பொழுது விடிந்தது. இருவருக்குமே குழப்பம். யாருக்கு என்ன பேசுவது என்று தெரியவில்லை.

பகல் சாப்பாட்டுக்குமுன் பானுராவ் விடைபெற்றுக் கொள்ள வந்தான். அவளுக்கு தன் தகப்பனார் வீட்டிற்குப் போகவேண்டுமென்ற ஆவல் அளவற்று ஏற்பட்டது. கல் யாண வாழ்க்கைக்குப்பின், இந்த குழப்பமான சம்பவங் களால் அவள் ஏதோ தவறு செய்துவிட்டோம் என்ற உணர்வினுல், முதல் தடவையாக — தடுக்க முடியாத அளவுக்கு தந்தையின் வீட்டிற்குப் போகும் ஆர்வம் அதிகரித்தது. பகல் வேளை சாப்பாட்டின் போது அவள் பானுராவோடு — தந்தையின் வீட்டுக்குப்போய் அங்கு இரண்டு மூன்று வாரங்கள் தங்கியிருந்து வருவ தென்று முடிவு செய்தாள்.

* * *

அவள் பானுராவோடு முதல் வகுப்பு வண்டியில் பிர யாணமானாள்.

"பீட்டர்ஸ்பர்க் எனக்கு திருப்தியே யளிக்கவில்லை. அங்கு நிறைய வாய்ப்புகள் இருக்கின்றன. ஆனால் எதுவும் குறிப்பாக நடந்தேறுவதில்லை." என்று பெருமூச்சோடு பானுராவ் சொன்னான். "ஆம் என் அருமை யூலியா...நான் ஜில்லாபோர்டு, மாகாண சபை, மாகாண நிர்வாக மந்திரி, நீதிபதி, முதலிய பதவிகளை வகித்திருக்கிறேன். நான் என் தேசத்திற்கு நல்ல சேவையும் செய்துவிட்டேன். என்னுடைய நடத்தையில் ஏதேனும் பெண்களிடத்தில் தவறி நடந்திருந்தாலும் நடந்திருப்பேனே தவிர ரஷ்ய சர்க்கார் விஷயத்தில் அணுப்பிரமானங்கூட நான் தவறியது கிடையாது. நான் அதில் மிக நேர்மையானவன். போனால் போகிறது... எதற்காக நீ இவ்வளவு சீக்கிரமாக உன் தந்தையைப் பார்க்கப் போகிறாய்?"

"அதுவா என் கணவரோடு கொஞ்சம் மனத்தாங்கல்"

"ஆமாம்—அவன் ஒரு தினுசு. எல்லா லப்தேவ்களும் அப்படித்தான். உன் கணவர் ரொம்ப சரியான பேர்வழி. அவர் தவறவே மாட்டார். அவருடைய சகோதரன் பியோடர் இருக்கிறானே அவன் அசல் முட்டாள்" என்று சொல்லி மேலும் 'வேறு யாரையேனும் நீ...' என்றான்.

"நீங்கள் சொல்வது எனக்குப் புரியவில்லை" என்றாள்.

அவர்களின் இரவு சாப்பாடு 10 மணிக்கு முடிந்தது. அப்பொழுது வண்டி ஒருசந்திப்பை விட்டுப் புறப்பட்டதும் அவன் அவள் பக்கத்தில் உட்கார்ந்து "நான் உதாரணத்திற்காகச் சொல்கிறேன் நீ நல்ல வெள்ளரிப்பிஞ்சு. புது மணமும், பசுமையும் இன்னமும் வீசுகிறது. காலப்போக்கில் நீ வளர்ந்து பொறுப்போடு நடந்து கொள்வாய்... நம்முடைய பயணம் ஐந்து வருஷங்களுக்கு முன்பு நிகழ்ந்திருந்தால்..." என்றுசொல்லி பெருமூச்சுவிட்டு அவளைப் பக்கத்திலணைத்து உட்கார்ந்தான்.

'உங்களுக்குப் பைத்தியம்போலும்' என்று சொல்லி வெட்கத்தால் நாணினாள்—கைகளும் கால்களும் ஜில்லிட்டு விட்டன.

“பானுராவ் விடுங்கள்” என்ருள்.

“என்னபயம்? எதற்காக பயப்படுகிருய்? உனக்கு ...” என்ருன்.

அவன் அவ்வாறு பேசிக்கொண்டே அவளை அணைத்து கன்னங்களில் முத்தமிட்டான். பின் உதடுகளில்...... முத்தமிட்டான். அவளுக்கேற்பட்டிருந்த கலவரம் நீங்கி அவள் புன்முறுவல் பூத்தாள்... அவன் மீண்டும் அவளை முத்தமிட்டான்.

“துருக்கி பாதுஷா அவனது கட்டிளம் மனைவிகளை வரிசையாகப் பார்த்துவரும்பொழுது அவர்கள் ஒவ்வொருவரையும் முத்தமிட்டு “நான் தங்களுக்கு அளிக்கக்கூடிய அமிர்தம் அவ்வளவே” என்ருன். அதனையேதான் நான் உனக்கும் சொல்ல விரும்புகிறேன் என்ருன்.

இத்தனையும் அவள் முட்டாள்தனமானதென்று உணர்ந்தாலும் அவளுக்கு அது திருப்தியேயளித்தது.

அவள் தன் பெட்டியிலிருந்த மிட்டாய் பொட்டணத்தைப் பிரித்து அவன்மீது மிட்டாய்களை ஒன்று, இரண்டு, மூன்று என்று வீசி விளையாடிஞள். கடைசியாக அவள் அப்படியே மிட்டாய்களைக் கொடுத்தாள்... ‘எனக்கு மிட்டாய்கள் எதற்கு?’ என்ருன். ஆனல் அத்தனை மிட்டாய்களையும் தின்றுவிட்டு—மிட்டாய் பெட்டியையும் எடுத்துத் தன் பெட்டிக்குள் வைத்துக்கொண்டுவிட்டான். ஏனெனில் அதிலுள்ள படம் அவனுக்கு அவ்வளவு ரம்மியமாகயிருந்தது.

அவர்கள் இருவரும் உல்லாச யாத்திரையில் உறங்கி—விடியற்காலம் விழித்தெழுந்தனர். மறுநாள் காலை அவள் தன் சொந்த நகரத்திற்குப் போகும்போது குதிரை வண்டியில் சவாரி செய்தாள். தெருக்களெல்லாம் விரிச்சோவென்று காணப்பட்டது. வீடுகளெல்லாம் சிறுசாகத்தோன்றியது. எங்கும் பனி இருந்தது. வழியில் ஒரு பிரேத ஊர்வலம் வந்தது. அது ஏதோ நல்ல சகுனம் என்று நம்பி உற்சாகமாகப்போஞள்.

நினு யிருந்த வீட்டில் ஏல விளம்பரம் ஒட்டப்பட்டிருந்தது.

அவள் தன் வீடுசேர்ந்து—மேல்மெத்தைக்குச்சென்றதும் லப்தேவோடு அவளுக்கேற்பட்ட முதல் சந்திப்பின் காதல் நிகழ்ச்சிகள் பளிச்சென்று தோன்றின. அதற்குள் அவளின் தந்தை எதிரேவரவும் அவள் அவரை அணைத்து அன்புதெரிவித்தாள். டாக்டருக்கும் அளவற்ற மகிழ்ச்சி ஏற்பட்டது. அவளும் அங்கு நீண்டநாள் ஈஸ்டர்வரைத் தங்கப்போவதாகத் தெரிவித்தாள்.

பகல் சாப்பாட்டுக்குப்பின் டாக்டர் கீழ்க்கண்டவாறு பேசிக்கொண்டிருந்தார்.

"எனக்கோ வயதாகிவிட்டது. எனக்குத்தேவை எதுவுமில்லை. ஆனால் என்னைப்போட்டு தொந்திரவு செய்கிறார்களே அதுதான் கஷ்டமாயிருக்கிறது. நினுவுக்காக நான் கவலைப்பட்டது போதாதென்று அவள் குழந்தைகளை வேறு என்னிடம் பொருப்புகட்டிவிட்டார்களே! பானுராவுக்கு குழந்தைகளைப்பற்றிய கவலையே இல்லை. அவன் இருநூறு ரூபிள் வாங்கிக்கொண்டுபோனான். அந்தப்பணமும் திரும்பி வரவேயில்லை. என்னை மாஸ்கோவுக்கு அழைத்துப்போய் அங்கேயுள்ள பைத்தியக்கார விடுதியில் சேர்த்துவிடு. எனக்கு பைத்தியம் பிடித்துவிடும். எனக்கு உண்மையிலும் சத்தியத்திலும் நம்பிக்கையிருக்கிறது."

டாக்டர், யூலியாவின் கணவனைக் கடிந்துரைத்தார். ஏனெனில் மலிவாக விற்பனைக்குவரும் வீடுகளை அவன் வாங்காமல் அரட்டைசெய்கிறானே என்பதற்காகத்தான்.

யூலியாவுக்கு அவள் வீடும் நகரமும் உற்சாகமாகக் காணப்படவில்லை. அவள் மாலைப் பிரார்த்தனைக்காக நன்கு உடுத்திக்கொண்டு மாதா கோவிலுச்குப்போனாள். அங்கிருந்தோர் அத்தனைபேரும் ஏழை எளியவர்கள். ஆனாலும் அவர்களில் எவருமே இவளின் சிங்கார உடையை கவனிக்கவில்லை. அவளுக்கு மாதாகோவிலே புது மாதிரியாகக்காணப்பட்டது. முன் காலங்களில் அவளுக்குப் பிரார்த்தனை

இன்பமும், ஆறுதலும் அளித்தன. ஆனல் இப்பொழுதோ பிரார்த்தனை எப்பொழுது முடியும் அப்பொழுதே வெளியேறலாமென்ற எண்ணம் வீரிட்டெழுந்தது. அவள் வெளியே வந்தாலோ பிச்சைக்காரர்களுக்கு தர்மம்செய்ய செப்புக்காசுகள் இல்லையே—ரூபிள்களாகவல்லவா இருக்கின்றன என்ற எண்ணம் வேறு ஏற்பட்டது.

அவள் முன்னேரத்திலேயே படுக்கைக்குச் சென்ருள். ஆனல் தூக்கம்வர நீண்டநேரமானது. அவள் காலையில் கண்ட சவ ஊர்வலத்தைக் கனுக்கண்டாள். அந்த சவம் அங்குமிங்குமாடி உயிர்ப்பெற்றெழுந்துவந்து கதவைத் தட்டுவதாக உணர்ந்தாள். அவள் வெலவெலத்து விழித்தெழுந்தாள். அப்பொழுது யாரோ கதவைத் தட்டும் சப்தமும் கேட்டது. வேலைக்காரன் கதவைத்திறக்க கீழே விரைந்து ஓடினன். டாக்டரும் இருமிக்கொண்டு விழித்துக்கொண்டான்.

"அம்மா" என்று வெளியிலிருந்து சப்தம் வந்தது.

"யாரது" என்ருள் யூலியா.

"உங்களுக்குத் தந்தியொன்று வந்திருக்கிறது" என்று பதில் வந்தது.

யூலியா மெழுகுவர்த்தி விளக்கை ஏற்றிக்கொண்டு மெத்தையிலிருந்து கீழே இறங்கினுள். வேலைக்காரனுக்குப் பின் டாக்டரும் ஒரு மெழுகுவர்த்தி வெளிச்சத்தோடு நின்றுகொண்டிருந்தார்.

யூலியா தந்தியை வாங்கி பிரித்துப்பார்த்தாள். அதில் "நாங்கள் உன் ஆரோக்கியத்திற்காக சோமபானம் அருந்துகிரும் — யார்ட்சேவ், கோஸ்டியா" என்று எழுதப்பட்டிருந்தது.

"என்ன முட்டாள்கள்" என்று சொல்லி வாய்விட்டு சிரித்தாள்! அவள் மனம் மகிழ்ச்சியடைந்தது.

அவள் மீண்டும் அறைக்குப்போய் — முகம் கை கால்களைக் கழுவிக்கொண்டு—விடிய விடிய, அவள் உட்கார்ந்து

சாமான்களையெல்லாம் எடுத்து பிரயாணத்திற்காக அடுக்கிக் கொண்டிருந்தாள். பிற்பகலில் மாஸ்கோவுக்குப் பயண மானுள்.

* * *

லப்தேவ்கள் 'பரிசுத்த வார'த்தின்போது கலா நிகழ்ச் சியைக் காணச் சென்றூர்கள். அவர்களோடு கோஸ்டியா உள்பட குடும்பமே சென்றிருந்தது. அவர்கள் அனைவரும் மாஸ்கோ உடையில் அலங்காரமாகக் காணப்பட்டார்கள்.

லப்தேவ் வழக்கமாக வருஷாவருஷம் கலை நிகழ்ச்சிக்கு செல்வதுண்டு. லப்தேவுக்கு சித்திரக்கலையில் தனி ஆர்வ மிருந்தது. அவன் சிற்சில சமயம், ஓய்வு நேரங்களில் சித்திரம் வரைவதுண்டு. லப்தேவுக்கு பழைய அபூர்வப் பொருள்களின்மீதும் விருப்பமிருந்தது. அவன் கடைக் காரன் கேட்கும் எந்த விலை கொடுத்தும் பழைய அபூர்வப் பொருள்களை வாங்குவான். ஆனுல் வாங்கிபபிற்பாடு அவை களெல்லாம் வீட்டில் எங்காவது ஒரு மூலையில் தூங்கும்.

அவன் அதிக விலை கொடுத்து வாங்கும் சாமான்கள் அநேசமாக அழகாக இல்லாமற்போய்விடும். அப்படி யிருந்தும் லப்தேவ் தன்னை — கலாஞானத்தில் சிறந்தவ னென்று கருதிக்கொண்டிருந்தான்.

வீட்டில் பெரிய பெரிய சித்திரங்கள் தொங்கும். அதில் நல்லவைகள் ஒழுங்காக மாட்டப்பட்டிருக்காது.

யூலியா பெருமித ஆர்வத்தோடு கலை நிகழ்ச்சிகளை சவ னித்துவந்தாள். அதைக்கண்ட அவள் கணவன் 'கிஷ்கின் எப்பொழுதும் இதுமாதிரியேதான் ஒரு வனாந்தரத்தைச் சித்தரித்துக் காட்டுகிறுன்...... ஆனுல் பனிக் காக்ஷி இது மாதிரி வானத்திலிருப்பதில்லை...... அந்தப் பையனுடைய இடது கரம் வலது கரத்தைவிட குட்டையாகயிருக்கிறது'' என்று விமர்சனம் செய்தான்.

இறுதியாக அனைவரும் அலுத்து வீட்டுக்குப் புறப்படும் தருவாயில் யூலியா ஒரு நில ஓவியத்தைக்கண்டு அதிலேயே லயித்து நின்றிருந்தாள். அந்தக்காட்சி அந்திப் பொழுதைக் குறிப்பதாகும். அவ் ஓவியத்தில் ஒரு நீரோடையும், ஒரு மரப் பாலமும், பக்கத்திலே வயல்களும், தூரத்திலே ஒரு புகைப் போக்கியும் காணப்பட்டது.

யூலியா அப்படத்தில் கண்ட காட்சியைத் தான் அனுபவித்ததாகவே கருதினாள். "அது எவ்வளவு அபூர்வமாக தீட்டப்பட்டிருக்கிறது" என்று வாய்விட்டுக் கூறினாள். "அலோஷா—பார்த்தீர்களா! எவ்வளது சாந்தி நிலவுகிறது" என்றாள்.

அந்த நில ஓவியம், தன்னை ஏன் முழுதும் கவர்ந்திருக்கிறதென்பதற்கான காரணங்களைச் சொல்லலானாள். ஆனால் அவள் சொன்னதை அவள் கணவனோ அன்றி கோஸ்டியாவோ உணர்ந்தார்களில்லை. அவள் எந்த அளவுக்கு அதனை ரசித்தாளோ அந்த அளவுக்கு இல்லாவிட்டாலும், மற்றவர்கள் அதனை ஒன்றுமே புரிந்துகொள்ளவில்லையே யென்று வேதனைப்பட்டாள். கடைசியாக அவள் வீடுவந்தடைந்ததும், வீட்டில் தொங்கிக்கொண்டிருந்த பெரிய படங்களைப்பார்த்து "இதுமாதிரிப் படங்களை எதற்காக எழுதுகிறார்களோ" என்று பிரலாபித்தாள். அவளுக்கு அங்கிருந்த ஓவியங்களும், கலைப்பொருள்களும் பிடித்தமாக காணப்படாததோடு அவைகளைப்பற்றி அவள் கணவனும், கோஸ்டியாவும் கொண்டிருந்த கருத்துக்கள் மிக மட்டமென்று கருதி வெறுக்கத் தலைப்பட்டாள்.

வாழ்வு நாளுக்குநாள் சாதாரணமாக நிகழ்ந்தேறியது. நாடகக்கலை காலம் தீர்ந்து வேனிற்காலம் வந்தது.

ஒருநாள் லப்தேவ்கள், ஜில்லா நீதிமன்றத்திற்குச் சென்றார்கள் கோஸ்டியா அப்பொழுது சர்க்கார் தரப்பில் ஒருவனுக்காக வாதம்செய்ய நியமிக்கப்பட்டிருந்தான். அவர்கள் நீதிமன்றத்திற்குப் போகும்பொழுதே சாட்சிகள் விசாரணை முடியுந்தருவாயிலிருந்தது. ஒரு சோல்ஜர் திருட்டுக் குற்றத்திற்காகவும், வீட்டைக் கொள்ளையடித்ததற்காகவு

மான இரு குற்றங்களுக்காக விசாரணைக்கு நிறுத்தப்பட்டிருந்தான். அநேக சாட்சியங்களிலிருந்து, குற்றவாளி ஷெ வீட்டின் வேலைக்காரியான லாண்டரி வைத்திருந்தவளின் வீட்டிற்கு வருவதுபோவது உண்டென்று நிரூபணமாகியது. அன்றையதினத்தன்று அவன் அவள் வீட்டிற்கு வந்து அவளைப் பணம் கேட்டிருக்கிறான். ஒரு தடவை வந்து மறு தடவை வந்தபோது அவன் பீரும், ரொட்டியும் கொண்டுவந்து அவளுக்குக் கொடுத்திருக்கிறான். அவர்கள் இருவருமே குடித்து விட்டு விடியவிடிய ஆடிப்பாடி மகிழ்ந்திருக்கிறார்கள். அவர்கள் விடிந்து பார்த்தபொழுதுதான் வீட்டின் கதவுகள் உடைக்கப்பட்டு—மேல் தளத்திலிருந்து மூன்று ஷர்ட்டுகள், ஒரு கோட், இரண்டு துவாலைகள் திருட்டுப் போனதாக தெரியவந்திருக்கிறது. கோஸ்டியா, 'அவள் குற்றவாளியோடு அன்று குடித்து ஆனந்தத்தில்லையா?' என்ற கேள்வியை கேலியாக எல்லா சாட்சிகளையும் கேட்டிருந்தான். அதிலிருந்து வண்ணாத்தியே—காணமற்போன துணிகளைத் திருடியிருக்கிறாளென்று எடுத்துக் காட்டுவதற்காகும். அவன் சாதாரண திருட்டிற்கும், வீடு புகுந்து சூறையாடுவதற்குமான பாகுபாடுகளை எடுத்துக் காட்டி—ஜூரிகளைக் கோபப்பார்வையோடுபார்த்து ஆத்திரம் தீர ஆவேசமாக பேசித்தீர்த்தான். அவன் பேசியது அத்தனையும் அங்கிருந்தவர்களுக்கு தெரிந்ததே. ஆனால் அவன் எதற்காக அந்த தெரிந்த விஷயங்களை அப்படி பேசுகிறானென்று எளிதில் யாருக்குமே புரியாது. அவனுடைய நீண்ட பேச்சிலிருந்து குற்றவாளி விடுதலை செய்யப்பட்டான். குற்றவாளியின் சிநேகிதியே—குடித்து ஆனந்திப்பதற்காக திருடியிருக்கிறாளென்பதுதான் அவனது வாதமாகும். குற்றவாளிக்கு விடுதலை தீர்ப்பு கிடைத்ததுமே யூலியா கோஸ்டியாவைப் பார்த்து தலையை யசைத்தாள். பின் அவனோடு கைகுலுக்கினாள்.

லப்தேவ்கள், சோகோல்னிகி கிரமத்திற்கு மே மாதத்தில் குடிபோனார்கள். யூலியா கர்ப்பமுற்றிருந்தாள்.

* * * *

வருஷம் ஒன்றுக்கு மேலாகியது. சோகோல்ணிகியின் புல் தரையில் யூலியாவும்—யார்ட்சேவும் படுத்திருந்தனர். சிறிதுதொலைவில் கோட்சிவாயும் தலைக்கு கையை வைத்துக் கொண்டு உருண்டுகிடந்தான். நல்லகாற்று வாங்கி உலாவ வந்திருந்த அம்மூவருமே அங்கிருந்து புறப்படும் ஆறுமணி வண்டிக்குக் கிளம்பி வீட்டிற்குச்சென்று தேநீர் அருந்த காத்திருந்தார்கள்.

"தாய்மார்கள் தங்கள் குழந்தைகளிடம் விசேஷ சிறப்பை உணர்கிறார்கள். அதுவே இயற்கையின் நியதி போலும்" என்றாள் யூலியா.

"ஒரு தாய் தன் குழந்தையின் அருகிலேயேயிருந்து அதனுடைய முழியையும் மூக்கையும் பார்த்த வண்ணமே அதிலேயே லயித்து மணிக்கணக்கில் நிற்பாள். அவளுடைய குழந்தையை யாராவது முத்தமிட்டாளோ அந்த சிசு பரம திருப்தியடையும். தாயோ தன் குழந்தையைப்பற்றியே மூச்சிலும் பேச்சிலுமிருப்பாள். இது தாய்மையிடம் உள்ள குறை. நானே இதனை உணர்கிறேன். எனினும், என்னுடைய 'ஒலாகா' ஒரு அலாதி. நான் பாலூட்டும் போது அவள் என்னை எப்படிப் பார்க்கிறாள்! அவள் எவ்வாறு சிரிக்கிறாள்!! அவளுக்கு எட்டுமாதந்தான் வயதாகிறது. அவளுக்கு இருக்கும் அறிவு மூன்று வயது குழந்தைக்குக்கூட இருக்காது என்று உறுதி கூறுகிறேன்".

"சரி சரி நீ உன் கணவனை அதிகமாக நேசிக்கிறாயா? ...உன் குழந்தையையா?" என்றான் யார்ட்சேவ்.

இதைக் கேட்டதுமே யூலியாவின் தோள்கள் சுருங்கின. "எனக்கு தெரியவில்லையே—என்னுடைய கணவன்மீது அவ்வளவு பிரீதி எனக்கு இருந்ததில்லை. 'ஒலாகா'தான் உண்மையிலேயே எனது முதல் காதல். நான் லப்தேவை காதல் திருமணம் செய்துகொள்ளவில்லை. அது தாங்கள் அறியாததா? அந்தக்காலத்தில் நான் தந்தையின் காவலில் முட்டாளாகவும், துன்பப்பட்டவளாகவும்இருந்தேன். நான் எனது வாழ்க்கையையும் என் கணவரது வாழ்க்கையையும்

பாழ்படுத்திவிட்டதாக நினைத்தேன். ஆனால் இப்பொழுதோ வாழ்வுக்கு காதலே அவசியமில்லை. அதெல்லாம் சுத்த பைத்தியக்காரத்தனம்.'' என்றாள்.

''காதல் இல்லாவிட்டால்—உன்னையும் உனது கணவனையும் சேர்த்துவைக்கும் பிணைப்பு சக்தியின் மாண்புதான் எதனால் ஏற்படுகிறது? நீ ஏன் அவனோடேயே சேர்ந்து வாழ்கிறாய்'' என்றான்.

''அது எனக்குத் தெரியவில்லையே... அது பழக்கத்தின் காரணமாக யிருக்கலாம். நான் அவரை மதிக்கிறேன். அவர் நீண்டநேரம் இல்லாதபோது அவர் இல்லையேயென்று உணர்கிறேன். ஆனால் அதெற்கெல்லாம்—காதல்—என்று பொருளல்ல. அவர் கெட்டிக்காரர், நல்லவர். அதுவே நான் சந்தோஷவாழ்வு வாழ்வதற்கு போதியதாகும். அவர் நல்ல மனதுடையவர் – அன்புடையவருங்கூட.

''அலோஷா விவேகி, நல்லவன்,'' என்றான் கோஸ்டியா. மீண்டும் 'அவன் விவேகி, நல்லவன், தூய உள்ளம் படைத்தவன் என்றெல்லாம் நீ நன்கு தெரிந்துகொள்வதற்கு அவனோடு இன்னும் ஒரு மூட்டை உப்பைத் தின்றாக வேண்டும்... அவன் விவேகி நல்லவன் என்பதெல்லாம் எதற்காகும்? நீ கேட்கிற அளவுக்கு அவன் பணம் கொடுப்பான். ஆனால் அவன் நற்குணபாவத்தில் பலஹீனமானவன் துணிந்து செயலாற்றும் திறன் படைததவனல்ல. அலோஷா போன்றவர்கள் சண்டைக்கு லாயக்கற்றவர்கள். ஆம் வேறு எதற்குமே லாயக்கற்றவர்சள்'' என்றான்.

அப்பொழுது டிரையின் வந்து சேர்ந்தது. கடைசி வண்டி காலியாகயிருந்தது. அது அவர்களுக்கு பிடித்தமாயிருந்தது.

''தேநீர் அருந்தும் வேளை'' என்றாள் யூலியா. அவள் வரவர பெருத்து தாய்மை காட்சியோடு வளர்ந்தாள்.

''நாம் பேசுவது எழுதுவதெல்லாம் காதல்தான். அதைத்தவிர நாம் வேறு சிந்திப்பதில்லை. ஆனால் நாம் காதலிக்கிறோமா என்பதுதான் அனுபவத்தில் இல்லை.''

"அது எவ்வளவு பெரும் தவறு" என்றான் யார்ட்சேவ், அவள் பின்னுடியே போகும்பொழுது.

"அதெல்லாம் 'நான்சன்ஸ்' அதுதான் மகிழ்ச்சியை அளிக்கிறது என்பதில்லை" என்றாள் யூலியா.

அவர்களுடைய சிறிய தோட்டத்தில் அவர்கள் தேநீர் அருந்தினர். யூலியாவின் முகத்தில் தெளிவும் மகிழ்ச்சியும் காணப்பட்டதை யார்ட்சேவும் கோட்சிவாயும் கவனித்து உள்ளூர மகிழ்ந்தார்கள். அந்தத் தோட்டம் மனோரம்யமாக இருந்தது. 'பைன்' மரங்கள் அழகுக்கு அழகு செய்வதாகக் காட்சியளித்தன.

தேநீருக்குப்பின் யார்ட்சேவ் பியானோவில் பாடினான். கோட்சிவாயும், யூலியாவும் அதைக்கேட்டு மகிழ்ந்தார்கள்; என்றாலும் யூலியா அடிக்கடி உள்ளேபோய் குழந்தையையும், இரண்டு நாளாக சிறிது சுகவீனமாகவிருந்த விடாவையும் போய் பார்த்துவந்தாள்.

"அருமை நண்பரே, அருமை நண்பரே நீங்களெல்லாம் காதலுக்குப் புறம்பாக ஏன் ஒதுங்குகிறீர்கள்" என்று பாடினான். பின் தலையை சாய்த்துக்கொண்டு "எனக்குமட்டும் இருபத்துநான்கு மணி நேரத்தில் பதினைந்து மணி நேரம் வேலையில்லாமலிருந்தால் என் பொழுதை காதலிலேயே செலவழித்துவிடுவேன்" என்றான்.

பகல் உணவு தாழ்வாரத்தில் பரிமாறப்பட்டது. குளிர் அன்று அதிகமாகக் காணப்பட்டது. மாலைப்பொழுது ஆனதும் அவளுக்கு நடுக்கமேற்பட்டது. அவள் வேலைக்காரர்களோடு தனித்திருக்க விரும்பாததால் அவர்களுக்கு இரவு உணவும் பிராந்தியும் வழங்கினாள்.

"நாம் குழந்தைகளுக்காக ஒரு நாடகம் நடிக்கவேண்டும். நம்மிடையே நடிகர்கள் இருக்கிறார்கள். தியேட்டரும் இருக்கிறது. நடிக்கக் கதைதான் இல்லை. யார்ட்சேவ் நீங்கள் ஓர் சரித்திரக்கதை எழுதுங்கள். தங்களுக்குத்தான் சரித்திரம் பிடிக்குமே" என்றாள் யூலியா.

"சரி. எழுதுகிறேன்."

அவர்கள் பிராந்தி அத்தனையும் குடித்தார்கள். மணியும் இரவு பத்துக்கு மேலாகிவிட்டது. அவர்கள் புறப்பட்டனர்.

அவர்களை வழியனுப்ப வெளிக்கதவுவரைச் சென்ற யூலியா 'என்ன இருட்டு, வழி எப்படித்தெரியும்? குளிர் வேறு' என்று சொல்லி, தான் இறுகப் போர்த்திக்கொண்டு உள் செல்வதற்குள் "என் கணவர் எங்கோ சீட்டாடப் போயிருக்கிறார். போய்வாருங்கள் இரவு வந்தனங்கள்" என்றாள்.

யார்ட்சேவும், கோஸ்டியாவும் ரயில் பாதையைத் தாண்டி குருடர்களைப்போல் இருட்டில் நடந்தார்கள்.

"இருட்டில் ஒன்றும் தெரியவில்லையே—யார்ட்சேவ் ஆகாய நட்சத்திரங்களைப் பார்த்தாயா? அவைகள் மூன்று பென்னி நாணயங்கள் மாதிரி காணப்படுகின்றன" என்றான் கோஸ்டியா. 'ஆமாம்' என்றான் யார்ட்சேவ் தொலைவி லிருந்து.

"ஏய்–இருக்கிறாயா! ஒன்றும் தெரியவில்லையே" என்று கும்மாளமிட்டான் கோஸ்டியா. யார்ட்சேவ், சீட்டி அடித் துக்கொண்டு அவன் நண்பனைப் பிடித்துக்கொண்டான்.

கடைசியாக அவர்கள் சரியான பாதையை அடைந்து மௌனமாகச்சென்றார்கள். ஒருக்கால் அம்மௌனத்திற்குக் காரணம் அங்கு ரஷ்ய அரசர்கள், நிலப்பிரபுக்கள் ஆகியவர்கள் சுடுகாடாதலால் அந்த ஆவிகளுக்கு பயந்துபோலும். அக் கருத்தை கோஸ்டியாவுக்கு யார்ட்சேவ் சொல்லநினைத்தான். ஆனால் அது பைத்தியக்காரத்தனமென நினைத்து சும்மா யிருந்துவிட்டான்.

அவர்கள் இருவரும் நகரத்தின் எல்லையையடைந்த போது அடிவானம் வெளுத்துக் காணப்பட்டது. இப் பொழுதும் அவர்கள் மௌனமாகவே நகரத்தின் குடிசை கள்—விறகுக் கடைகள்—சாப்பாட்டு விடுதிகள் வழியாக நடந்துகொண்டிருந்தார்கள்... கடைசியாக ஒரு பெரிய தெருவை வந்தடைந்தபோது ஒரு ஆத்மாவோ — ஒரு

வெளிச்சமோ காணப்படவில்லை... அவர்கள் செங்குளம் வந்தபோது பொழுது விடிந்துவிட்டது.

அலெக்ஸிவிஸ்கி மடாலயத்தைக் கண்டதும் "மாஸ்கோ நகரம்—இன்னும் அதிக கஷ்டத்திற்காளாக வேண்டும்" என்றான் யார்ட்சேவ். "அது எனக்கு ஏன் என்று தெரியவில்லை. நான் என்னமோ மாஸ்கோவை விரும்புகிறேன்".

யார்ட்சேவும், கோஸ்டியாவும் மாஸ்கோவிலேயே பிறந்தவர்கள். அது சிறந்த நகரம் என்பதும் அவர்கள் கருத்து. அவர்களுக்கு கிரீமியாவோ, காகஸஸோ அவ்வளவு ரம்மியமாகவும், சுகமாகவும், இன்பமாகவும் காணப்பட்டதில்லை. மாஸ்கோ நகரத்தில் பகல் பொழுது சீக்கிரமே இருட்டிவிட்டபோதிலும்; பனியும், குளிரும் அவர்களைக்கவ்வி அவர்களுக்கே எஙகேபோவது எப்படிப்போவது என்றநிலை ஏற்பட்டிருந்தபோதிலும்கூட — மாஸ்கோ அவர்களுக்கு சுகமாகவே காணப்பட்டது.

அவர்கள் ஸ்டேஷனை வந்தடைந்ததும் ஒரு வாடகைக் காரை அமர்த்திக்கொண்டார்கள்.

"ஒரு சரித்திர நாடகம் எழுதப்படவேண்டியது முக்கியம். ஆனால் லிப்னுவ், கோடுனுவ்களைப் பற்றியல்ல. ஆனால் யாரோஸ்லாவ், மானுமாக் ஆகியவர்கள் காலத்தைப்பற்றி எழுதப்படவேண்டும். 'பீம'னின் 'தன் வரலாற்றை'த் தவிர எல்லா சரித்திர நாடகங்களையும் நான் வெறுக்கிறேன். ரஷ்ய சரித்திரத்தைப் படிப்பவர்கள்–ரஷ்யர்கள் ஒவ்வொருவருமே ருசிகர வரலாறு பெற்றவர்கள் என்று உணரக்கூடும். ஆனால் தியேட்டரில் நாம் நாடகத்தை நேரில் பார்க்க நேரிட்டுவிட்டாலோ ரஷ்ய வாழ்வு படுமோசமாகவும், கேவலமாகவும், துச்சமாகவும்தான் காட்சி தருகிறது" என்றான் யார்ட்சேவ்.

நண்பர்கள் இருவரும் 'டிமிட்ரோவ்கா' வந்து சேர்ந்ததும் பிரிந்தனர். யார்ட்சேவ் நிகிட்ஸ்கி தெருவின் தன் இல்லத்திற்குச் சென்றான். காரில் போகும் பொழுதே அரைத்தூக்கத்தில், பக்கத்துக்கிராமம் தீப்பிடித்து எறிவது

போலவும், ஒரு வயோதிகன் ஒரு வாலிபப் பெண்ணை—தீயி லிருந்து தப்புவித்து ஒரு குதிரையில் ஏற்றிச் செல்வதாக வும் கனுக்கண்டு விழித்தான்.

அவன் வீட்டின் மேல் மாடிக்குச்சென்றும் கனவு கலைய வில்லை. அப்பொழுது காலை நேரம். ஆனால் இரண்டு மெழுகு வர்த்திகள் எரிந்துகொண்டிருந்தன. போலினு சோபாவில கருப்பு உடையோடு கையில் பத்திரிகையை வைத்தவளாய் தூங்கிக்கொண்டிருந்தாள். அவள் யார்ட்சேவின் வருகைக் காக விடிய விடிய கண்விழித்து அயர்ந்து தூங்குபவளாகக் காணப்பட்டாள்.

"அவள் மிக களைத்து அலுத்துப்போயிருக்கிறுள்" என்று அவன் எண்ணினுன்.

அவளுடைய கையிலிருந்த பத்திரிகையை மிக ஜாக்கிர தையாக எடுத்துவிட்டு, அவளை நன்ருகப்போர்த்தி, மெழுகு வர்த்திகளை அணைத்துவிட்டு தன் படுக்கையறைக்குச்சென்று விட்டான். அவன் படுக்கையில் படுத்ததுமே அவனுடைய எண்ணம் அவன் கண்ட கனு காக்ஷியையும்—அவன் எழுத வேண்டிய சரித்திர நாடகத்தையுமேதான் முன் நிறுத்தி யது...

இரண்டு நாட்களுக்குப்பிறகு, லிடாவுக்கு ஏற்பட்ட வயிற்றுப்போக்கால் யூலியாவுக்கும், அவள் குழந்தைக்கும் வயிற்றுப்போக்கு ஏற்பட்டிருப்பதாக லப்தேவ் வந்து தெரி வித்தான். அதற்கு ஐந்தாம் நாள் லிடாவும், யூலியாவும் குணமாகிவிட்டார்களென்றும், ஆனல் பச்சிளங்குழந்தை இறந்துவிட்டதென்றும் ஒரு செய்தி வந்ததோடு, லப்தேவ் கள் சோகோவ்னிக் இல்லத்தைவிட்டு மாஸ்கோவுக்குப் போய்விட்டார்களென்றும் தகவல் வந்துசேர்ந்தது.

*   *   *

லப்தேவுக்கு வீட்டில்தங்குவதென்பதுவிருப்பமில்லாத தாகிவிட்டது. அவனுடைய மனைவி, பெண் குழந்தைகளைக் கவனிக்கப்போகிறேனென்று சொல்லிக்கொண்டு— இறந்து போன தன் குழந்தையை நினைத்து அழ கோஸ்டியாவின்

அறைக்குச் சென்றுவிடுவதுண்டு. ஒன்பதாம் நாள் சென்றது. இருபதாம் நாள், நாற்பதாம் நாள்...சென்றது. அவன் இறந்த குழந்தைக்காக அவளுக்கு ஆறுதல் சொல்வது வேலையாகிவிட்டது. அதனால் அவன் வியாபார ஸ்தலத்திற்குப்போவதை மறந்தான். அவன் வெளிநாடுகளுக்குச் சென்று அகதிகள் பிரச்னையைக் கவனிக்கலாமென்று உற்சாகத்தோடு எண்ணினான்.

அப்பொழுது இலையுதிர்காலம். யூலியா அழுவதற்காக வெளியே சென்றுவிட்டாள். லப்தேவ் தான் எங்குபோவதென்று தெரியாமல் சோபாவில் சோம்பி சாய்ந்து கிடந்தான். அப்போது போலினா வந்திருப்பதாக பீட்டர் தெரிவித்தான். லப்தேவிற்கு மகிழ்ச்சி ஏற்பட்டது. எதிர்பாராது வந்த தனது பழைய சிநேகிதியைக் காண விரைந்தான். அவன் கடைசி முறையாக அவளை எவ்வாறு கண்டானோ, அந்த நிலையிலேயேதான், இன்றும், அன்றுகண்ட திருமேனியாக காட்சியளித்தாள்.

தன் இரு கரங்களையும் நீட்டியவாறே "போலினா! 'என்ன சமாசாரம் வா! உள்ளே வா!! நான் மிக மகிழ்ச்சியடைகிறேன்" என்றான்.

போலினா அவனுக்கு வந்தனமளித்து, ஆனால் நீட்டிய அவன் கைகளை லட்சியம் செய்யாது, அவளுடைய தொப்பியையும், கோட்டையும் சழட்டாமலேயே அவனோடே அவனுடைய படிப்பறைக்குச் சென்று உட்கார்ந்தாள். "நான் உன்னோடு ஒருநிமிஷமே பேசவந்தேன். வேறு அக்கப்போர் பேச எனக்கு நேரமில்லை. என்னைப் பார்ப்பதில் தங்களுக்கு மகிழ்ச்சியோ, மகிழ்ச்சியில்லையோ. அதில் எனக்கு அக்கரை கிடையாது. தங்களைப்போன்ற 'லக்ஷ்மிபுத்திரர்'களுடைய புன்னகையை நான் பொருட்படுத்துவதில்லை நான் இங்கு வந்ததற்குக் காரணம், நான் காலையிலிருந்து இதுவரை ஐந்து இடங்களுக்குப் போனேன். அவர்களெல்லாம் கையை விரித்துவிட்டார்கள் பாவம். ஐந்து மாணவர்கள், கலாசாலைக்குப் பணம் கட்டாததற்காக, கல்லூரியிலிருந்து வெளி

யேற்றப்படுவார்கள். அவர்கள் அனைவரும் மண்டூகங்கள், நிர்மூடர்கள்; ஆனால் பாவம் அவர்கள் சொல்லொணு ஏழைகள். அவர்களுக்கு உதவுவது உன்னைப்போன்ற பணம் படைத்தவர்களின் கடமையாகும். நீங்களே நேரே சர்வ கலாசாலைக்குச் செல்லுங்கள். உங்கள் கையாலேயே அந்தப் பணங்களைக் கட்டிவிடுங்கள்'' என்றாள்.

"மிக்க மகிழ்ச்சியோடு செய்கிறேன் போலினு."

"இந்தாருங்கள்—பெயர்கள்'' என்று சொல்லி ஒரு காகிதத்தைக் கொடுத்தாள். "நீங்கள் உடனே சொல்லுங்கள். போய்வந்தபிறகு உங்கள் குடும்ப இன்பங்களை அனுபவிக்கலாம்'' என்றாள்.

அப்பொழுது அடுப்பங்கரைப் பக்கமாக ஒரு சலசலப்புச் சத்தம் வெளிவந்தது. ஒருக்கால் பூனைப் பிராண்டிக் கொண்டிருக்கலாம். போலினு சத்தம் வந்த பக்கமாய்த் திரும்பிப்பார்த்து முகச்சிவந்தவளாய் குதித்தெழுந்து "தங்கள் அருமைப் பத்தினி ஒட்டுக்கேட்கிறாள் என்ன அக்கிரமம்'' என்றாள்.

யூலியாவை இவ்வாறு இழிவாகப்பேசியது லப்தேவுக்கு கோபமூட்டியது.

"அவள் இங்கில்லை. அவள் வெளியில் சென்றிருக்கிறாள்'' என்று சொல்லி "அவளைப்பற்றி இனிமேல் இது மாதிரிப் பேசாதே. அவள் குழந்தையை இழந்து பரிதவிக்கிறாள். அவள் வெந்துயரில் மாள்கிறாள்'' என்றான்.

"நீங்கள்தான் அவளுக்கு ஆறுதல் சொல்லவேண்டும். அவள் இன்னும் பத்துக் குழந்தைகளைப் பெற்றெடுத்து விடுவாள். குழந்தைகளைப் பொல பொலவென பெற்றுத் தள்ளுவதற்கு எந்த விவேகமும் வேண்டியதில்லை'' என்றாள் போலினு.

லப்தேவ் தன் திருமணத்திற்குமுன் இதுமாதிரிக் கருத்துகளைக் பன்முறை பலவகையில் கேட்டிருக்கிறான். அவனுக்கு பழைய பிரம்மச்சர்ய வாழ்வு ஞாபகத்திற்கு வந்தது.

பின் அவர்கள் இருவருமே சர்வகலாசாலேக்குப்போய் பணம் கட்டிய பிற்பாடு "நீ இப்பொழுது எங்கு செல்லப் போகிருய்?" என்ருன்.

"யார்ட்சேவின் இல்லத்திற்கு."

"நானும் உன்னேடு வரட்டுமா?"

"அவனுடைய எழுதும் வேலையைக் கெடுப்பதற் காகவா?"

"இல்லே. அப்படி ஒன்றுமில்லே" என்று கெஞ்சுதலாக அவளே உற்று நோக்கினன்.

அவள் துக்கத்திலாழ்ந்தவளேப்போல் கருப்பு உடை அணிந்திருந்தாள். அவள் முகம் சோகை கொண்டவள்போல் வெளுத்து, மூக்கு நீண்டு காணப்பட்டது லப்தேவுக்கு அவ ளோடு உடன்செல்ல விருப்பமேற்பட்டு அவளேப் பின் தொடர்ந்தான். அவள் அழகியல்ல. அமைதியுடையவளு மல்ல. நன்ருக உடுத்திக்கொள்ளவும் தெரியாது. தலேயையும் ஒழுங்காக வாரிக்கொள்ளவும் மாட்டாள். அவளிடம் எல் லாமே ஒழுங்கற்றிருந்தது. அப்படியிருந்தும் அவளிடம் தனக்கென ஒரு கவர்ச்சியும், அவளுக்கென ஒரு அழுத் தமும் ஏற்பட்டிருக்கிறதென்று சிந்தித்துக்கொண்டே சென் ருன்.

அவர்கள் யார்ட்சேவ் வீட்டின் பின்புரமாக வந்தார்கள். வீட்டின் கிழ சமையல்காரி அவர்கள் இருவரையும் கண்டு ஆச்சர்யப்பட்டவளாய் புன்னகைதவழ "உள்ளே போங்கள்" என்ருள்.

யார்ட்சேவ் அப்பொழுது வீட்டில் இல்லே. போலினு, தன்னே தொந்தரவு செய்யக்கூடாதென்று சொல்லிவிட்டு— பியானுவாசிப்பதில் ஈடுபட்டாள். ஆனல் லப்தேவ் 'ஐரோப் பாவின் தூதன்' என்ற புத்தகத்தைப் படித்துக்கொண்டிருந் தான் அவள் இரண்டுமணிநேர பியானே வாசிப்புக்குப்பின் — அடுப்பங்கரைக்குச்சென்று சாப்பிட்டுவிட்டு தன் வேலே களேக் கவனிக்கச் சென்றுவிட்டாள். லப்தேவ் புத்தகத்தைப் புரட்டிப் புரட்டிப் பார்த்து அலுத்து – பகல் சாப்பாட்டிற்கு நேரமாகிவிட்டதேயென்று உட்கார்ந்திருந்தான்.

அப்பொழுது "ஹலோ ஹலோ" வென்ற குதூகலத்தோடு புதிய அழகிய கோட்டையணிந்த யார்ட்சேவ் பிரவேசித்தான்.

நண்பர்கள் இருவரும் பகல்உணவு அருந்தினர். லப்தேவ் சோபாவில் அமர்ந்தான். யார்ட்சேவ் அவனருகில் உட்கார்ந்து குடித்துத் தீர்த்தான். அன்று அந்திப்பொழுது வந்தது.

"எனக்கு வயதாகிக்கொண்டிருக்கிறது. என் சகோதரி நினு இறந்தபிறகு எனக்கு சாவைப்பற்றிய எண்ணம் அதிகமேற்பட்டுவிட்டது" என்ருன் லப்தேவ்.

அவர்கள் சாவைப்பற்றியும், ஆத்மாவைப்பற்றியும், மோக்ஷ லோகத்தைப்பற்றியும் பேசினுர்கள்.

"யாரும் சாவை விரும்புவதில்லை" என்ருன் யார்ட்சேவ் மெதுவாக.

"எந்த தத்துவஞானமும் சாவை ஒத்துக்கொள்ள முடியாது. அது சூன்யமானது. மனிதன் வாழத்தான் விரும்புகிருன்."

"வாழ நீங்கள் விரும்பத்தானே செய்கிறீர்கள் யார்ட்சேவ்."

"ஆம். நான் வாழவே விரும்புகிறேன்."

"வாழ்வதென்பது எனக்குப் புரியாத விஷயமாக இருக்கிறது. எப்பொழுது பார்த்தாலும் என்னிடம் கலக்கமும், குழப்பமுமே மிஞ்சிநிற்கிறது தன்னம்பிக்கையில்லாத கோழைத்தனமும், பயந்தாங்கொள்ளித்தனமும் என்னிடம் விரைவி நிற்கிறது. என்னை வாழத் தகுதியாக்கிக்கொள்ள முடியவில்லை. சிலர் ஏதோ பேசி மோசநாசம் செய்து சந்தோஷ வாழ்வு வாழ்வதாகத் தெரிகிறது. நான் ஒரு அடிமையின் பேரன். யார்ட்சேவ்! நாம் வாழ முற்படுவதற்குள் நாம் அழிந்துபோய்விடுவோம்."

'அப்படியல்ல' என்று யார்ட்சேவ் சொல்லி பெருமூச்சு விட்டு "ரஷ்ய வாழ்வு எவ்வாறு பலதிறப்பட்டது என்

பதற்கு நீ சொல்வது ஒரு அத்தாட்சியாகும். ரஷ்ய வாழ்வே ஒரு மகத்தானது. அந்த வீர வெற்றிவாழ்வைநோக்கி நாம் முனைந்து நிற்கிறோம். நான் அதில் பங்குகொள்ள விரும்புகிறேன். ஒரு புது சமுதாயம் எழப்போகிறது. நீங்கள் அதை நம்புகிறீர்களோ இல்லையோ — குழந்தைகளுக்கு, குறிப்பாக பெண்களுக்குக் கற்றுக்கொடுப்பதென்பது எனக்கு மகிழ்ச்சியையே அளிக்கிறது. அவர்கள் நல்ல குழந்தைகள்.''

யார்ட்சேவ் பியோனுவில் பாடினுன். "நான் ரசாயனவாதி நான் ரசாயன முறையிலேயே சிந்திக்கிறேன். நான் ரசாயனவாதியாக சாகப்போகிறேன். எனக்கு ஆசை அதிகமிருக்கிறது. நான் திருப்தியில்லாமல் சாக விரும்பவில்லை. ரசாயன வாதமட்டும் எனக்குப் போதாது. ரஷ்ய சரித்திரம், கலைஞானம், ஆசிரியப் பயிற்சி, சங்கீதம்... ஆகியவை பிடிக்கிறது. உன்னுடைய மனைவி என்னை ஒரு சரித்திர நாடகம் எழுதச்சொன்னுள். நான் அதை எழுத விரும்புகிறேன். மூன்று நாள், இரவு பகலாக உட்கார்ந்து எழுதவேண்டுமென்று நினைக்கிறேன். என்னுடைய மூளையே சிந்தித்து சிந்தித்து ஒரே குழப்பமாகயிருக்கிறது. நான் ஏதோ பிரமாதமாக பெரியவனுகவோ, விசேஷ திறனுடையவனுகவோ ஆக வேண்டுமென விரும்பவில்லை. நான் வாழத்தான் விருப்புகிறேன். அனைவரின் மத்தியில் இருக்கத் தான் நினைக்கிறேன்... வாழ்வுசிறிது, வாழ்கலை பெரிது என் நண்பனே! அனைத்தையும் முடிந்தவரை நாம் பயன்படுத்திக் கொள்ள வேண்டும்'' என்றுன் யார்ட்சேவ்.

இந்த சம்பாஷணை நடுநிசி வரை ஓயவில்லை. யார்ட்சேவை தினந்தோறும் சந்திப்பதென்று லப்தேவ் முடிவு செய்து, தினம் மாலைப்பொழுதில் வருவான். யார்ட்சேவ் வரும்வரையில் அலுப்பு சலிப்பின்றி உட்கார்ந்திருப்பான்; இரவு உணவை அங்கேயே அருந்துவான்; ஏதோ சம்பாஷணையும் நிகழும்; நடுநிசியில் பிரிந்துசெல்வான்; ஆனல் இந்நிகழ்ச்சியும் நெடுநாள் நீடிக்கவில்லை.

ஒருநாள் மாலை லப்தேவ் வந்தபொழுது போலினு பியோனு வாசித்துக்கொண்டிருந்தாள். வேறு யாரும் அங்கு இல்லை. அவள் அவனை ஒரு வெறுப்புப் பார்வைப் பார்த்து "எவ்வளவு நாளாக நீங்கள் இப்படியே..." என்ருள்.

அவன் புரிந்துகொள்ளாமலேயே 'என்ன' என்ற விடையைப்போட்டான்.

"நீங்கள் தினந்தோறும் இங்குவந்து யார்ட்சேவின் பிழைப்பில் மண்ணை அள்ளிப் போடுகிறீர்களே! யார்ட்சேவ் என்ன வியாபாரியா? அவர் ஒரு விஞ்ஞானி; அவருடைய ஒவ்வொரு நிமிஷமும் விலையுயர்ந்தது; உங்களுக்குக் கொஞ்சமாவது மற்றவர்களுடைய சௌகர்யாசௌகர்யம் தெரிந்து நடந்துகொள்ளும் இயல்பு வேண்டாமா?" என்ருள்.

"நான் அவனுக்கு இடையூருக யிருப்பதாக நீ நினைத்தால் நான் வருவதை வேண்டுமானுல் நிறுத்திக்கொள்கிறேன்" என்ருன் சிறிது தடுமாற்றமடைந்தவனுய்.

அவள் சொன்ன ஆணவம்; அவள் பார்த்த பார்வை —அவனை அப்படியே மலைக்கச்செய்துவிட்டது. அவளுக்கு அவனிடத்தில் அப்பொழுது எந்த அனுதாப உணர்ச்சியும் கிடையாது. அவன் அவளின் பழைய காதலன். அவளே இப்பொழுது அவனை அந்த இடத்திலிருந்து—தயவு தாட்சண்யமின்றி அப்புறப்படுத்தவேண்டுமென்று கருதுகிருள்.

பாவம், அவன் சோர்ந்த முகத்தோடு, அவளோடு கையையும் குலுக்காமல், படிக்கட்டுகளைவிட்டு இறங்கினுன். இறங்கி வரும்பொழுது, அவள் ஒருக்கால் தன்னை கூப்பிட்டு அழைத்து, வருத்தம் தெரிவிக்கமாட்டாளா என்ற எண்ணமும் தோன்ருமலில்லை. அவன் கடைசிப்படி இறங்கும் பொழுது, அவன் அவளுக்கு ஒரு அன்னியனுக ஆகிவிட்டது வேதனையையே அளித்தது.

இதற்கு மூன்ரும் நாள் லப்தேவோடு பொழுதுபோக்க யார்ட்சேவ் வந்து சேர்ந்தான். அவன் சிரித்துக்கொண்டே

"நான் ஒரு செய்தி சொல்லட்டுமா? போலினு என்னுடைய வீட்டிலேயே தங்க வந்துவிட்டாள்" என்று சொல்லி எப்படியோ சிறிது கலவரமடைந்தவனாய் "எங்களுக்குள் காதல் கீதல் ஒன்றுமில்லை. ஆனால்... அவள் ஏதோ நிம்மதியாக வாழ தங்க இடம், அதிலும் உடல்நிலை சரியாயில்லாத போது கொஞ்சம் ஆதரவு... அவள் என்னோடு தங்கியிருந்தால், தான் முழுதும் குணமாகிவிடுவாளென்பது அவள் கருத்து. அதோடுகூட அவளுடைய செல்வாக்கால் நான் ஒரு பெரிய விஞ்ஞானியாகிவிட முடியுமென்பதும் அவள் கற்பனை. அவள் எவ்விதமாவது கற்பனை செய்துகொள்ளட்டும். தெற்கே ஒரு பழமொழி வழங்கப்படுகிறது. 'கற்பனை ஒரு முட்டாளை சீமானுக்குகிறது என்று' எனச் சொல்லி சிரித்தான்.

இதற்கு லப்தேவ் ஒன்றுமே பதில் பேசவில்லை. யார்ட்சேவ் இங்குமங்கும் நடமாடிக் கொண்டிருந்தான். அவன் வழக்கமாக பார்த்துக்கொண்டிருந்த படங்களைப் பார்த்து பெருமூச்சு விட்டவனாய் "நண்பா! நான் தங்களைவிட மூன்றாண்டுகள் மூத்தவன். உண்மையான காதல் என்பது என்னால் நினைத்துப்பார்க்க முடியாத விஷயம். ஏதோ போலினு போன்றவர்கள் எனக்கு ஒரு வரப்பிரசாதம். எனினும் எனக்கு ஏதோ குறை தோன்றிக்கொண்டேயிருக்கிறது. மொத்தத்தில் மனிதன் உள்ளதைக் கொண்டு திருப்தியடைவதில்லை" என்றான்.

அவன் இதற்குப்பின் ஏதும் நிகழாததுபோல நிம்மதியாக பாடிக்கொண்டிருந்தான். ஆனால் லப்தேவ் கண்ணை மூடியவனாய், போலினு ஏன் யார்ட்சேவோடு வசிக்கப் போனாள் என்று சிந்திக்கத் தொடங்கினான். அவளோடு தனக்குத்தான் நிரந்தரமான காதல் இல்லையே, அவளும் துணிந்து யார்ட்சேவோடு வசிக்கப்போய்விட்டாளே என யோசித்தவனாய் – தன்னுடைய காதல் உள்ளம் யூலியாவோடும் சரியாகயில்லையே என்று நினைத்து வருந்தினான்.

* * *

லப்தேவ் ஒரு ஆடும் நாற்காலியில் உட்கார்ந்து புத்தகத்தைப் பிரித்துவைத்துக் கொண்டு ஆடிக்கொண்டிருந்தான். யூலியாவும் படிப்பு அறையில் உட்கார்ந்து படித்துக் கொண்டிருந்தாள். அவர்கள் இருவரும் பேசுவதற்கு விஷயமே இல்லாதவர்களைப்போல் உட்கார்ந்து – பகல் முழுதும் மௌனம் சாதித்தார்கள். ஆனால் லப்தேவ் புத்தகத்தை கையில் வைத்தவாறே "ஒருவன் கண்டு காதலித்து திருமணம் செய்துகொள்கிறானா? அல்லது காணாமலே காதலிக்காமலே திருமணம் செய்துகொள்கிறானா? எப்படியானாலும் எல்லோருமே இணைந்து வாழ்கிறார்களா?" என்று சிந்தித்தான்.

ஒரு காலத்தில் அவன் காதலால் பொறுமை உள்ளம் குடிகொண்டவனாக இருந்தான். அதனால் அவன் நிம்மதியில்லாமல் வேதனையோடு காலங்கழித்தான். அந்தக்காலமெல்லாம் இப்பொழுது மலையேறிவிட்டதென உணர்ந்தான். அவன் எவ்வாறோ—வரும் கோடையில் சீமைக்குச் செல்வதென நிம்மதியாக முடிவு செய்துகொண்டான்.

யூலியா இறந்த குழந்தையைப் பற்றியே அடிக்கடி ஒப்பாரி வைத்துக்கொண்டிருந்தாள். கோடை காலத்தில் நாடகத்திற்கோ, நடனத்திற்கோ செல்லவில்லை. கடைத் தெருவுக்கு செல்வதையோ சிநேகிதர்களைப் பார்ப்பதையோ விரும்பவில்லை. அவள் சதா சர்வகாலமும், அவளுடைய படிப்பு அறையிலோ அன்றி அவள் கணவன் அறையிலோ இருக்க விரும்பினாள். அவள் தனக்காக, தன் தகப்பனார் வீட்டில் இருந்ததைப்போல், இப்போதும் 'செம்பு'க் காசும் செலவு செய்துகொள்வதில்லை.

கோடை காலம் இன்பமற்று கழிந்தது. சீட்டாட்டம் மாஸ்கோ முழுதுமே பிரபல்யமானது. வேறு, சங்கீதம், கலை, கல்வி முதலிய நிகழ்ச்சிகள் சுவாரஸ்யமற்றதாகும். மாஸ்கோவில் கலை நிபுணர்கள் ஒரு சிலரே யாதலால் அவர்களைக் கொண்டே ஓயாது சங்கீதமும் நாடகமும் நடத்துவதென்பது பொதுமக்களுக்கு மிகுதியும் ரசிப்பற்ற தன்மையையும் அலுப்பையும் அளித்தது.

லப்தேவ்களுக்கு எப்படியோ ஒவ்வொரு நாளும் பொழுது போய்க்கொண்டுதான் இருந்தது. கிழ லப்தேவ் கண் தெரியாதவனுனன். பியோடர் ஏதோ காரணம் சொல் லிக்கொண்டு பண்டசாலைக்கு போவதைநிறுத்தி வீட்டிலேயே உட்கார்ந்து ஏதோ எழுதிக்கொண்டிருந்தான். பானுராவ் உத்தியோக மாற்றுதலின் காரணமாக சிவில் அங்கத்தினன் பதவியில் டிரெஸ்டன் போய்ச்சேர்ந்தான். ஆனால் அவன் வாரம் தவருமல் பணம் கேட்பதற்காக லப்தேவ்களிடம் வருவான். கிஷ் தன் படிப்பை முடித்து — லப்தேவ் தனக்கு வேலை வாங்கிக் கொடுப்பான் என்று நம்பிக்கொண்டு ' ஊர் வம்பு ' அளந்து கொண்டிருந்தான். இதுமாதிரி நிலையினுல் தினசரி வாழ்வு ரம்மியமற்றிருந்தது.

பியோடர் யாரோ வந்திருப்பதாக லப்தேவின் படிப்பு அறைக்குச் சென்று தெரிவித்தான். அவனுக்குக் கிடைத்த ' விசிட்டிங் கார்டி'ல் ஜோசப்பினு இமேசா போனு மிலான் என்று குறிப்பிட்டிருந்தது.

லப்தேவ் எழுந்து வரவேற்கச் சென்றுன். ஒரு கால் மாத்துப் போயிருந்ததால் உந்தி உந்தி நடந்தான். கதவுப் பக்கத்தில் கருப்பு உடையில் நின்றுகொண்டிருந்த ஒற்றை நாடியானவள், மார்போடு கையைக் கட்டியவளாய் "என் குழந்தையைக் காப்பாற்றுங்கள். புண்யம் உண்டு லப்தேவ்" என்றுள்.

அவளுடைய வளையல்கள், பவுடர் முகம் அவளை பானு ராவின் இள மனைவி என்று ஞாபக மூட்டியதோடு — அவ ளோடு தான் திருமணத்திற்குமுன் விருந்துண்ட நினைவும் அவனுக்கு வராமல் போகவில்லை.

அவள் மீண்டும் பரிதாபத்தோடு "என் குழந்தையைக் காப்பாற்றுங்கள்" என்றுள். அவள் முகத்தில் பரிவு ஏற்பட் டது. அதோடு "உங்களால் தான் காப்பாற்ற முடியும். என்னுடைய கையிலிருந்த மிச்ச மீதமிருந்த காசுகளையெல் லாம் செலவு செய்துகெண்டு தங்களைப் பார்க்க மாஸ்கோ வந்துவிட்டேன். என்னுடைய குழந்தைகள் பட்டினியால் வாடுகின்றன" என்றுள்.

அவள் நின்ற நிலையிலேயே அவன் கால் விழுந்துவிடுபவளைப் போலிருந்தாள். அவன் கலவரமடைந்தவனாய் அவளை அப்படியே பற்றிக்கொண்டான்.

"உட்காரு — உட்காரு" என்று சொல்லி உட்காரவைத்தான்.

"ரொட்டி வாங்கக் காசு கிடைப்பது. அவர் வேலை மாற்றுதலின் காரணமாக வேறோர் ஊருக்குப் போகப்போகிறார். அங்கு என்னையோ, என் குழந்தைகளையோ கூட்டிக்கொண்டு போகமாட்டாராம். அவர், தாங்கள் அன்போடு அனுப்பும் பணங்களையெல்லாம் தனக்கே செலவழித்துக் கொள்கிறார். நாங்கள் என்ன செய்வோம் என்ற கவலையே அவருக்குக் கிடையாது. என் குழந்தைகளுடைய நிலை கண்றாவியாக இருக்கிறது" என்றாள்.

"கவலைப்படாதே. நான் இனி உன்னிடமே பணம் வந்துசேர ஏற்பாடு செய்கிறேன்" என்றான்.

அவள் தன் சோகத்தைத் தவிர்த்து நிம்மதியானாள். "லப்தேவ் — நீங்கள் கருணை வள்ளல் நீங்கள்தான் எங்கள் குடும்ப ரக்ஷகர். நீங்களே என் கணவரிடம் சொல்லி என்னைக் கைவிட்டுவிடாமல் காப்பாற்றுங்கள். நான் அவரையே தெய்வம் என்று கருதுகிறேன். அவரே எனது வாழ்க்கைக்கு உயிர்" என்றாள்.

லப்தேவ் அவளிடம் நூறு ரூபிளைக்கொடுத்து, தான் அவள் கணவனிடம் பேசி ஆவன செய்வதாக வாக்களித்தான். அவன், அவள் எங்கு அப்படியே தன் காலில் விழுந்துவிடுவாளோ அன்றி குய்யோ முறையோ என்று அழுதுதீர்த்துவிடுவாளோ வென்று கடைசி வரையில் பயந்தேயிருந்தான்.

அவள் விடைபெற்றுப் போனதும், கிஷ்ஷூம் அதற்குப்பின் கோஸ்டியாவும் அங்கு வந்துசேர்ந்தார்கள். அன்று மாலை பியோடர் வந்தான். அவன் படிப்பு அறைக்குச் சென்று ஒரு புத்தகத்தைப் பிரித்து வைத்துக்கொண்டு படிப்பில் நாட்டங்கொள்ளாமலே உட்கார்ந்திருந்தான். தேநீர்

அருந்துவதையே மிக நீண்டநேர வேலையாக வைத்துக் கொண்டான். இதனை உணர்ந்த லப்தேவ் தன்னுடைய மனதில் ஏதோ பாராங்கல் தூக்கிவைக்கப்பட்டது மாதிரி ஒரு பளு இருப்பதாக உணர்ந்தான். பியோடரின் மௌனமே லப்தேவுக்கு கஷ்டத்தைக் கொடுத்தது.

"நான் ஒரு எழுத்தாளனாக ஆகிவிட்டேன். ரஷ்யநாடு அதற்காக என்னைப் பாராட்ட வேண்டும். நான் உன்னிடம் காண்பிப்பதற்காகவே எனது முதல் முயற்சியான "ரஷ்ய உள்ளம்" என்ற கட்டுரையைக் கொண்டுவந்திருக்கிறேன். படித்துப் பாரேன். படித்து உன் கருத்தைத் தெரிவி" என்று சொல்லி தன் பையில் வைத்திருந்த கையெழுத்துப் பிரதியை எடுத்து லப்தேவிடம் கொடுத்தான் பியோடர்.

கட்டுரை தற்பெருமை ரீதியில் வழவழாவென்று எழுதப்பட்டிருந்தது. அறிவு ஞானம் படைத்தவன் அதிமானுஷ்யத்தை நம்பக்கூடாதென்றும், ஆனால் அவனுடைய நம்பிக்கையினமையை பகிரங்கமாக வெளிப்படுத்துவது சிறந்த கடமையாகாதென்றும், பிறர் நம்பிக்கைக்கு யாரும் முட்டுக்கட்டையாக யிருக்கக்கூடாதென்றும், நம்பிக்கை ஒன்றே தான், லக்ஷியத்தையடைய சாத்தியமாகுமென்றும், அந்த உயரிய லக்ஷியமேதான் ஐரோப்பாவையும்—மனித வர்க்கத்தையும் உய்விக்க வேண்டுமென்றும் எழுதியிருந்தான்.

"ஐரோப்பா எதிலிருந்து காப்பாற்றப்பட வேண்டுமென்று சொல்லவில்லையே தாங்கள்" என்றான் லப்தேவ்.

"அது தானாகவே விளங்கக்கூடியது."

"எதுவுமே விளங்கவில்லையே" என்று சொல்லிக் கொண்டே அறையில் இங்குமங்கும் உலாவினான்.

"நான் அதை புத்தக அளவில் பிரசுரிக்க நினைக்கிறேன்."

"அது தங்கள் சம்பந்தமானது."

ஒரு நிமிஷம் மௌனம் நிலவியது. பியோடர் பெருமூச்சுவிட்டு "நாம் கருத்து வேற்றுமைகொள்வது மிக வருந்

தக்கூடிய விஷயம். நீயும், நானும் அசல் ரஷ்யர்கள். தனிப் பண்பாடுடையவர்கள், நாகரிகமுடையவர்கள். நாம் கௌரவமான நல்ல 'பனியா' குடும்பத்தில் பிறந்தவர்கள். பிறர் யூத ஜெர்மன் கலப்படக்காரர்கள். அவர்கள் ரத்தமே வேறு.

"என்ன கௌரவமான நல்ல குடும்பம் வந்திருக்கிறது" என்று தன் கோப உணர்ச்சியை அடக்கிக்கொண்டு "நல்ல குடும்பம். கௌரவமான குடும்பம். ஆம் நிலப்பிரபுக்கள் நம் பாட்டனுரை அடித்தார்கள். சிறிய சர்க்கார் வேலைக்காரன் கூட அவர் முகத்திற்கு எதிரே காரி உமிழ்ந்தான். நமது பாட்டனுர் நமது தந்தையையடித்தார். நமது தந்தையோ நம்மையடித்தார். என்ன குடும்பகௌரவம் நமக்கு வந்திருக்கிறது. நம்முடைய ரத்தத்தில் மட்டும் என்ன உயர்வு வந்து குதித்திருக்கிறதோ தெரியவில்லை. நீ இதுமாதிரி கடந்த மூன்று வருஷங்களாக பேத்திக்கொண்டிருக்கிருய். இப்பொழுது எழுதவும் ஆரம்பித்துவிட்டாய். பார்த்தாயா —நான்—நான்...எனக்கு எந்தத் துணிவுமில்லை. எதையும் செய்ய தயக்கமே ஏற்படுகிறது. என்னைவிட எல்லாவகையிலும் குறைவானவர்களைக் காணும்பொழுதுகூட நான் தயங்குகிறேன். நான் மடையர்களையும், அறிவிலிகளையும் கண்டு யோஜிக்கிறேன். போலீஸ்காரனையும், காவற்காரனையும் கண்டு கலங்குகிறேன். அத்தனைக்கும் காரணம் என்ன? நான் சிறுகுழந்தை முதலே அடித்து உதைத்து வளர்க்கப் பட்டவன். தாயாரோ பயந்தாங்கொள்ளியாக்கப்பட்டவள்... நம்மைப்போன்றவர்களுக்கு குழந்தைகளே இல்லாமற்போய் விட்டால் நல்லது. ஏ பரமண்டலபிதாவே! இதுபோன்ற கொடூரமான நல்ல 'பனியா' குடும்பம் எங்களோடேயே அழிந்துபோகட்டும்" என்ருன்.

யூலியா படிப்பறைக்குவந்து அங்கு மேஜையருகில் உட்கார்ந்து "நீங்கள் ஏதேனும் விவாதம் செய்துகொண்டிருக்கிறீர்களா என்ன? நான் ஏதேனும் தங்களுக்கு குறுக்கீடு செய்கிறேனு?" என்ருள்.

"இல்லை! இல்லை! நாங்கள் தத்துவ ரீதியில் பேசிக் கொண்டிருக்கிருேம்." என்று சொல்லி தன் சகோதரனைப்

பார்த்து "பார் நீ நமது குடும்பத்தையே அவமானப்படுத்து கிறாய். நமது குடும்பம் லக்ஷாதிபதியின் குடும்பம்" என்றான் பியோடர்.

"என்ன பெருமை வந்திருக்கிறது நமக்கு. பல லக்ஷத்தைச் சம்பாதித்திருக்கலாம். ஆம்... மூளை யேது. திறமை யேது. தகுதி யேது. ஏதோ சந்தர்ப்ப வசத்தால் தொழில் செய்ததில் பணம் குவிந்தது. பணம் சேர்ப்பதிலாவது குறிக்கோளுண்டா? வகை தகை உண்டா? முறை உண்டா? ஒருவன் வாழ்நாள் முழுதும், உட்கார்ந்து உட்கார்ந்து அங்குள்ள குமாஸ்தாக்களையும், வாடிக்கைக்காரர்களையும் ஏமாற்றிப் பிழைப்பதுதானே தொழில். வியாபாரி மற்றவனை அடக்கி ஆள விரும்புகிறான். வியாபாரிகள் தங்கள் குமாஸ்தாக்களைக் கூட படித்தவர்களாக வைத்துக் கொள்வதில்லை. யார் தங்களிடம் நிரந்தர அடிமைகளாக யிருப்பார்களோ அவர்களேதான் தங்களுக்குத் தகுதியானவர்களாக வைத்துக்கொள்வது. சர்வகலாசாலையில் படித்தவர்களாக உள்ளவர்களை வியாபாரிகள் ஏன் வேலைக்கு வைத்துக்கொள்ளக் கூடாது?"

"அவர்கள் இந்த வேலைக்கு லாயக்காக மாட்டார்கள்."

"அது உண்மையேயல்ல. சுத்தப்பொய்." என்றான் லப்தேவ்.

"நீ சொல்வது எதைப்போல் இருக்கிறது தெரியுமா? நீ எந்தக் கிணற்றிலிருந்து தண்ணீர் குடிக்கிறாயோ அதே கிணற்றில் எச்சல் துப்புவதைப்போல இருக்கிறது" என்றான். மீண்டும் "நமது தொழிலே உனக்கு இழிவாக இருக்கிறது. அப்படி இருந்தும் நீ அந்த தொழில் வருமானத்தை உபயோகப்படுத்திக்கொள்ள வெட்கப்படவில்லையே" என்றான்.

அவன் தன் சகோதரனை கோபப் பார்வையோடு பார்த்து "நான் அந்த பாழான குடும்பத்தில் பிறக்காமலிருந்தால் நான் எவ்வளவோ நன்றாயிருப்பேன். பிறவியின் காரணத்தால் நான் தைர்யமற்ற கோழையானேன். சரி

யென்று தெரிந்தும் துணிந்து செயலாற்றும் திறனில்லை. உங்கள் தொழில் ஸ்தாபனமே என் மனித இயல்பை – பண் பாட்டை நாசம்செய்துவிட்டது. நானும் உங்கள் தொழிலின் வார்ப்படந்தானே'' என்றான்.

பியோடர் கடிகாரத்தைப் பார்த்தவனாய், விரைந்து லப்தேவுக்கு வந்தனம் சொல்லி யூலியாவை கையில் முத்த மிட்டவனாய் அங்கிருந்து புறப்பட எத்தனித்தான்.

பியோடருக்கு ஏற்பட்ட குழப்பத்தால் படிப்பறையி லிருந்து – எப்பக்கமாகப் புகுந்து வெளிவருவது என்று தட்டுக்கெட்டுவிட்டது. அவன் திகைத்தவனாய் "வழி எப் பக்கமிருக்கிறது. எனக்கு ஏதோ களைப்பாக இருக்கிறது. குடிக்கக் கொஞ்சம் தண்ணீர் கொடுத்தால் நலம்''என்றான்.

லப்தேவுக்கு கடந்த மூன்றாண்டுகளாக மறைந்துகிடந்த சகோதர வாஞ்சை பரிதாபமான நிலையில் உதயமாயின. அவன் சாப்பாட்டு அறைக்கு விரைந்தோடி–அங்கு கிடந்த பீர் ஜாடியை எடுத்து அதில் தண்ணீரை நிரப்பிக்கொண்டு வந்து கொடுத்தான். பியோடர் தண்ணீரைக் குடித்த வேகத் தில் நாக்கை கடித்துக்கொண்டு – தண்ணீரால் சட்டையை யும் கோட்டையும் நனைத்துக்கொண்டவனாய் கண்ணீரை உதிர்க்கலானான். தன் சகோதரன் அழுவதைக்கண்ட லப் தேவுக்கு இன்னது செய்வதென்று தெரியாது தவித்தான். ஆனால் யூலியாவும் வேலைக்காரியும் அவனுடைய நனைந்த கோட்டையும் சட்டையையும் கழற்றி மெத்தையில் சற்று படுக்கவைத்தார்கள். அப்பொழுது யூலியா பியோடரிடம் "ஒன்றுமில்லை. கொஞ்சம் படபடப்பு. அதற்குக் காரணம் நரம்புக் கோளாறு'' என்று ஆறுதல் கூறினாள்.

"பெண்ணே! நான் எவ்வளவு துர்ப்பாக்கியமானவன். நிம்மதியற்றவன். சந்தோஷமற்றவன்... ஆனால் நான் இது வரை மறைத்து வைத்திருந்தேன்...'' என்று சொல்லி அவள் கழுத்தில் கையைப் போட்டவாறு மெதுவான குரலில் "ஒவ்வொரு நாள் இரவும், நான் எனது தங்கை நினைவைப் பார்க்கிறேன். அவள் வந்து எனது படுக்கையின் பக்கத்தில் உட்காருகிறாள்...''

ஒரு மணி நேரத்திற்குப் பின் அவன் தன்னுடைய கம்பளக் கோட்டை அணிந்து கொண்டான். அப்பொழுது வேலைக்காரியைப் பார்க்க அவனுக்கே வெட்கமாக இருந்தது. லப்தேவ் அவனை அவன் வீட்டிற்கு அழைத்துப்போனான். போகும்பொழுதே "நாளைப் பகல்உணவு அருந்த வீட்டிற்கு வரவும்" என்றுகூறி "நாம் ஈஸ்டரில் வெளிநாடு செல்வோம். அவசியம் தங்களுக்கு ஒரு மாறுதல் வேண்டும். இல்லா விட்டால் தாங்கள் பிணியால் பீடிக்கப்பட்டுவிடுவீர்கள்" என்றான்.

லப்தேவ் திரும்ப தன் வீடு வந்தடைந்ததும் தன் மனைவி நிலைகுலைந்து வியாதியுற்றவளைப் போலிருந்ததைக் கண்டான். பியோடரோடு நிகழ்ந்த நிகழ்ச்சிகள் அவளை நிலைகுலையச் செய்தது. அவள படுக்கையில் புரண்டு புரண்டு படுத்து கையையும் காலையும் உதறிக் கொண்டிருந்தாள். அவளுடைய கண்கள் பெரிதாக பயங்கரமானதாகியது.

"பிராணேசரே, தாஙகள் இங்கேயே இருங்கள். எழுந்து போய்விடாதீர்கள்" என்று கணவனைப் பற்றிக் கொண்டு சொல்லலானாள். "நான் ஏன் பிரார்த்தனைகள் செய்வதை நிறுத்திவிட்டேன். அலோஷா! சொல்லுங்கள். என்னுடைய நம்பிக்கையெல்லாம் எங்கே போயின? ஏன் மதத்தைப்பற்றி என்னிடம் பேசுகிறீர்கள்? நீங்கள் என்னுடைய நம்பிக்கையைத் தகர்த்தெறிந்து விட்டீர்கள். நீங்களும் உங்கள் சிநேகிதர்களும்தான் இதற்குக் காரணம்... நான் இப்பொழுதுதான் பிரார்த்தனை செய்வதில்லையே!" என்றாள்.

அவன் அவளை தேற்றிப்பார்த்தான். அவளுக்கு சூடாக தேநீர் கொடுத்தான். ஆனாலும் அவள் நிலைமை சரியாக வில்லை. கடைசியாக பொழுது விடியுந்தருவாயில் அவள் அயர்ந்து தூங்கலானாள். லப்தேவ் அவள் பக்கத்திலேயே கையைப் பற்றிக்கொண்டு உட்கார்ந்திருந்தான். அவனும் தூங்கவேயில்லை. அதற்கு மறுநாள் அவன் ஒன்றும் புரியாதவனாக, எந்தவித சிந்தனையையும் செய்ய சக்தியற்றவனாக இங்குமங்கும் உலாவிக்கொண்டிருந்தான்.

* * *

பியோடரின் மனோநிலை சரியில்லையென டாக்டர் கருதினார். லப்தேவுக்கு தன்னுடைய தந்தையின் வீடும், வியாபார நிலையமும் சுடுகாடுமாதிரி வெறுப்பையளித்தன. அவனுடைய மனைவி, அவனை தகப்பனார் வீட்டிற்கும், வியாபார நிலையத்திற்கும் தினசரி போய்வரவேண்டுமென வற்புறுத்தி கூறினாள். அவன் அதற்கு எவ்வித பதிலும் சொல்லவில்லை.

ஒரு ஞாயிற்றுக்கிழமை காலை யூலியாவே பாட்நிட்ஸ்கி தெருவிற்குப் போனாள். அங்கு கிழ பியோடர் ஆடாது அசையாது கண் பார்வையற்ற நிலையில் – முதல் தடவையாக தனக்கு வரவேற்பு நடந்த அந்த பெரிய அறையிலேயே இருக்கக் கண்டாள்.

"நான் தான் தங்கள் மருமகள் – தங்களைப் பார்க்க வந்திருக்கிறேன்" என்று அருகேநெருங்கி கிழ பியோடரிடம் சொன்னாள்.

அவர் பெருமூச்சுவிட்டு ஆச்சர்யப்பட்டார். அவளுக்கு அவரின் ஏசாந்தத்தில் ஒரு பரிவு எற்பட்டு அவரது கைகளில் முத்தமிட்டாள. அவரும் அவளுச்கு சிலுவைக் குறியிட்டு "வந்தனங்கள். நான் எதையும் பார்க்க சக்தியற்றவனாகிவிட்டேன். மனிதர்களைத் தெரிந்துகொள்ள முடியவில்லை. ஜன்னல் வெளிச்சம், நெருப்பு போன்றவைகள் ஏதோ தெரிகிறது. நான் கண்ணிழந்து மோசமாகிக்கொண்டு வருகிறேன். ஐயோ! பியோடர் உடல் நலமற்றிருக்கிறான். அவனுக்கென்ன ஜுரமா? சளியா? நான் ஒருதடவைகூட என் வாழ்க்கையிலே டாக்டர்களிடம் மருந்து சாப்பிட்டதில்லை... எதுவும் உடையவன் இல்லாவிட்டால் ஒரு முழங்கட்டை. இப்பொழுது எனக்கோ, வீடு போ போ, காடு வா வா என்று ஆகிவிட்டது. பியோடருக்கோ உடல்நிலை சரியில்லை. எல்லாம் எப்படியோ வீணாகப் போய்க்கொண்டிருக்கின்றன" என்று வழக்கமான தற்பெருமை ரீதியில் பேசினார்.

அப்பொழுது வேலையாட்கள் அவசர அவசரமாக உணவு பரிமாறினார்கள். மேஜைமீது மீன் உணவும், ஜாமும், கரியும்,

பத்து பாட்டில்கள் திராக்ஷ ரசமும் பரிமாறப்பட்டிருந்தது. வயோதிகர் அவளை உணவருந்தக் கோறினர். அதற்கு அவள் "மன்னியுங்கள். நான் நாளை வந்து சாபபிடுகிறேன்; வரும்போது தங்கள் பேரக் குழந்தைகளான சாஷாவையும், விடாவையும் உடன் அழைத்து வருகிறேன். அவர்களை விட்டுவிட்டு வந்தது என்னமோபோல் இருக்கின்றது" என்றாள்.

"ஓ! அவர்களை அழைத்து வந்துவிடாதே. அவர்கள் சட்டரீதியானவர்க்ளல்ல. அவர்கள் வேண்டவேவேண்டாம்" என்றான்.

"ஏன்? எப்படி சட்டரீதியானவர்களல்ல? அவர்கள் தாயும் தந்தையும் திருமணம் செய்துகொண்டவர்கள் தானே"

"என்னுடைய அனுமதி ஏது? நான் அவர்களை ஆசீர்வதிக்கவில்லையே. அவர்கள் வாடையே வேண்டாம்"

"நீங்கள் பேசுவது ரொம்ப ஆச்சர்யமாக யிருக்கிறது"

"குழந்தைகள் பெற்றோர்களை மதிக்கவேண்டும்—அவர்களுக்கு பயந்தும் நடக்கவேண்டும் என்று வேதாகம நூல் முறையிடவில்லையா?"

"அப்படி சொல்லியிருப்பதாக எனக்குத் தெரியவில்லையே. நாம் நம்முடைய விரோதிகளையும் மன்னிக்கவேண்டும் என்றல்லவா வேதாகம நூல் கூறுகிறது"

"வியாபார விஷயத்தில் மன்னிப்பதென்பது கிடையாது. ஒவவொருவரையும் மன்னித்துவிடுவதென வைத்துக் கொண்டால் நம்முடைய வியாபாரமே மூன்று வருஷத்தில் நிர்மூலமாகிவிடும்"

"ஒருவரை—என்—பாபியாக இருந்தாலும் மன்னித்து விடுவதென்பதும்; அன்புமொழி அவரிடம் பேசுவதென்பதும்—தொழில் முறையைவிட—செல்வ சம்பத்தைவிட மிக உயர்ந்ததாகும்" என்றாள்.

யூலியா, தன்னால் முடிந்த அளவு வயோதிகருக்கு

சமாதானம் சொல்லிக் குழந்தைள்மீது அன்பு ஏற்படச் செய்தாள்.

"மாமாவே! தாங்களோ நல்லகதிக்குப் போகவேண்டிய நிலைக்கு வந்துவிட்டீர்கள். ஆண்டவன் தங்களை, நீங்கள் எப்படி திறமையாக வியாபாரம் செய்தீர்கள், எவ்வளவு சொத்தைத் திரட்டினீர்கள் என்று கேட்கமாட்டார். ஆனால் நீங்கள் மற்றவர்களிடத்தில், ஏழை எளியவர்கள் – இயலாதவர்களிடத்தில், வேலைக்காரர்கள், ஊழியர்களிடத்தில் பெருந்தகையோடு நடந்துகொண்டீர்களாவென்றுதானே கேட்பார்" என்றாள்.

அதற்கு, "எனக்கு ஊழியம் செய்பவர்களை நான் ரட்சிக்கத்தான் செய்கிறேன். அவர்களை எனக்காகவும் ஆண்டவனிடம் பிரார்த்திக்கவும் செய்திருக்கிறேன்." என்று சொல்லி, யூலியாவின் வாதத்திற்கு ஓரளவு இணங்கி "நல்லது. நாளை எனது பேரக்குழந்தைகளைக் கொண்டுவா அவர்களுக்காக வெகுமதியாக நான் ஏதேனும் வாங்கி வைக்கிறேன்" என்றான்.

வயோதிகருடைய சட்டைமேலெல்லாம் சுருட்டு சாம்பல் தாராளமாகப் படிந்திருந்தது. சாப்பாட்டிற்கு விரிக்கப் பட்டிருந்த துணிகளோ ஒரே சோப்புவாடையடித்தது. உணவுவகைகளோ பாதி வெந்தும் வேகாததுமாக இருந்தது. வீடே மொத்தத்தில் ஒரு ஒழுங்குமுறையில்லாது காணப்பட்டது. வேலைக்காரர்களோ 'தடார்' 'புடார்' என்று ஆடம்பரப்படுத்திக்கொண்டிருந்தார்கள். இத்தனையும் கவனித்த யூலியா தன்னையும், தன் கணவனையும் நினைத்து வெட்கப்பட்டாள்.

அவள் வயோதிகரின் படுக்கை அறைக்குச்சென்று அங்கே எல்லாவற்றையும் சுத்தம்செய்யச் சொன்னாள். அங்கிருந்த தெய்வங்களுக்கு விளக்குப்போட ஏற்பாடுசெய்தாள். பியோடரின் படிப்பு அறையையும் பார்த்து அதனையும் சுத்தம்செய்ய உத்தரவிட்டாள். பின் வீட்டின் கீழ்த் தளத்திற்கு வந்து – அங்கு சாப்பாட்டிற்காக காத்துக்

கொண்டிருந்த குமாஸ்தாக்களைப் பார்த்தாள். அவர்கள் அதிகாரியைக்கண்ட குற்றவாளிகளைப்போல் பயந்து நின்றார்கள். அங்கு அடுப்புப் புகைச்சலும், கரி நாற்றமும் சூழ்ந்திருந்தன.

"நீங்களெல்லாம் வீணுக்குக் கூட்டம் போட்டுக்கொண்டிருக்கிறீர்கள். இந்த அறையெல்லாம் என்ன ஆபாசமாகயிருக்கிறது" என்றாள்.

"நாங்கள் கூடியிருக்கிறோமேதவிர எங்களுக்குக் குறையொன்றுமில்லை. நாங்கள் தங்களுக்கு மிகவும் கடமைப்பட்டுள்வோம். தங்களுக்காக ஆண்டவனைப் பிரார்த்திக்கிறோம்" என்றான் மாகிட்செவ்.

யூலியா அடுப்பங்கரையையும், வேலைக்காரர் விடுதியையும் பார்த்தாள். அவளுக்கு முற்றிலும் அதிர்ப்தியே யேற்பட்டது.

அவள் வீடு சென்றதும் தன் கணவனிடம் "நாம் தங்கள் தந்தையார் வீட்டிற்குக் குடிபோய்விடவேண்டும். நீங்களும் தினந்தோறும் வேலையை நேரில் போய் பார்க்க வேண்டும்"என்றாள்.

அவர்கள் இருவரும் படிப்பறையில் உட்கார்ந்திருந்தார்கள். மௌனம் நிலவியது. அவனுக்கு என்னமோ தன் தந்தையின் பாட்னிட்ஸ்கி தெரு வீட்டிற்குப் போகவோ, அன்றி அவனுடைய் தொழிலை கவனிக்கவோ மனமில்லை. ஆனால் அவன் மனைவி சொன்னதை மறுத்துக்கூறாது அவள் கன்னத்தைத் தட்டியவனாய் "நாம்... நமது வாழ்வின் பிற்பகுதியில் இருப்பதாக நினைக்கிறேன். எனது சகோதரன் பியோடர் அசௌகரியமுற்றான் என்றதுமே நான் சிறுவனாகவும் வாலிபனாகவும் அவனோடு சேர்ந்து கழித்த நாட்களும், நான் அப்பொழுது அவனை மனதார பெரிதும் விரும்பி அன்பு செலுத்திய நினைவு வந்ததும் அழுதேவிட்டேன். அவனைப்பிரிவது எனக்கு சகிக்கமுடியாத கஷ்டம்... அதோடு நீ அந்த பாட்னிட்ஸ்கி தெரு வீட்டிற்குப் போகச்

சொல்வது நிரந்தர காவற் சிறைக்குப் போகச்சொல்வதை யொக்கும். அதனுல் என் வருங்கால வாழ்வுக்கு வழியில்லே. இது எல்லாவற்றையும்விட மிகக் கஷ்டம்'' என்று சொல்லி அவ்விடத்தைவிட்டு அகன்று ஜன்னலே நோக்கி நடந்தவனுய் "எப்படியிருந்தபோதிலும் — சந்தோஷத்திற்கான எல்லா எண்ணங்களேயும் ஒருவன் விட்டேயாகவேண்டும்'' என்று சொல்லி மீண்டும் "எனக்கு யாரும் இல்லே...யாரும் இருந்த தில்லே. என்னுடைய வாழ்க்கையில் ஒரே ஒரு தடவை அதுவும் இரவு முழுதும் உன்னுடைய பொட்டணத்தை வைத்துக்கொண்டிருந்தபொழுது சந்தோஷமாக இருந்திருக்கிறேன். நீ எவ்வாறு நினைவண்டை உன்னுடைய பொட்டணத்தை வைத்துவிட்டுப் போனுய் என்று ஞாபகமிருக்கிறதா? நான் அப்பொழுது உன்னே காதலித்தேன். நான் அன்று இரவு முழுதும் உன்னுடைய பொட்டணத்தை வைத்துக்கொண்டே தூங்காமல் விழித்து பேரின்ப உலகில் சஞ்சரித்தேன்''என்ருன்.

அப்பொழுது புத்தக அலமாரியின் பக்கத்தில் அநேக உருப்படாத சாமான்கள் வைக்கப்பட்டுக் கிடந்த இடத்திலிருந்து ஒரு பொட்டணத்தை எடுத்து, "அது இதோ இருக்கிறது'' என்ருன் லப்தேவ்.

யூலியா ஒரு விடிையில் அப்பொட்டணத்தைப் புரிந்துகொண்டு வருத்தத்தோடு சிரித்தாள்.

"தாங்கள் என்னே விரும்பியபொழுது அந்தப் பொட்டணத்தை நீங்கள் கையில் மார்போடணேத்து வைத்திருந்தீர்கள். நீங்கள் புறப்பட எத்தனித்தபொழுது 'தயவுசெய்து முடிந்தால் சீக்கிரமே திரும்பி வாருங்கள். நீங்கள் இல்லாமல் எனக்கு அசடு தட்டுகிறது' என்று சொன்னது எனக்கு ஞாபகமிருக்கிறது'' என்ருள்.

பின் அவள் தன் அறைக்குச் சென்று அப்பொட்டணத்தை நீண்ட நேரம் கவனித்துக்கொண்டிருந்தாள்.

* * *

லப்தேவ்களின் தொழில் ஸ்தாபனத்தில், பெருமித வியாபாரம் நடந்துவந்தபோதிலும் அங்குள்ள கணக்குப் புத்தகங்களைக்கொண்டு சரியான விவரங்கள் தெரிந்து கொள்ள முடியாது. ஒவ்வொரு நாளும் ஜெர்மன், ஆங்கிலேய வியாபார ஏஜண்டுகள் வந்து போவதுண்டு. அங்குள்ள குமாஸ்தாக்கள் அவர்களோடு அரசியலைப் பற்றியும், மதத்தைப் பற்றியும் பேசுவார்கள். குடியால் கெட்ட ஒரு வயோதிகன், அடிக்கடி கடைக்கு வந்து அந்நிய மொழிகளின் கடிதங்களை மொழிபெயர்த்துக் கொடுத்துப் போவான். அவனைக் குமாஸ்தாக்கள் 'வாமனர்' என்றழைப்பார்கள். அவன் சாப்பிடும் தேயிலைப் பானத்தில் உப்பை அள்ளியும் போடுவார்கள். மொத்தத்தில் வியாபாரத் தொழிலே, லப்தேவுக்குப் பிடித்தமில்லாமலிருந்தது.

லப்தேவ் தொழில் நிலையத்திற்கு தினந்தோறும் வரத் தலைப்பட்டான். வியாபாரத்தை ஒழுங்குமுறைப் படுத்த விரும்பினான். வேலைக்காரப் பையன்களை அடிப்பதினின்றும் தடுத்து நிறுத்தினான்; வாடிக்கைக்காரர்களை பரிகசிப்பதைத் தடுத்தான்; வெளியிடங்களுக்குச் செல்லும் சரக்குகள் முன்போல் கெட்டதும் வீணானதுமானவற்றை புதியன போன்று அனுப்புவதை நிறுத்தினான். அவன் தற்போது தொழில் நிலையத்திற்கு முதல்வனாக இருந்தபோதிலும் தொழிலின் மூலதனமென்ன? நல்ல முறையில் நடைபெறுகிறதா? பெரிய குமாஸ்தாக்களுக்கு சம்பளமென்ன? ஆகிய விஷயங்கள் தெரியவாரது. போட்சாட்கின், மாகிட்செவ் ஆகியவர்கள் அவனை வாலிபனென்றும் அனுபவக்குறைவானவனென்றும் மதித்து முக்கிய விஷயங்களை அவனிடம் சொல்லாது அந்த கிழ தந்தையாரிடமே சொல்வதுண்டு.

ஒரு நாள் ஜூன் மாதத்தில் லப்தேவ் போட்சாட்கியோடு புட்நோவஸ்கி ஹோட்டலுக்கு போகநேரிட்டது. அப்பொழுது சாப்பாட்டுக்குப்பின் வியாபார விஷயமாகப் பேசினார்கள். போட்சாட்கின் லப்தேவ்களோடு எட்டுவருஷ பையனிலிருந்து வளர்ந்து வந்திருக்கிறான். மிக நீண்டகாலமாக வேலையில் இருப்பவன் அவன்தான். அவன் எல்லோ

ருடைய நம்பிக்கைக்கும் பாத்திரமானவனுக இருந்திருக்கிருன். அவன் வசமே பண்டசாலே சாவி, இருப்பு அத்தனையும் இஷ்டம்போல் இருந்தது. அவனே தொழிலுக்கும் வீட்டிற்கும் தலைமை நிர்வாகி 'சர்ச்சு'க்கும்கூட.

அவர்கள் ஹோட்டலுக்குச் சென்றதும் வயிருர உண வருந்தியதும் லப்தேவ் கீழ்வருமாறு வினவினுன்.

"கடந்த வருஷத்திலிருந்து நமது தொழில் குறைந்து கொண்டு வருகிறதென்று சொல்லப்படுகிறதே அது உண்மையா?"

"கொஞ்சமும் இல்லையே"

"நமக்கு உண்மையில் என்ன வருமானம் வருகிறது? என்ன லாபம் கிடைக்கிறது? என்று தெளிவாக உண்மையைச் சொல்லுங்கள். எதுவும் புரியாமல் தொடர்ந்துபோக எனக்கு விருப்பமில்லே. நாம் கடையை மூடுவதற்கு மிக அகாலமாகிறது. கணக்கு விவரமே ஒன்றும் தெரியாமல் இருக்கிறது. நான் ஏதோ சில விஷயத்தைத் தெரிந்துகொள்ளக்கூடாதென்று நினைத்து நீங்கள் என் தந்தையாரிடம் ரகசியம் பேசுகின்றீர்கள். நீங்கள் ஆரம்ப முதலே, மிக்க தந்திரமாக இருக்கிறீர்கள். அந்த தந்திரப் பழக்கமில்லாமல் எப்பொழுதும் இருக்கமுடியாது போலும்! அதனுல் யாருக்கு என்ன பயன்? இனியாவது தாங்கள் உண்மையாக — நேர்மையாக நம்முடைய நிலைமையை தெளிவுபடச்சொல்லுங்கள்"

ஒரு நிமிஷ யோசனைக்குப்பின் "அது எல்லாம் நமது கொடுக்கல் வாங்கலில் உள்ள ஏற்றத் தாழ்வுகளைப் பொருத்தது" என்ருன் போட்சாட்கின்.

"கொடுக்கல் வாங்கலில் உள்ள ஏற்றத்தாழ்வுகளென்ருல் என்ன?" என்று வினவினுன்.

போட்சாட்கின் ஏதோ விளக்கம் கூறிக்கொண்டு வந்தான். அவன் சொன்னது லப்தேவுக்கு எதுவுமே விளங்கவில்லே. ஆகவே மாகிட்சாவ் வரவழைக்கப்பட்டான். அவனும் முறையாகவந்து உணவருந்தி பயபக்தியோடு "குமாஸ்

தாக்களெல்லாம் ரட்சகராகிய தங்கள் நலனுக்கு இரவு பக லாக பிரார்த்திப்பதாகக்'' கூறினுன்.

"அது வேறு விஷயம். தயவுசெய்து உங்களை ரட்சகர்களாக நினைக்க என்னை அனுமதியுங்கள்'' என்றுன் லப்தேவ்.

"ஒவ்வொருவரும் தங்கள் தங்கள் நிலையை நன்கு உணர்ந்து நடந்துகொள்ளவேண்டும். ஆண்டவன் அருளால் நீங்கள் எங்களுக்கு தந்தையாவீர். ரட்சகராவீர். நாங்கள் உங்கள் உடமைகள், அடிமைகள் ''

"அதெல்லாம் வீண் வேதாந்தம்'' என்று ஆத்திரத் தோடு சொல்லி, மேலும் "தயவுசெய்து நீங்கள் இப்பொழுது எனக்கு ரட்சகர்களாக இருங்கள். நமது தொழிலின் நிலை யினைத் தெரிவியுங்கள். என்னை இன்னும் சிறுவன் என்று நினைத்துக் கொண்டிருப்பதை விட்டொழியுங்கள். அப்படி யில்லாவிட்டால் நானேயே வியாபாரத்தை மூடிவிடு வேன். எனது தகப்பனுர் அந்தகர். எனது சகோதரன் பைத்தியக்கார ஆஸ்பத்திரியில் இருக்கிறுர்ன். எனது சகோ தரியின் குழந்தைகள் சின்னஞ்சிறுவர்களாயிருக்கின்றனர். எனக்கோ வியாபாரமே பிடிக்கவில்லே. நான் அனைத்தையும் விட்டுத் தொலேய விரும்புகிறேன். ஆனுல் யார் இருந்து இதனைக் கவனிப்பது? இது தங்களுக்கு தெரிந்தவைதானே! தயவு செய்து நேரிடையாக விஷயத்தைச் சொல்லுங்கள்'' என்றுன்.

அவர்கள் அனைவரும் பண்டசாலைக்கு வந்தார்கள். அன்றும் மறுநாளும் கணக்குப் பார்த்தார்கள். வயோதிகர் ஏதோ மந்திர தந்திரம் பேசுவதுபோல் பேசினுரே தவிர வியாபார இரசியங்களைப் பேசியதாக யில்லை. வியாபாரத்தில் வருஷமொன்றுச்கு பத்து சதவிகிதம் லாபமாக தொழிலில் மூலதனம் ஏறுகிறதென்றும், தொழிலின் மூலதனம் செக் யூரிடிகளாகவும் காகித கணக்கு மூலமாகவும் அறுபதுலட்சம் ரூபிள்களென்றும் தெரியவந்தது.

இந்தக் கணக்கு விவகாரங்கள் தெரிந்துகொளவதற்கு

மூன்றும் நாள் இரவு ஒரு மணி ஆயிற்று. அதற்குமேல் லப்தேவ் திறந்தவெளிக்கு காற்று வாங்கச் சென்றான். அப் பொழுது அவன் மூளையில் இந்த கணக்கு விவகாரங்களே ஏறியிருந்தது. அன்று நிலவொளி வீசியது. ஆனால் காற்று இல்லை.

லப்தேவ் தோட்டத்திற்குச் சென்று வேலி ஓரமாகக் கிடந்த ஆசனத்தில் அமர்ந்தான். மலர்களின் வாசனை மனோரம்மியமாக இருந்தது. அங்கிருந்த செர்ரி மரங்கள், அவன் சிறு பிராயத்தில் கண்ட மாதிரியிலேயே மாறாத காட்சியோடு இருந்தன. அவனுக்கு அந்தத் தோட்டமே அவனுடைய நிலாக்கால சிறுபிராய நினைவுகளை நினைப்பூட்டி யது. வழக்கம்போல வேலையாட்களுடைய அறை, ஜன்னல் கதவுகள் மட்டும் திறந்துகிடந்தன. தோட்டத்தின் நடுவில் கருத்த நாய் படுத்து சுருண்டு கிடந்தது. இவைகளெல்லாம் இனிய நினைவுகளல்ல.

வேலியின் அடுத்தப்பக்கத்தில்—மிருதுவான காலடி சப்தம் கேட்டது.

"என் அன்பே! என் கனிரசமே!! தெவிட்டாத தேன் அமுதே!!! என்ற ஒரு வாலிபனின் இனியபேச்சுக் குரல் கேட்டது. அதுமட்டுமல்ல, அவனுடைய மூச்சையும் அவ னால் உணரமுடிந்தது. அவர்கள் கட்டியணைத்துமுத்தமிட்டுக் கொண்டார்கள்.

லக்ஷக் கணக்கான செல்வமும், தான் விரும்பாத தொழிலும் தன்னுடைய வாழ்க்கையையே நாசமாக்குவ தோடு தன்னையே அடிமைப்படுத்தி விடுமென்று லப்தேவ் அப்பொழுது வேதனையோடு உணர்ந்தான்.

தான் சிறுகச் சிறுக எப்படி அந்தத் தொழிலுக்குப் பக்குவப்பட்டு, பூரா எஜமானனாகி, வயோதிகனாகி பின் கேள்வி கேட்பாரற்று, தன்னைச்சுற்றி யுள்ளவர்களை அனாதா வாகவும், துயருருபவர்களாகவும் விட்டு விட்டு சாக நேரிடு மென்றுகருதினான். ஆனால் அப்படியிருந்தும், சிறுபிராய முதற்கொண்டே விரும்பாத, வேண்டாத செல்வத்தையும்;

தொழிலேயும்—பண்டசாலேயையும்; அந்தக் கட்டிடத்தையும் விட்டு வெளியேறுவதில் தயக்கமேனே!

வேலிக்கு மறுபக்கத்திலிருந்துவரும் குசு குசுப் பேச்சும், முத்தங்களும் அவனே நிலேகுலேயச்செய்தன. அவன் தோட்டத்தின் நடுவிற்கு வந்தான். சட்டைப் பித்தான்களே திறந்துவிட்டுக்கொண்டு, ஆகாய வீதியில் சஞ்சரித்தச் சந்திரனே கண்கொண்டு பார்த்தான். அப்பொழுது பண்டசாலேயின் கதவுகள் திறக்க உத்தரவு போடுவதாக நினேத்தான். அவனுக்கு ஓர் சுதந்திர இன்பம் தட்டியது. அவனுக்கு மகிழ்ச்சியும் ஏற்பட்டது. அதுமாதிரி வாழ்வு எவ்வளவோ ரம்மியமானதென்று நினேத்தான்....

அப்படியிருந்தும் அவன் தோட்டத்தின் நடுவில் நிலேயாக நின்றுகொண்டிருந்தான். "நான் ஏன் இங்கே இருக்கிறேன்" என்று அவனேயே கேட்டுக்கொண்டான். அவன் தன்மீது கோபப்பட்டுக்கொண்டான். அதுபோலவே அந்தக் கருப்பு நாய் மீதும் கோபப்பட்டான். ஏனெனில், அந்த நாய் தோட்டத்தின் நடுவிலே, தானே கட்டுண்டு படுத்திருப்பதைவிட, எவ்வளவோ சுதந்திரமாக வெளியில் சென்று ஓடியாடி இன்புற்று சுகித்திருக்கலாமே என்று நினேத்தான். அவைகளுக்கெல்லாம் காரணம், அதாவது தானும், அந்த நாயும் வெளியில் செல்லாமலிருப்பதற்கான காரணம், கண்டுண்ட பழக்கத்தின் காரணம், அடிமைத் தனத்தின் காரணம்...

மறுநாள் காலே லப்தேவ் தன் மனேவியைப்பார்க்கச் சென்றபொழுது யார்ட்சேவையும் கூப்பிட்டுச் சென்ருன். யூலியா அப்பொழுது புடோவிலிருந்த கோடை இல்லத்தில் தங்கியிருந்தாள். அவன் கடந்த ஐந்து தினங்களாகவே யூலியாவைப் பார்க்கவில்லே. அவர்கள் ஸ்டேஷனே விட்டிறங்கியதும் ஒரு வண்டியில் சவாரிசெய்தார்கள். வழிநெடுக யார்ட்சேவ் சீட்டியடித்துக்கொண்டும் ஆடிப்பாடிக்கொண்டும் குஷாலமாகப் போனுன். வீட்டின் முகப்பு தோட்டத்தின் முன் ஹாலிலேயே அவர்களுக்காக அவள் காத்துக்கொண்

டிருந்தாள். அவள் அழகிய வெண்மேகவர்ண ஆடை உடுத்திருந்தாள். அவள் கையில் அந்தப் பழைய பொட்டணமும் இருந்தது. யார்ட்சேவ் அவளுக்கு வந்தனமளித்துவிட்டு, சாஷாவும் லிடாவும் விளையாடிக்கொண்டிருந்த சப்தம் வந்த பக்கமாகப் போய்விட்டான். அப்பொழுது லப்தேவ் அவளருகில் வியாபார விஷயங்களைப்பற்றிப் பேச உட்கார்ந்தான்.

"ஏன் இவ்வளவு நாள் தங்கிவிட்டீர்கள்? தாங்கள் வந்துவிடுவீர்கள், வந்துவிடுவீர்களென்று நான் நாள் கணக்காக இங்கேயே உட்கார்ந்து எதிர்பார்த்தவண்ணமிருந்தேன். தாங்கள் இல்லாதபோது எனக்கு என்னமோபோல இருந்தது" என்றாள். அவள் பேசும்பொழுதே அவன்மீது கைகளைப்போட்டு மிக்க ஆர்வத்தோடு பேசினாள். பின்னும் அவள் எழுந்து, அவன் தலைகளைக்கோதி — முகத்தைத் தொட்டு, மிக்க விருப்போடு அவன் புஜங்களையும் கட்டிப் பிடித்தாள். "நான் தங்களை எவ்வளவு பிரியமாக விரும்புகிறேன்" என்றாள் மீண்டும். அவ்வாறு சொல்லும்பொழுதே அவள் முகம் நாணத்தால் சிவந்தது. "நீங்கள் பெறற்கரிய மாணிக்கம்; நீங்கள் என்னுடனிருப்பது எவ்வளவோ ஆனந்தத்தை அளிக்கிறது நீங்கள் ஏதாவது சொல்லுங்கள். நாம் பேசுவோம். சொல்லுங்கள்" என்றாள்.

அவள் அவனைக் காதலிப்பதாகச் சொல்லிவிட்டாள். அவனே அவளை ஏதோ பத்து வருஷங்களாக திருமணம் செய்துகொண்டவன்போல் உணர்ந்தான். அப்பொழுது அவனுக்கு வயிற்றுப் பசியே மிஞ்சியிருந்தது. அவள் அவன் கழுத்தை வளைத்து அணைத்து அவன் கன்னத்தில் முத்தமிட்டாள். அவன் சர்வ ஜாக்கிறதையாக அவள் கையை எடுத்து நீக்கி, எதுவும் பேசாமலேயே வீட்டினுள் நடந்தான். அப்பொழுது சிறு பெண் குழந்தைகள் மாமனைப் பார்க்க ஓடிவந்தன.

"எப்படி வளர்ந்துவிட்டார்கள்? இந்த மூன்று வருஷங்களில் எவ்வளவு மாறுதல்...ஆனால் ஒருவன் இன்னும் பதின்மூன்று வருஷங்கள் வாழவேண்டும். பின்னும் முப்

பது வருஷங்கள்... அதனால் வருங்கால வாழ்வு என்ன? ஆம் நாம் வாழ்ந்தால் நாம் அதனையும் பார்ப்போம்'' என்று சிந்தித்தான்.

அவன் கழுத்தைக் கட்டித்தொங்கிய சாஷாவையும், விடாவையும் கட்டி அணைத்து "தாத்தா தங்களுக்கு ஆசி சொல்லச் சொன்னார். மாமா பியோடர் ரொம்ப மோசமாகிக்கொண்டிருக்கிறார். கோஸ்டியா மாமா அமெரிக்காவிலிருந்து உங்களுக்கு ஆசி சொல்லச் சொல்லுகிறார். அவர் அமெரிக்க எக்ஸிபிஷனைப் பார்த்து அனுத்துவிட்டார். சீக்கிரமே திரும்பிவந்துவிடுவார். உங்கள் மாமா அலோஷா (லப்தே)வுக்கு பசிக்கிறது'' என்றான்.

அவன் தாழ்வாரத்தின்முன் உட்கார்ந்து எதிரே தன் மனைவி வருவதைப் பார்த்துக் கொண்டிருந்தான். அவள் அப்படியே ஏதோ எண்ணத்தில் மூழ்கியிருந்தாள். அவள் முகத்தில் வசீகரத் தோற்றத்தோடு வருத்தமும் இருந்தது. கண்களில் நீர் ததும்பியது. அவள் முன்போல் மெலிந்து நீண்டு இல்லாது இப்பொழுது அழகிய பெண் அணங்காகக் காட்சியளித்தாள். யார்ட்சேவ் அவளைப் பார்த்து அவன் அடைந்த மகிழ்ச்சியை, லப்தேவ் கண்டான். யார்ட்சேவ் ஏதோ முதல் தடவையாக அவளைப் பார்ப்பதுபோல் பூரித்துப் போயிருந்தான். அவர்கள் தாழ்வாரத்தில் சேர்ந்து உணவருந்தும்போது, ஏதோ நாணத்தோடு அவன் மகிழ்ச்சியைக் காட்டினான். இத்தனையையும் கண்ட லப்தேவ் தனக்கு முன்னால் இன்னும் பதின்மூன்று ஆண்டுகள்—பின்னும் முப்பது ஆண்டுகள் இருப்பதாக உணர்ந்தான்... அவன் அந்தக்காலங்களில் எதற்காக வாழக் கொடுத்து வைத்திருக்கிறோம். வருங்காலம் என்ன பயனையளிக்கும் என்று சிந்தித்தான்.

"நாம் வாழ்வோம். வாழ்ந்து பார்ப்போம்'' என்று எண்ணினான் லப்தேவ்.

●







## அடுத்த வெளியீடு!

# இன்ப வாழ்க்கை

எழுதியது

தோ. ந. வீரராகவன்.

*வாழ்க்கையின் பல கோணங்களை*

*பலதிக்குகளிலே நின்று*

*எழுதப்பட்ட சிறந்த சிறுகதைகள்.*